உ

சிவசுப்பிரமணியர்துணை.

# சிவதலமான்மியச் சுருக்கம்.

இஃது

முன் துரைத்தனபாடசாலை மேல்விசாரணை கர்த்தராயிருந்த

வித்வான் - நெல்வேலி

**முருகேசமுதலியார்**

பலபுராணமுதலிய ஆதாரங்களைக்கொண்டு இயற்றித்தந்ததை,

**சிவனடியாரும், ஏனையோரும்**

எளிதில் பல தலங்களின்வரலாறுதெரிந்துகொள்ளுமாறு

**ஸ்ரீ - காளமேகேஸா**

வேண்டுகோளால்

வித்வான் - திருமழிசை,

**சிவப்பிரகாச ஐயர் மாணாக்கர்**

பாரிவாக்கம்

**மாசிலாமணிமுதலியார்**

FIRST  EDITION.

சென்னை:

மனோன்மணிவிலாச அச்செக்கிரசாலையிற்

பதிப்பித்தனர்.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# சிவதலமான்மியச் சுருக்கம்.

இஃது
முன் துரைத்தனபாடசாலை மேல்விசாரணை கர்த்தராயிருந்த
வித்வான் - நெல்வேலி

**முருகேசமுதலியார்**

பலபுராணமுதலிய ஆதாரங்களைக்கொண்டு இயற்றித்தந்ததை,

**சிவனடியாரும், ஏனையோரும்**

எளிதில் பல தலங்களின்வரலாறுதெரிந்துகொள்ளுமாறு

**வா - காளமேகேஸர்**

வேண்டுகோளால்

வித்வான் - திருமழிசை

**சிவப்பிரகாச ஐயர் மாணாக்கர்**

பாரிவாக்கம்

**மாசிலாமணிமுதலியார்**

FIRST EDITION.




சென்னை :
மனோன்மணிவிலாச அச்செந்திரசாலையிற்
பதிப்பித்தனர்.


1894.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# முகவுரை.

ஒவ்வொருதலத்தின் மான்மியம், அங்கந்த தலபுராணத்தில் சொல்லியிருக்கின்றது. அது, யாரோ ஒருவரிடத்தில் அகப்பட்டு புதைபட்டு, மறைந்திருத்தலால், சகலருக்கும் வாசித்தறியப் புலப் படாதிருக்கின்றது. இதை சிலகாலத்துக்குமுன்னுணர்ந்த சின்னத் தம்பி பிள்ளை யென்பவர் "சிவக்ஷேத்திரமான் மியசங்கிரகம்" எனும் ஒரு புத்தகத்தில் சிலசில சிவதலங்களைமாத்திரம் ௰௩-வருடங்களுக்கு முன் அச்சிட்டு வெளியிட்டிருந்தனர்; அதுவும் இப்போது கிடைக் கக்கூடுமானதல்ல. ஆதலால், பல இஷ்டர்களும், சிவநேசர்களும், ஆங்காங்குள்ள தீர்த்தம், மூர்த்தி, தலங்களும், அததன் காரணங்க ளும், தெரிந்துகொள்ள ஆவலுடன்கேட்டுக்கொண்டமையால், யான் அதற்கிசைந்து "சிவக்ஷேத்திரமான்மியம்" "சிவக்ஷேத்திரவிளக் கம்" முதலிய சிலபுத்தகங்களையும், என்னிடத்திருந்த ௨௱-தலமா ன்மியங்களையும் ஒன்றாய்ச்சேர்த்துச் சங்கிரகித்து "சிவதலமான் மியச் சுருக்கம்" என வெளியிட்டனன். இன்னும் அந்தந்த ஜில்லாக் களில் இதில் சேராத அனேக தலங்களிருந்தும், அவற்றிலுள்ள சுவாமி பெயர் முதலியவும், சரித்திரங்களும், சரிவரப் புலப்படாமை யால் விடுக்கப்பட்டன; இவற்றைத்தெரிந்தவர்களும், இவற்றின் தல புராணங்களை யுடைத்தாயிருக்கிறவர்களும், தயவுசெய்து எனக்குத் தெரிவித்தனுப்பினல், வந்தனத்துடன் பெற்று அவற்றையும்சேர்த்து இரண்டாம் முறையிலச்சிடப்படும். நெ. மு. மு.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

## விளம்பரம்.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# சிவதலமான்மியச்சுருக்க அட்டவணை.

சிவதலமான்மியச்சுருக்க அட்டவணை

முற்றிற்று.

---

சிவசுப்ரமணியர் துணை.

உ

சுப்பிரமண்ணியர் துணை

ஆரியநேயர்களே ?

இப்புத்தகத்துக் கடைசியில்-கசுக-பக்கத்தில்

"முன் சுப்பிரமணிய க்ஷேத்திரங்களாயிருந்ததலங்கள்"

என்னுந் தலைப்பின் கீழ், திருப்பதி, சோலைமலை யென்கிற தலங்களின் வரலாறுகள் கூறியிருக்கின்றன. இவை யிப்போது விஷ்ணுதலங்களா யிருப்பதைப்பற்றி, இவற்றை சிவதலங்களுடன் சேர்த்தெழுதாமல் பிரத்தியேகித்து விவரித் தெழுதியிருக்கின்றனம். இவற்றைக்குறித்து சைவர்கள் வைஷ்ணவர்கள் ஆகிய இருசமையத்தர் சொல்லுங் கொள்கைகளையும் பகுத்துச் சொல்லியிருக்கின்றனம். இங்ஙனம் கல்பபேதத்தாலும், யுகபேதத்தாலும், அர்சாட்சி பேதத்தாலும், கோவில்களும், அவற்றிலுள்ள மூர்த்திகளும், தீர்த்தங்களும், வேறுவேறு நாமங்களையும் கோலங்களையும் பெற்று வழங்கிவருவது இத்தேசத்துக்குச் சகசமாயிருக்கின்றது.

"பழையன கழிதலும் புதியனபுகுதலும்
வழுவலகால வகையினானே."

என்று மேலோர் சொல்லிய இலக்கணச் சூத்திரத்தை இக்குறிதற்கும் உபயோகப்படுத்தக் கூடுமானதா யிருக்கின்றது.

நெ. மு. மு.

இப்போதச்சிட்டு முடிவுபெற்றிருக்கும் புத்தகங்களாவன :—

| | | | |
|---|---|---|---|
| யாழ்ப்பாணத் தகராதியென்று வழங்கும் போகராதி. | ௫ | ௮ | 0 |
| பாலகாண்டமூலமும் உரையும் - - - | ௫ | ௮ | 0 |
| அடங்கன் முறை (மூவர்) - - - - | ௫ | ௮ | 0 |
| சுப்பிரமணியபண்டிதர் ஜீவரக்ஷாமிர்தம் (வைத்தியம்) | ௫ | ௮ | 0 |
| பெரியபுராணம் (செய்யுள்) - - - | ௫ | ௮ | 0 |
| திருவிளையாடற்புராணம் (செய்யுள்) - - | ௨ | 0 | 0 |
| வமலராமாயணமென்னும் ஞானவாசிட்ட வசனம் - | ௧ | ௮ | 0 |
| சிவதலமான்மியச் சுருக்கம் - - - | 0 | ௧௨ | 0 |
| கந்தபுராணச் சுருக்கம். - - - - | 0 | ௧0 | 0 |
| விஷ்ணுதலமான்மியச் சுருக்கம் - - - | 0 | ௮ | 0 |
| காளத்திபுராணம் - - - - - | 0 | ௮ | 0 |
| திருத்தணிகைத்தலபுராணம் (தமிழ்) - | 0 | ௨ | 0 |
| ஷை (தெலுங்கு) - - - | 0 | ௨ | 0 |
| அஷ்டோத்திரம். - - - - | 0 | ௧ | 0 |
| புசண்டர் உபநிடதம் (௫௨) - - - | 0 | 0 | ௬ |

இவைகளை தக்க வித்வான்களைக்கொண்டு பிழையறப் பரிசோதித்து நன்கு மதிக்கத்தகுந்த கடிதத்தில் அச்சிட்டிருப்பதுடன் இன்னம் சில கிரந்தங்களும் அச்சிட்டு முடிவுபெற்றிருக்கின்றன. வேண்டுபவர்கள் சென்னை, சீரங்கப்பட்டினம் சுப்பிரமணியமுதலியார் வீதி ௨௮-வது கெ. வீட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மனோன்மணிவிலாச அச்சுக்கூடத் தலைவரிடத்திலும், சிதம்பரம், மேல்கோபுரவீதி, மண்டபத்தில் வைத்திருக்கும் புத்தகஷாப்பிலும் பெற்றுக் கொள்ளலாம்.

☞ கோ- லோகநாதமுதலியார்.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# சிவதலமான்மியச் சுருக்கம்.

அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

கணபதி சரணம் போற்றிக் கந்தனுங் குருப ரன்ற
னிணையடி தொழுது கயிலை யீசன்றாள் வணங்கி நாரா
யணன்பதஞ் சென்னி மேற்கொண் டயன்கழ லகத்தி ருத்தி
மணமிகு சிவத லத்து மான்மிய முரைக்க லுற்றும்.

## சத்தி.

ஒப்புவமை யுயர்வில்லா வொருதனியா
மொளியாகித் தன்னை யன்றி
எப்பொருட்கு மெவ்விடத்து மெப்பொழுது
மெத்தொழிலு மில்லை யாகிச்
செப்பிடுவல் லமையாவுந் தன்வயம
தாக்கியே சிறந்தி லங்கு
மைப்படியுங் கண்ணுளை மனத்தகத்து
ளேயிருத்தி வணக்கஞ் செய்வாம்.

## அவையடக்கம்.

சீருலவு தாரணிக்குத் திருவிளக்காய்
நின்றிலங்கும் சிவ தலத்தி
னேரிலகு சரிதையைப்பல் லிடத்தினின்றுஞ்
சேகரித்துத் திரட்டி யொன்றாய்
பாரினோர் யாவருமே படித்துணர
வசனமதாய்ப் பரிந்து ரைத்தேன்
கூறிஞ ருறுபிழைபா ராட்டாது
குணத்தைக்கைக் கொள்வர் மாதோ.

## சத்தவிடங்கத்தலங்கள்.

நேரிசை வெண்பா.

சத்தவிடங் கத்தலங்கள் சாற்றுங்கால் நள்ளாறு
கத்தனு ரூர்வாய்மூர் காறாயில் - நத்து
நாகைக்கா ரோணமுடன் நாடுதிருக் கோளிலியும்
ஏகை மறைக்காடா மிசை.

## சத்தவிடங்கத் தலங்களின் வரலாறு.

திருமால், புத்திரப்பேறு வேண்டிச் சிவபூசைசெய்த பொழுது, சிவபெருமான் தேவியாரோடும் பிரசன்னராகிப் புத்திரனுக் கிரகஞ் செய்தருளத் திருமால் உமையம்மையாரை வழிபடாத நிமித்தம், அவரப்பிள்ளை சிவபெருமானாலே இறக்கக்கடவதெனச் சபித்து மறைந்தருள, விஷ்ணுமூர்த்தி, சுவாமி, அம்மை, ஸ்கந்தராகியசோமாஸ்கந்த வடிவமசெய்து அதனைசநாள்பூசிப்ப, சிவனுமுமையு மெதிர் தோன்றி, முன்னருளிச்செய்தபிள்ளை யிறப்பினும் இறவா துயிர்த்தெழுந்து சகல உயிர்களிடத்தும் அரசாட்சிசெய்ய,வரமருளிமறைந்த பின்னர்த் தாம்பூசித்த சுவாமியைத் தம்மார்பே தொட்டிலாகவைத்து திருப்பாற்கடலிற் பூசித்துச் சயனித்திருந்தபொழுது, அவ்விஷ்ணுவினிடத்துத் தேவேந்திரன்சென்று, அச்சோமாஸ்கந்த மூர்த்தியைத் தரப்பெற்றுப் பூசித்து வருங்கால், வலாசுரன் யுத்தத்தில் துணை செய்த முசுகுந்த சக்கரவர்த்தி, சிவபிரானிசைவு கொண்டு அந்தச் சோமாஸ்கந்த மூர்த்தியைத் தரும்படிகேட்ப, இந்திரன் தரலாற்றுதவனுய்த் திருமா லிசைவு வேண்டுமெனக்கூற, அவ்வனுமதியும் பெற்றமையுணர்ந்த இந்திரன், பின்னும் தெய்வக்கம்மியனால், அச்சோமாஸ்கந்த மூர்த்தியைபபோல் ஆறு மூர்த்திகளைச்செய்துகொடுத்தும், அவற்றை முசுகுந்தசக்கரவர்த்தி ஆறு தலத்தின்கண்ணும் பிரதிஷ்டைசெய்த பின்னர் கடைசியாகத் திருமால்பூசித்த தியாகரையே வேண்டிப்பெற்றுத் திருவாரூரின்கண் பிரதிஷ்டைசெய்து பூசித்தனன். அங்ஙனமாகிய ஏழுதலங்களும் சத்தவிடங்கத்தலமெனப்படும்.

---

## அட்டவீரட்டத்தலங்கள்.

கலிவிருத்தம்.

கண்டியூர் பறியலூர் கடலூர் விற்குடி
அண்டர்க்கு மெட்டா வதிகை குறுக்கை
பண்டையோர் புகழும் பழுவூர் கோவலூர்
விண்புகழ் தருமட்ட வீரட் டானமே.

பரமசிவன் வீரத்தைக் காட்டியருளிய தலங்கள் எட்டின் வரலாறு;— திருக்கண்டியூரில் பிரமதேவன் சிரத்தைக் கொய்தது; திருப்பறியலூரில் தக்கன்முடியைத்தடிந்தது; திருக்கடவூரில் யமனை யுதைத்தது; திருவிற்குடியில்சலந்தரன்தலையறுத்தது;திருவதிகையில் திரிபுரத்தை யெரித்தது; திருக்குறுக்கையில் மன்மதனைத் தகனஞ் செய்தது; திருப்பழுவூரில் யானையை யுரித்தது; திருக்கோவலூரில் அந்தகாசுரனைத் தகித்தது.

அந்தந்நாட்டில்பாடல்பெற்ற

## சிவத்தலங்களின் தொகை.

எண்சீர்க்கழி னெடில்.

வடபதியி லேந்துதொண்டை நாடெண் ணான்கு
மகதமிரு பானிரண்டாஞ் சோழ நாட்டு
வடகரையி லறுபான்மூன் றாகுந் தென்பால்
வளர்தலங்க ளொருநூற்றி னிருபா னேழே
இடமுள்ள வீழநா டிரண்டாம் பாண்டி
ஈரேழு கோங்குநா டேஈரே ழாகும்
இடமலைநா டொன்றேநற் றுளுவொன் றாகும்
சேர்ந்ததல மிருசதத்தி னெழுபா னான்கே.

---

பதிகம்பெற்றதலக்கோவை.

எண்சீர்க்கழி னெடில்.

வடபதியிற் பாடல்பெற்ற தலத்தின் பேரை
வழுத்திடவே கைலாய மனேகதங்கா பதமும்
அடவிசூ ழிந்த்ரநீல பருப்பதங்கே தாரம்
அனுதிதிருப் பருப்பதமென் றுரைந்தே யாகும்
இடமிகுதொண் டைநாட்டி லெண்ணான்காந் தலங்கள்
ஏகம்பம் மேற்றளியோ டோணகாந்தன் றளியும்
இடமனேக தங்கா வதங்காரைக் காடு
திருக்குரங்க ணின்முட்டம் மாகறலோத் தூரே. (௧)

பணங்காட்டூர் திருவல்லம் திருமாற்பே றூறல்
பாடிலம்பை யங்கோட்டூர் விற்கோலங் கள்ளில்
வணஞ்சூழா லங்காடு பாசூர்வெண் பாக்கம்
வலிதாயம் வடமுல்லை வாயில்வேற் காடு
இனமன்பர் போற்றுதிரு வொற்றியூர் மயிலை
திருவான்மி யூர்திருக்கச் சூராலக் கோயில்
அனமளித்த விடைச்சுரமுந் திருக்கழுக் குன்றமொடும்
அச்சிறுபாக் கந்திருவக் கரையரசி லியே. (௨)

திருவிரும்பை மாகாளம் முகரிசூழ் கயிலை
தேரின்முப் பானிரண்டே நடுநாடா மகதப்
பெருநாட்டிற் றிருவண்ணா மலைதிருவா மாத்தூர்
பேசரிய பனங்காட்டூர் திரு[illegible] சுரமே

திருப்பாதி ரிப்புலியூர் திருமாணிக் குழியே
திருவடுகூர் திருத்துறையூர் திருவெண்ணெய் நல்லூர்
திருவிடையா றறையணிநல் லூர்கோவ லூருந்
திருநெல்வெண் ணெய்முதுகுன் றெழினுவ லூரே. (௩)

தேடரிய திருவதிகை திருக்கச்சோ புரமும்
தினைநகரா லயத்தொளிரு மெருக்கத்தம் புலியூர்
கூடலையாற் றூர்சிறந்த தூங்கானை மாடம்
குறைதீர்க்கு நெல்வாயி லெனவிருபா னிரண்டாம்
வாடலிலா நீர்நா டிங்கிருவகைகா விரிக்கு
வடகரைதென் கரையவற்றுள் வடகரையின் தலங்கள்
வீடளிக்குங் கோயில்திரு வேட்களநெல் வாயில்
விமலர்கழிப் பாலைநல்லூர்ப் பெருமணந் தானுமே. (௪)

திருமயேந் திரப்பள்ளி தென்முல்லை வாயல்
திருக்கலிக்கா மூர்சோலை சூழ்திருச்சாய்க் காடு
திருப்பல்ல வனீச்சுரம் வெண் காடுகாட்டுப் பள்ளி
திருக்குருகா வூர்வேணு புரந்திருக்கோ லக்கா
திருப்புள்ளி ருக்குவே ளூர்கண்ணார் கோயில்
திருக்கடை முடிநின்ற வூர்புன்கூர் நீடூர்
திருவன்னி யூர்வேள்வி குடியெதிர்கொள் பாடி
திருமணஞ்சே ரிக்குறுக்கை கருப்பறிய லூரே. (௫)

குரக்குக்கா வாழப்பூர் மண்ணிபடிக் கரையே
கோதிலோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர்
பரகதிசேர் நாரையூர் கடம்பூர்கர கோயில்
பந்தணைநல் லூர்கஞ்ச னூர்திருக்கோ டிக்கா
சிரமாமங் கலக்குடிப னந்தாளாய்ப் பாடி
சேய்ஞலூர் திருந்துதேவன் குடிவியலூர் தேவர்
பரவுகொட்டை யூரின்னம்பர் புன்னைபுறம் பயமே
பாரிலுயர் விசயமங்கை வைகாவூ ராமே. (௬)

ஆசிபொழி வடகுரங் காடுதுறை பழனம்
ஐயாறு நெய்த்தான மானபெரும் புலியூர்
பூசனைசெய் மழபாடி திருப்பழூவூர் கானூர்
புகழ்பெற்ற அன்பிலா லந்துறைமாந் துறையே
பாசவினை யொழித்திடும்பாற் றுறைத்திருவா னைக்கா
பைஞ்ஞீலி திருப்பாச்சி லாச்சிரா மம்மே
மாசகற்றி வீடருளீய்ங் கோய்மலையி னோடு
வடகரையி லேதலங்க ளறுபான்மூன் றாமே. (௭)

காவிரிக்குத் தென்கரையிற் றலந்திருவாட் போக்கி
கடம்பந்துறை பராய்த்துறைகற் குடிமூக்கீச் சுரமும்
தேவர்புகழ் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே
திருநெடுங்க ளம்மேலைத் திருக்காட்டுப் பள்ளி
சோவிலகா லம்பொழில்பூந் துருத்திகண்டி யூரே
சோற்றுத்துறை வேதிகுடி திட்டைபுள்ள மங்கை
தூவிலாச்சக் கரப்பள்ளி கருகாவூர் பாலைத்
துறைநல்லூர் திருவாவூர் சத்திமுற்றந் தானே. (அ)

கூறுபட்டீச் சுரமும்வட தாளிவலஞ் சுழியே
குடமூக்குக் குடந்தைக்கீழ் கோட்டமுங்கா ரோணம்
தேறுநா கேச்சுரமுந் திகழுமிடை மருதூர்
தென்குறங் காடுதுறை திருநீலக் குடியும்
வீறுவை கன்மாடக் கோயில் திருநல்லம்
விளங்குகோ ழம்பமா வடுதுறைது ருத்தி
யீறிலா வழுந்தூரு மயிலாடு துறையே
இளநகர் பறியலூர் திருச்செம்பொன் பள்ளி. (கூ)

நனிபள்ளி வலம்புரந்த லைச்சங்கா டாக்கூர்
நல்லகட வூர்வீரட் டானமயா னம்மே
அனைவேட்டக் குடிதெளிச்சே ரித்தரும புரநள்
ளாறுகோட் டாறம்பர் பெருந்திருக்கோ யில்லே
வினைதபுமா காளம்மீ யச்சூரிளங் கோயில்
வீறுதில தைப்பதி பாம்புரமொர்சிறு குடியே
பிணைவீழி மிழலைவன்னி யூர்கருவி லியும்
பேணுபெருந் துறைநறையூர் சித்தீச்ச ரம்மே. (ய)

அரிசிற்க ரைப்புத்தூர் திருச்சிவபு ரமுமே
ஆங்கலய நல்லூர்க ருக்குடிவாஞ் சியமே
துரியநன் னிலத்துப் பெருங்கோயில் கொண்டீச்
சுரம்பனையூர் விற்குடிவீ ரட்டானம் புகலூர்
பருவர்த்த மானீசு ரமிராமன ச் சுரமே
பயற்றூர்செங் காட்டங்குடி திருமருக லாமே
கரைசேர்க்கும் சாத்தமங்கை யயவந்தி நாகைக்
காரோணஞ் சிக்கல்கீழ் வேளூர்தே வூரே. (யக)

பள்ளியின்மூக் கூடலா ரூர்மூலட் டானம்
பகரரிய வறநெறியும் பரவையுண்மண் டளியே
கள்ளமிலா விளம்பர்கர வீரம்பெரு வேளூர்
கடிதலையா லங்காடு குடவாயில் சேறை

உள்ளுநா லூர்மயானங் கடுவாய்க்கரைப் புத்தூர்
உயரிரும்பூ ளையரதைப் பெரும்பாழி லேயம்
விள்ளுமவ ளிவணல்லூர் திருப்பருதி நியமம்
வெண்ணியூர் பூவனூர் பாதாளேச் சுரமே. (௰௨)

களர்சிற்றே மமுசாத்தா னம்இடும்பா வனமும்
கடிக்குளந்தண் டலைநீணெறி கோட்டூர் வெண்டுறையே
தெளிகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு
தெங்கூர்நெல் லிக்காநாட் டியத்தான்குடி தானே
வளஞ்சூழ்கா றாயில்கன் றாப்பூர்வலி வலமும்
வாழ்கைச்சின் னங்கோளிலி வாய்மூர் மறைக்காடு
களங்கமிலா அகத்தியான் பள்ளிகோடிக் குழகர்
காவிரிதென் கரைத்தலநூற் றிருபத்தே ழாமே. (௰௩)

சீலமுள ஈழநாட் டுத்தலங்க ளுணாக்கில்
திருக்கொண மலைதிருக்கே தீச்சரமென் றிரண்டே
ஆலவாய் திருப்புத்தூர் திருக்கொடுங்குன் றம்மே
ஆனவே டகம்பரங் கிரிவாப்ப னூரும்
கோலமுள பூவணங்கா னப்பேர்வா டானை
கூறுபுன வாயில்திரு விராமேச்சு ரம்மே
பாலிக்கும் சுழியல்நெல் வேலியுங்குற் றாலம்
பாண்டிநாட் டிற்றலங்கள் பதினாலாம் பாரே. (௰௪)

கொங்குநாட் டில்வெஞ்ச மாக்கூடல் கருவூர்
கொடுமுடிசெங் குன்றூர்ந் ணாமு ருகன் பூண்டி
மாங்குயில்மி ழற்றுகொளி புத்தூரிவ் வேழும்
வயங்குபதி கம்பெற்ற திருத்தலங்க ளாமே
ஓங்குமலைநாட்டில்தலம் வஞ்சைக்கள மொன்றும்
உயர்துளுவ நாட்டில்கோ கரணமென்ப தொன்றே
நீங்கிலா ஒன்பதுநாட் டிற்பதிகம் பெற்று
திகழ்தலங்கள் இருநூற்றி னெழுபானான் காமே. (௰௫)

---

உ

சிவமயம்.



திருச்சிற்றம்பலம்.

# சிவதலமான்மியச் சுருக்கம்.

## வடபதி.

க. திருக்கயிலாயம், * வெள்ளியங்கிரி,கொடித்தான்மலை,திருமலை, எனப் பலநாமங்களுள்ளது.

(கயிலாயநாதேஸ்வரர், பார்வதியம்மை, மகாசிவதீர்த்தம்.)

சிவபெருமான், என்னம்மையே? வாவென்றருளிச்செய்யப்பெற்ற காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டைமணிமாலை, இவைகளைத் துதித்துக்கொண்டு தலையால் நடந்தடைந்ததலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகளுடன் எழுந்தருளிய சேரமான்பெருமாணயனார் ஞானவுலாப்பாடி அரங்கேற்றியதலம்.

இதில் சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டு மான், மழு, சதுர்புஜ, காளகண்ட, திரிநேத்திர, சடாதர, கங்காதர, சந்திரசேகர, பஸ்ம, ருத்ராட்சதரராய், உலக மாதாவாகிய உமாதேவியாரோடு தருமசொரூபமாகிய இரிஷபவாகனரூடராய்த் தமதருட்சத்தியாற் திருமேனி கொண்டெழுந்தருளி, விஷ்ணு பிரமன் இந்திராதி பிரமதகணங்கள் சேவிப்பக் கையில் வேத்திரக்

* இக்குறியிட்ட தலங்கள் சமயாசாரியர்களால் பாடல்பெற்றவை.

கோல் தாங்கிய நந்தி யெம்பெருமானாற் காக்கப்பட்ட திருவோலக்கம் பெற்றதலம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் கால்பாட்டளவுந் தேயச் சென்றும் காணப்பெறாது மீண்டருளித் திருவையாற்றிலே காணப்பெற்ற தலம்; சனகசனந்தன, சனந்தன, சனற்குமாரருக்கு ஞானோபதேசஞ் செய்தருளிய தலம் அகஸ்திய முனிவருக்கு இயற்றமிழையுரைத் தருளிப் பொதிகைமலைக்கனுப்பிய தலம். இதன் பலசிறப்பை விரிவஞ்சி விடப்பட்டது.

சைவசமயாசாரியர்களாகிய திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகளாகிய இம் மூவர்களால் திருப்பதிகம் சாற்றப்பெற்றுள்ளது. இவர்கள் திருவாய் மலர்ந்தருளியவற்றுள் இக்காலத்துள்ள திருப்பதிகங்கள், எ.

உ. * திருவநேகதங்காபதம்.

(அருண்மன்னேச்சுரர், மனோன்மணியம்மை, காவததீர்த்தம்.)

சூரியசந்திரர்கள் பூசித்ததலம்; திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம், க.

ங. * திருஇந்திரநீலபருப்பதம்.

(நீலாசலநாதேச்சுரர், நீலாம்பிகையம்மை, இந்திரதீர்த்தம்.)

இந்திரன்பூசித்ததலம். பாண்டுமைந்தர்களில் அருச்சுனன் பூசித்துப் பாசுபதம் பெற்றதலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம், க.

ச. * திருக்கேதாரம்.

[திருக்கேதாரேச்சுரர், கேதாரகௌரியம்மை, வெகு சீதளமான நாரதகுண்ட தீர்த்தம்.]

கன்னிமாசத் தமாவாசை முதல் மீனமாசத்தமாவாசை வரையுந் தேவர்கள்பூசிப்பதும், மற்றஆறுமாதங்களிலும் மானிடர்கள்பூசிப்பதுமுள்ள தலம் திருஞானசம்பந்த சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள், உ

ரு * திருப்பருப்பதம். (மல்லிகார்ச்சுனம், ஸ்ரீசைலம்)

(பருப்பதேச்சுரர், பருப்பதமங்கையம்மை, பருப்பததீர்த்தம்.)

திருநந்திதேவர் பூசித்ததலம், நினைத்தது நினைத்த வண்ணம் அநுக்கிரகிக்கும் தலம்; சமயாசாரியர்கள் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது; திருப்பதிகங்கள், ங.

சு. * காசி.

(விஸ்வநாதேச்சுரர், விசாலாட்சியம்மை, கங்காநதிதீர்த்தம்.)

உமாதேவியாரது திருக்கைவிரலிற்பிறந்த அந்தக்கங்கா நதித்து

றைக்கு மணிகர்ணிகை என்றுபெயர். விஷ்ணுவுக்கு பரத்துவங்கூறிய வியாசர் அசத்தியங் கூறினமைபற்றி நந்தியெம்பெருமானாற் கையும் நாவும் எழாமற் றண்டிக்கப் பெற்றதலம். கலியுகத்தில் பிரத்தியட்சமாய் அருள் கொடுக்குந் தலம். இறப்போர் காதில், சிவபெருமான்தாரகோபதேசஞ் செய்து முத்தி கொடுக்குந் தலம். மகாபுராணங்களால் மோட்சத்தலங்கள் ஏழு என்று விதந்து கூறிபவற்றுள் ஒன்றாகிய உயர்ந்த தலம். இதில் எண்ணிறந்த சிவாலயங்கள் உள்ளன. காலவைரவராற் காக்கப்படும் தலம். இதற்கு மூவராசிரியர் தனித்திருப்பதிக மில்லையாயினும் பதினெண்புராணங்களும் உபபுராணங்களும் பலவாறு புகழ்ந்து துதிக்குந்தலம். இதில் முத்தியடைந்த தேவமானுடராதி சீவர்களை இவ்வளவினவெனக்கூறுதல் அசாத்தியம்.

எ. மகாநந்தி.

[நந்தீச்சுரர், பார்வதிதேவி, திருக்குளதீர்த்தம்.]

இது இத்தலத்தி லிருக்கும் நவநந்திகளில் ஒன்று. நந்திதேவர் பூசித்ததலம். இத்திருக்குளதீர்த்தம் எந்தகாலத்திலும் வெந்நீர்போலச்சுடுகையா யிருக்கின்றது. இங்குவசித்து இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, இதை உண்போருக்கு அசாத்திய ரோகங்களெல்லாம் போகின்றன.

வடபதி முற்றிற்று.

---

இதில் திருப்பதிகம்பெற்றதலம் ரு, வைப்புத்தலம் உ, ஆக எ.

---

## தொண்டைநாடு.

க. * திருவேகம்பம்,—காஞ்சீபுரம், காமகோடிபீடம்.

[ஏகாம்பரநாதேச்சுரர், காமாட்சியம்மை, கம்பாநதிதீர்த்தம்.]

சித்திதீர்த்தம்முதலிய பலதீர்த்தங்களுள்ளது, இதுமுத்திதலங்கள் ஏழினிலொன்று, வேதங்களேமாவிருட்சமாகக் கம்பாநதிக்கரையிலிருக்கப்பெற்றது. பன்னிருதிரு நாமமுள்ள தலம்.

இவ்வாலயத்துள் நல்லகம்பம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், திருமயானம், வாலீச்சுரம் என்னும் பஞ்சப்பிரமதலங்கள் சிறந்திருக்கின்றன. அவற்றுள் வெள்ளக்கம்பம் பிரமாபூசித்தது. கள்ளக்கம்பம் விஷ்ணுபூசித்தது. நல்லகம்பம் உருத்திரன் பூசித்தது. திருமயானம் வண்டாசுரன் பிரமா வரப்பிரசாதத்தால் உயிர்கடோறும் விரவிநின்று வீரியமுண்டமைபற்றி, மெலிந்ததேவர்கள் வேண்டுகோளால் சிவபெருமான் உயிர்களை யாககுண்டத் தவியாக்கி வண்டாசுரனைச்

சம்ஹரித்து உலகரக்ஷணைபுரிந்தது. வாலீச்சுரம்வாலிபூசித்து எதிர்த் தவர்வலியிற்பாதி தானடையவரம்பெற்றது. இவைகளன்றியும் திருக் கச்சபாலேயம், காரோணம், பணாதரீச்சுரம், சுரகரீசரம், பராசரீசம், வீரட்டகாசம், மாணீச்சுரம்,உருத்திரகோடி,மகாசாத்தன்றளி,இவை களும், திருக்கச்சிநெறிக்காரைக்காடு, திருவேகம்பம், திருக்கச்சி மேற்றளி, திருவநேகதங்காவதம், திருவோணகாந்தன்றளி முதலியன வும், பிறவும் திருவேகம்பத்திற் சேர்ந்தவைகள். இவைகளுள் ஈற்றிற் குறித்த ஐந்துதலங்கட்கு தனித்திருப்பதிகங்க ளிருக்கின்றன.

இக்காஞ்சீபுரமானது தொண்டை நாட்டுள் முதன்மைபெற்ற தலம். இது வெகுகாலம் பிரபலமான இராஜதானியாயிருந்தது. உமா தேவியார் ஏகம்பநாதனை மிருத்திகையாற் ருபித்துப்பூசிப்ப, அவரது அன்பு சோதிப்பான்பொருட்டு எம்பெருமான்கம்பாநதியைப்பெருக விப்பவும், அம்மையார் அன்புமேலீட்டினாற் றழுவிக்கொள்ளச் சிவ பெருமான் மனமுருகி அம்மையாரது முலைத்தழும்பும் வளைத்தழு ம்பும் பெற்றதலம்.

உமாதேவியார் இருநாழிநெற்கொண்டு முப்பத்திரண்டறமும் வளர்த்தருளிய தலம். அங்கு அம்மையாருக்குக் காமக்கோட்டமென் கிறஆலயமும், குமாரக்கடவுளுக்குக்குமாரக்கோட்டமென்கிற ஆலய மும், பிறதேவர்களுக்குப்பல ஆலயங்களுமுள்ளன. இது ௱௯ - சிவா லயமுள்ளதலம்.

இந்தத்தலத்தில் அதிசயத்தையும் விநோதத்தையும்
உண்டாக்கும் விஷயங்கள் அநேகம் உண்டு ; அவற்றுள்
சிலவற்றின்விவரம் ;—

" ௯-**சிங்காசனங்கள்** :— இவற்றுள் ஒவ்வொன்றையடைந்தோர் " நான்கு வேதங்களிலும் நிபுணராகி, முறையே சூரியன், பிரம " தேவன், ஸ்ரீமகாவிஷ்ணு, சாம்பமூர்த்தி யிவர்களைத்தரிசிக்க " அருகராகி பின்புசாயுச்சிய மடைகின்றனர்."

" ரு-**வேதிகைகள்** :— பூர்வபுண்ணியமிருந்துமனிதர் இவற்றுட் " பிரவேசித்தமாத்திரத்தில்முறையே சர்வாபரணதி அலங்கிரு " தராதல்;தேவேந்திரபோகமுதலியவனுபவித்தல்;விருத்தாப்பி " யர்பாலியராதல் ; ஊமைகள்சகலகலாவல்லவராதல் ; அழகில் " மிகுந்தவராதல் ஆகியவற்றைப்பெற்று முடிவில் சாயுச்சிய " மடைகின்றனர்."

" ரு-**விருட்சங்கள்** ;— சதாகால மமிர்தஞ் சொரிகின்ற மாமரம், " பூவில்லாமல் காய்க்கிற புளியமரம், தங்கசொரூபமான அதசி " மரம், இவற்றின்பலனை யனுபவிப்பவர் காயசித்தி யடைகி

"ன்றனர்; நிழலில்லாதபொன்மரம், விருட்சமுழுவதும் புட்ப "மாகவேயிருக்கும் இலுப்பைமரம், இவற்றின் ஸ்பரிசம்பட "தேககாந்தியுண்டாம்."

"சா-பட்சிகள்:—தன்தொனியினலாகாயத்திலிருந்து மேகங்களை "வரவழைக்கும்மயில் ஒன்று; வேதாந்தக் கியானமுடையதாகி "கோவிந்த சப்தத்தை ஸ்மரிக்கும் ரிஷிகள்கூட்டத்திற்சேர்ந்து "வாசம் செய்கின்ற பச்சைக்கிளியொன்று; சோதிடசாத்திரத் "திற்றேர்ந்த மைனபட்சி யொன்று; சர்வக்கியானமுள்ளதும் "சாதுஜனங்களுக்குப் பிரீதியுடையதுமாகிய புறா ஒன்று; "சர்வசங்கீத கியானமுள்ளதும், அனேக வர்னமுள்ளதுமாகிய "கோருவங்கபட்சிஒன்று; சர்வாபீஷ்டங்களையுங் கொடுத்து "வரும் சக்கரவாளப்பட்சி ஒன்று."

"அ-சரசுகள்:— இவற்றில்முழுகினோருக்கு முறையேபொன்நிறக் "காந்தி, நவரத்தினக்காந்தி, அபீஷ்டசித்தி, சிரேஷ்டவிருத்தி, "மோட்சவிருத்தி, ஞானவிருத்தி, பாபநிவர்த்தி, வியாதிநிவர்த் "தியைத்தருகின்றன."

"அ-தடாகங்கள்:—இவற்றில் முழுகினவருக்கு ஒன்றினல்பகற் "காலத்தில் சந்திரதரிசனமும்; மற்றொன்றினல் இராக்காலத் "தில் சூரியதரிசனமும்; மற்றொன்றினல் உதயத்தில் தங்கநிற "மாயும், மத்தியானத்தில் வெள்ளிநிறமாயும், சாயங்காலத்தில் "சிகப்புநிறமாயும் பிரகாசிக்கும் மூன்றுகாம்புகளையுடைய ஒரு "தாமரைப்புட்ப தரிசனமும்; மற்றொன்றினல் குரங்குமுக "மும்; மற்றொன்றினல் பாபமிகுதியாதலும்; மற்றொன்றால் "சிநேகசைசத்துருக்களாக்கலும்; மற்றொன்றால் புண்ணியவா "ன்களாக்கலும்; மற்றொன்றால் சத்துருக்களைச் சிநேகராக்க "லும் கிடைக்கும்."

"கூ-சித்தலிங்கங்கள்:— இவை ஒவ்வொன்றும் ஸ்பரிசமாத்திர "ததில் சர்வ உலோகங்களையும் தங்கமாக்கும்."

"கூ - ஆராமங்கள்:—இவ்வொன்பது புட்ப தோட்டங்களிலும் "சதா நவரத்தினங்கள் பொழிந்திருக்கும்."

"கூ-சிலாவிக்கிரகங்கள்:— இவ்வொன்பது இலிங்கங்களைத்தரி "சிப்பவர்களுக்கு முறையே தேவர்களாதலும், விஷபாதையில் "லாமையும், சர்வசித்துகளுமுண்டாதலும், மரணமில்லாமை "யும், போகவிவகாரங்களை மறுத்தலும், பாபபுண்ணியமில்லா "த நடுநிலையுண்டாதலும், உடைந்த என்பை ஒன்றாகப் பொ "ருந்துவைக்கிற திறமையும், தேகம் இரண்டு மூன்று துண்டு

" களாய் வெட்டுப்பட்டு வேருனலும், அவற்றைக் கூட்டிவை
" க்கும் சக்தியும், ஆத்மகியானமும், கிடைக்கும்."

" க0-ஸ்தானங்கள் :— இந்தத்தானங்களை யடைந்தவர்க்குடனே
" தபசித்தியடைந்து நினைத்தமாத்திரத்தில் அனேககோடிபிது
" ர்க்களைப்பார்த்தலும், அனேகஜன்ம மாதாக்களைத்தரிசித்த
" லு மனேககோடி மனைவிகளையும், புருடர்களையும், குமாரர்க
" ளையும், குமாரத்திகளையும், சோதரர்களையும், தரிசித்தலும்,
" தேவசம்பாஷணைகளைக் கேட்டலும், தேவலோகத்து துந்து
" பிமுதலியநாதகீதங்களைக் கேட்டலும், முயலுக்கு யானையை
" துரத்தும்படியான வல்லமை யுண்டாதலும், பாதாள லோக
" த்தார்சம்பாஷணைகளைக்கேட்டலும், எண்ணெய்யில்லாது வி
" ளக்கு பிரகாசித்தலும், தெய்வலோகத்தரிசனங்கிடைத்தலும்,
" திக்குப்பிரமை யுண்டாதலும் ஆகிய இவைபிராப்தியாகும்."

" க0 - சபை :—இவற்றை யடைந்தோர்க்குமுறையே பாபங்களை
" விருத்தியாக்கலும், ஊமைகளாதலும், விஞ்ஞைதிருட்டில் கி
" யானமுண்டாதலும், சகலவித்தைகளிலும் திறமையுண்டாத
" லும், கோரினரூபத்தைக் கொடுத்தலும், அமிர்தத்தைப்பொ
" ழிதலும், நாகலோகத்தையடையச் செய்தலும், அட்டதிக்கு
" களிலுமுள்ளவர்கண்டு மோகிக்கும்படி செய்தலும், சொர்ன
" நவரத்தினங்களைச் சொரிதலும், இரவும்பகலும் விபரீதபிர
" மைகளைக் கொடுத்தலும் ஆகிய இவைகளுண்டாகும்."

" கஉ - கிணறுகள் :—இவை தயிர், பால், நெய், கருப்பஞ்சாறு,
" தேன், முதலியவற்ருல் நிறைக்கப்பட்டுத்தரிசித்தவாளுக்குத்
" தேககாந்தி, தேகதிடம், தேகசித்தியாவற்றையுங்கொடுக்கும்"

மேற்சொன்னவையன்றி இன்னுமனேக விசித்திர விஷயங்கள் இருக்கின்றன.

இவை மூன்றுயுகங்களில் எல்லோருக்கு மகப்பட்டு, இக்கலியுகத்தில் பயிரவமூர்த்தியாக் கினைக்குள்ளிருந்து சிலபுண்ணியவான்களுக்கே காணப்பட்டு வருகின்றன.

சுந்தரமூர்த்திசுவாமிகள் "வாழ்ந்துபோதிரோ" என்று திருப்பதிகம்பாடி ஒருகண் பெற்றதலம்.

(திருக்குறிப்புத்தொண்டநாயனர்) ஏகாலியர்குலத்தில் சித்திரை மாத அநுடத்திற் றிருவவதாரஞ்செய்தருளி, அவரியற்பேர்க்கேற்ப அடியார்குறிப்பறிந்து வஸ்திர மொலித்துக்கொடுக்குந் திருப்பணிவிடைசெய்து அடியார்வேடங்கொண் டெழுந்தருளிய சிவபெருமானது வஸ்திரம் மழையா லுலராதிருந்தமைபற்றிக் கற்பாறையிற் றலை

மோதும்படி அன்பு சோதிக்கப்பெற்றுச் சித்திரைமாதச் சுவாதியில் முத்தியடைந்ததலம்.

(ஐயடிகள் காடவர்கோன்நாயனர்) அரசர்மரபில் தைமாதச் சுவாதியிற் திருவவதாரஞ்செய்தருளி அவ்வரசுவிடுத்துத் திருப்பணிவிடைசெய்தும், "க்ஷேத்திரவெண்பா" அருளிச்செய்தும், ஐப்பசிமாத மூலத்திற் சிவபதஞ்சேர்ந்ததலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-கஉ.

—இதற்கு மேற்கு ஒரு மைலில்,

## உ. * திருக்கச்சி மேற்றளி. ¶

[கச்சியப்பேச்சுரர், காமாட்சியம்மை, விஷ்ணுதீர்த்தம், புரசவிருட்சம்.]

மகாவிஷ்ணு சிவசாரூபம் பெறும்பொருட்டுத் தவஞ்செய்து சிவாஞ்ஞைப்படி, திருஞானசமபந்தசுவாமிகள் காலத்தில், திருப்பதிகத்தால் சிவசாரூபம்பெற்றதலம். திருநாவுக்கரசுசுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிளாற் பதிகம்பெற்றுள்ளது, திருப்பதிகங்கள்-உ.

—இதற்கு வடக்கு ஒருமைலில்,

## ௩. * திருக்கச்சி ஓணகாந்தன்றளி. ¶

[ஓணகாந்தேச்சுரர், காமாட்சியம்மை, விஷ்ணுதீர்த்தம்.]

தேவர்களும், ஓணன், காந்தனென்னு மசுரர்களும்பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பொற்காசளித்ததலம்: ஷைசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு கால்மைலில்,

## ௪. * திருக்கச்சி அனேகதங்காவதம். ¶

[அனேகபேசேச்சுரர், காமாட்சியம்மை, காயிதாயதீர்த்தம்.]

கணபதியும், குபேரனும் பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு ௩-மைலில்,

## ரு. * திருக்கச்சிநெறிக் காரைக்காடு.

[சத்தியவரதநாதேச்சுரர், காரார்குழலியம்மை, சத்தியதீர்த்தம்.]

இந்திரன்பூசித்துப் பேறுபெற்றதலம். காரைவன மிருத்தலினற் இன்றுங்காரைக்காடெனப் பெயர்வழங்குகின்றது. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு உ-மைலில்,

---

¶ இக்குறியிட்டவைகள் காஞ்சீபுரத்துள்ளன.

சா. * திருக்குரங்கணின்முட்டம்.

[வாலீச்சுரர், இறையார்வளையம்மை, வாலிதீர்த்தம்.]

வாலி, அணில், காக்கை, பூசித்துப் பேறுபெற்றதலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு எ-மைலில்,

எ. * திருமாகறல்.

[அடைக்கலங்காத்தேச்சுரர், புவனநாயகியம்மை, அடைக்கலதீர்த்தம்.]

தேவேந்திரன் பூசித்ததலம். கடகனென்னும் அசுரன்போர்க் காற்றாத இந்திரன் பூசிப்ப, ஞண்டுவளையினின்றும் பிரஸன்னராகி யநுக்கிரகித்ததலம் இன்றும் உடும்பு தழுவிக்கொண்டிருக்கின்றது. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு ௰உ-மைலில்,

அ. * திருவோத்தூர்,—அனகாவூர்.

[வேதநாதேச்சுரர், இளமுலையம்மை, வேததீர்த்தம்.]

ஓர்காலத்து வேதப்பொருளுணராது மயங்கும் முனிவருக்குந் தேவர்களுக்கும் சிவபெருமான் பொருள் விரித்தருளியதலம் சூரியன் பூசித்து ரதசத்தமிதினம் ஒருசக்கரமுள்ள ரதம் பெற்ற தலம். குமாரசுவாமிபூசித்துத் தரையில்கீறினுல்ஜலமுண்டாகும் வேலாயுதம் அடைந்ததலம். விஷ்ணு பூசித்து பிருகு மகாரிஷியினு லுண்டான சாபம் போக்கியதலம். கல்லியாண மகாமுனி சாபத்தால் இலட்சுமிக்குண்டானபெண் மானுருவம் போக்கியதலம். சிவனடியாரி லொருவரா லுண்டுபண்ணும பனைகளியாவும் ஆண்பனையா யிருக்கக்கண்ட சமணமதஸ்தர்கள், அவ்வடியவரைக் கொடிறுகூறுவதைக்குறித்து, அக்காலத் தெழுந்தருளிய திருஞானசம்பந்த சுவாமிகளோடு முறையிட, அவர் திருப் பதிகம் பாடி அவ் வாண்பனைகளைப் பெண்பனைகளாகச் செய்த அதிசயத்தைப் பார்த்த அப்புறச்சமயிகள், சைவசமயம் புக்குப் பேறுபெற்றதலம். திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடக்கு க-மைலில்,

கூ. * திருப்பனங்காட்டூர்,—வனம்பாத்தான் பனங்காட்டூர்.

[பனங்காட்டேச்சுரர், அமிர்தவல்லியம்மை, அமிர்ததீர்த்தம்.]

கண்ணுவமகாரிஷி நிவேதிக்கும் பொருள்கிடையாது, தமதுகையிற் கிடைத்த பனம்பழத்தை நிவேதிக்கச் சிவபெருமான் 'முன்னேன்றி யநுக்கிரகித்தமைப்பற்றி, இக்காலத்தும் பனங்கனி நிவேதிக்கப்படுந்தலம். சந்நிதியில் இரண்டு பனைவிருட்சங்க ளிருக்கின்றன. சம்பந்ததீர்தம், அப்பர்தீர்த்தம், சுந்தரதீர்த்தங்க ளிருக்கின்றன. இதற்குத்தெற்கு ஒருமைலில்வன்பாக்கமெனும் ஊர் இருக்கின்றது;

இதில் (சுவாமி) இராமசாமீசுரர், (அம்மன்) பஞ்சின்மெல்லடியம்மை, அம்மார்க்கத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளி வந்தபோது சிவபெருமான் பிராமணவேடம் பூண்டுவந்துகொடுத்த கட்டமுதைப் புசித்தவுடன் பிராமணரைநோக்கி எவ்வூரென்றுகேட்க அவன்பார்க்கத்துக்கும் பனங்காட்டூருக்குமாக இருப்போமென்றுசொல்லி மறைந்தருளினர். உடனே இதுவுஞ் சிவபெருமானுடையலெனத் தேர்ந்து திருப்பதிகம் பாடியருளினர். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடக்கு ௩ம-மைலில்,

## கO. * திருவல்லம்.

[வல்லநாதேச்சுரர், வல்லாம்பிகையம்மை,
சிவகங்கைதீர்த்தம், கவுரிதீர்த்தம்.]

நவக்கிரகங்களும், வல்லாளனென்னு மரசனும், பூசித்ததலம். சீதாபிராட்டியார் தகப்பனராகிய ஜனகராஜன், கௌரிதீர்த்தத்தில் மூழ்கிக் கரையேறுங்காலத்திற் பக்ஷிக்கவந்த கஞ்சனென்னுமரக்கனை நந்திதேவரால் சங்காரஞ்செய்வித்து அம் மகாராஜனுக்குக் காக்ஷி கொடுத்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்கிழக்கு ௩ம-மைலில்,

## கக. * திருமாற்பேறு.

[மால்வணங்கீச்சுரர், கருணைநாயகியம்மை, விஷ்ணுதீர்த்தம்.]

கும்பனென்னு மரசன்பொருட்டுத் ததீசிமுனிவரோடுபொருது சச்கரமிழந்ததிருமால், வேறுசக்கரம் பெறும்பொருட்டுப் பூசித்துப் பேறுபெற்றதலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-சு.

—இதற்கு வடகிழக்கு எ-மைலில்,

## கஉ. * திருவூறல்,—தக்கோலம்.

[உமாபதீச்சுரர், உமையம்மை, பார்வதிதீர்த்தம்.]

உமாதேவி பூசித்த தலம். இத்தலத்தின் திருநந்திதேவரதுவாயினின்றும் நீரூறிக்கொண்டிருக்கும் மகிமையா லப்பேர்பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு எ-மைலில்,

## கஙு. * திரு இலம்பையங்கோட்டூர்.

[சந்திரசேகரேச்சுரர், காடேக்குமுலையம்மை, சந்திரதீர்த்தம்.]

சந்திரன் பூசித்ததலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடகிழக்கு உ-மைலில்,

## கச. * திருவிற்கோலம்,—கூவம்.

[திரிபுரசுந்தரேச்சுரர், தீண்டாத்திருமேனி, புராந்தகியம்மை, கூவதீர்த்தம்.]

இந்தச்சிவலிங்கப் பெருமானுக்குதீர்க்கசடாநிர்த்தன், சர்த்தாருணன், நிவாரதன், தேவநாயகன், நீலகண்டன,கோதண்டா அலங்கிருதேச்சுரர், அசேஷபுவனேச்சுரர், கூபரேஸ்வரர், இரட்சகர், தியாகராஜர், கிளாணிக்னர், ஜகத்பிரபு, எனபன்னிரண்டுதிருநாமங்களுமுண்டு.

திரிபுரதகனஞ் செய்தபின்பேரில் தேவர்களியாவரு மொருங்குகூடிப் பூசித்ததலம். சிவசத்தி பூசித்ததலம். இத்தலத்தின் வடக்கு ஒருமைலில் விருத்தக்ஷீரநதி உத்தரவாகினியாக வருமிடத்தில் ஒருதிடரில் உத்தேசம் அரைக்காணிநிலம்மணலாக இருக்கின்றது; அதிலூற்றுண்டாக்கி நான்குகாலத்திலும் திருமஞ்சனங் கொண்டுவந்து, புனிதத்துடன் சிவலிங்கப் பெருமானுருக்கு அபிஷேகஞ் செய்கின்றனர். இத்தீர்த்தத்தை அசுசியாகநெருங்கினவரை இக்காலத்தும் அரவம் சீறிவருகின்றது. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம பெற்றுள்ளது. திருப்பதிகம், க —இதற்கு வடமேற்கு ௰உ-மைலில்,

## கரு. * திருக்கள்ளில்,—திருக்கள்ளம்.

(சிவானந்தேச்சுரர், ஆனந்தவல்லியம்மை, திருநந்திதீர்த்தம்.)

பிருகுரிஷி பூசிக்கத் தக்ஷணாமூர்த்தி சுவரூபமாகத் தரிசனந் தந்தருளியதலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடமேற்கு ௰-மைலில்,

## கசா. * திருவாலங்காடு.—பழையனூர்.

[ஊர்த்ததாண்டவேச்சுரர், இரத்தினசபை, வண்டார்குழலம்மை, முத்திதீர்த்தம், பலாவிருக்ஷம்.]

தேவேந்திரன், ஆதிசேடன், சுனந்தர்முதலியோர் பூசித்ததலம். காளியுடன் நிருத்தவாதஞ்செய்த சிவபொருமான் ஊர்த்த தாண்டவத்தால் வென்றருளிய தலம். காரைக்காலம்மையார் என்றும் பிரியாது திருநடனந் தரிசித்திருக்குந் தலம். இந்தத்தலத்தில் நிர்மாலிய தோஷமில்லை. வேளாளர்கள் செட்டி பழிக்காகத் தீய்ப்பாய்ந்து புகழ்பெற்றதலம். சமயாசாரியர் மூவராலும் பதிபம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள், ச. —இதற்குக் கிழக்கு-எ-மைலில்,

## கஎ. * திருப்பாசூர்.

[பாசூர்நாதேச்சுரர், பசுபதிநாயகியம்மை, சோழதீர்த்தம்,]

வியாசரிஷி பூசித்ததலம். மூங்கிலடியில் முளைத்தருளிய சிவலிங்கப் பெருமானைத் தொழுதசோழராசனுக்காகச் சிவபெருமான்பாம்

பாட்டி சொரூபமாகவந்து தரிசனங்கொடுத்ததலம். சந்திரனும் அங்காரகனும்பூசித்துப் பேறுபெற்றதலம். திருஞான சம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள், ௩.
—இதற்கு வடக்கு ௩-மைலில்,

கஅ * திருவெண்பாக்கம்,—திருவிளம்பூர்.

[வெண்பாக்கேச்சுரர், கனிவாய்மொழியம்மை, வெண்பாக்கதீர்த்தம்.]

சதாநந்தரிஷி பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சங்கிலிநாச்சியாருக்குத் திருவாக்கருளியது தப்பினமையால், கண்களிழக்கப்பெற்று வருந்தி யிங்குற்றுத்திருப்பதிகம்பாடச் சிவபெருமான்சிறிதிரங்கி ஊன்றுகோல் கொடுத்தருளியதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.—இதற்குக்கிழக்கு உஉ-மைலில்,

கசு. * திருவலிதாயம்,—பாடி.

[திருவலிதாயநாதேச்சுரர், தாயம்மை, அநுமதீர்த்தம்.]

பிரகஸ்பதி, அநுமன் இவர்கள் பூசித்ததலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.
—இதற்கு வடமேற்கு ரு-மைலில்,

உ0 * திருவடமுல்லைவாயில்.

[பாசுபதேச்சுரர், மாசிலாமணீச்சுரர், கொடியிடையாளம்மை, சக்கரதீர்த்தம்]

தொண்டமான் சக்கர வர்த்தியினது யானைக்காலிற் சுற்றிய முல்லைக் கொடியைக் கோபித்து வெட்டும் பொழுது, திருமேனி வடுப்பட்டுவரமருளித் திருநந்திதேவரைச்சக்கரவர்த்திபின்னனுப்பியதலம் அக்காரணத்தால் இன்னுந்திருநந்திதேவர்புறங்காட்டிவீற்றிருக்கின்ற தலம். சன்னதியில்சுந்தரமூர்த்திசுவாமிகள் சங்கிலிநாச்சியார்பொருட்டுக் கண்ணிழந்தமைப்பற்றி பதிகமோதியதலம். ஆள் தழுவக்கூடாத இரண்டு எருக்கன்தூண் நிலைபெற்றிருக்கும்தலம். திருப்பதிகம்-க.
—இதற்கு தெற்கு ௬-மைலில்,

உக. * திருவேற்காடு.

[வேற்காட்டேச்சுரர், வேற்கண்ணியம்மை, வேலாயுததீர்த்தம்.]

சுப்பிரமணியசுவாமி பூசித்ததலம்.

பரமசிவன் பார்வதிதேவியாரோடும் கணபதியோடும் திருமணக்கோலமாய் அகஸ்தியருக்குக் காட்சிகொடுத்ததலம், மகாவிஷ்ணு கோண்ங்கிதாசரி வேஷமாடி இத்தலத்திலிருக்கும் பாஞ்சஜன்னிய விநயகரிடத்து சங்கத்தைப் பெற்றதலம். சுக்கிரன், வேதம், பரசுராமர், இந்திரன், முதலிய அஷ்டதிக்குப்பாலகரும் பூசித்ததலம். இந்தத்தலத்தில் சர்ப்பவிஷ உபத்திரவமில்லை.

(மூர்க்கநாயனார்) வேளாளமரபில் மார்கழிமாதப் புனர்பூசத்தில் திருவவதாரஞ் செய்தருளித் தமதுசெல்வங் குறைந்தும், சிவனடியாருக்கு அமுதூட்டலை குறைவுபடுத்தா வண்ணம், சூதமாடியமுதருத்திவந்து கார்த்திகைமாத மூலநாளில், முத்திபெற்றதலம், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடகிழக்கு கo-மைலில்,

## உஉ. * திருவொற்றியூர்.

[படம்பக்கநாதர், மாணிக்கத் § தியாகேச்சுரர், வடிவுடையம்மை, இருபாதீர்த்தம், அலைவாய்த்தீர்த்தம், மகிழம்விருக்ஷம்.]

ஆதிசேடன் பூசித்ததலம். பிரமா, கங்கை, பார்வதிமுதலியோர் பூசித்து பரமசிவன்நடனதரிசனம் பெற்றதலம்.

இத்தலத்துக்குக்கிழக்கு சமுத்திரத்தில் திருக்கணுமலை யென்றொரு க்ஷேத்திரமும், தெற்கு திருவாய் மூரென்றொரு க்ஷேத்திரமும், மேற்கு திருமுல்லைவாயிலென்றொரு க்ஷேத்திரமும், வடக்கு திருவெள்ளைவாயி லென்றொருக்ஷேத்திரமும், மத்தியில் இத்திருவொற்றியூர் என்னும் திவ்யக்ஷேத்திர மிருப்பதால், இந்த ஐந்து க்ஷேத்திரங்களுக்குப் பஞ்சசத்தியாக க்ஷேத்திரங்களென்று தத்காலத்தில் பிரசித்தியா யிருக்கின்றது.

ஓர்காலத்தில் கங்காதேவி பரமசிவனிடத்துக்குப்போய் தன்னிடத்தில் நித்தியம்சகலபாபிகளும் ஸ்நானஞ்செய்வதால் தனக்குண்டாகியபாபம் எப்படிபோகுமென்று வணங்கிக்கேட்க,அவர்கிருபைகூர்ந்து ஆதிபுரியென்னுந் திருவொற்றியூரில் பிரமதேவன்செய்யும் யாகசாலைமத்தியில் தைப்பூசத்தில் தான்தோன்றி நடனஞ் செய்வதாகவும், அக்காலத்தில் அங்கிருந்து அதைத்தரிசித்தால் சகலபாபங்களும் போகுமென்றும் திருவாய்மலர்ந்தருள, கங்காதேவியும் அதிக சந்தோஷத்துடன் அப்புரத்துக்கேகி, சிவபெருமான் நடனதரிசனங் கண்டு, பிரமானந்தமடைந்து, அந்தப்புண்ணிய க்ஷேத்திரத்தை விட்டுப் போகமனமில்லாமல், ஆங்ஙனே யின்னும் வசித்துக்கொண்டிருப்பதால்,இப்போதும் சரோரூபமாகக் கங்காதீர்த்தம் காசிதீர்த்தமெனா எல்லோராலுஞ் சொல்லப்படுகின்றன.

சுந்தரமூர்த்திசுவாமிகள் சங்கிலிநாச்சியாரைத் திருமணஞ் செய்விக்கும்பொருட்டு வேண்டச்சிவபெருமானிரவிற் சங்கிலிநாச்சியாருக்கறிவித்து அவரனுமதியாற் சுந்தரமூர்த்திசுவாமிகளை மகிழடியிற் பிரமாணஞ் செய்வித்துப்பின்னர் மணப்பித்ததலம்.

(கலியநாயனார்)வாணியர்குலத்தில் வைகாசிமாத அசுவினியிற்றிருவவதாரஞ் செய்தருளித் திருவிளக்குப்பணிபுரிந்து வருபவர், இறுதி

§ திலீபமகாராஜனுக்கு நடனதரிசனங்கொடுத்து அவன்பாவம் தியாகமாகும்படி செய்தமையால், இச்செகதீசனுக்கு அசையுந்தியாகேசரென நாமமுண்டாயிற்று. தியாகம் என்பது நீக்கல்.

யிற்பொருளின்மையாற் றடைப்படுவதறிந்து மனைவியைவிலைகூறியுங் கொள்வாரின்மையால், தாம்தொடுத்த பணிமுட்டுருவண்ணம் உதிரத்தைவார்த்தாவது தீபமேற்றக்கருதித் தமதுகண்டத்தைச்சேதித்த பக்தியைச் சிவபெருமான் வியந்து ஆடிமாதக் கேட்டைநாளிற் றமது சாலோக பதவியருளியதலம். ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பா பாடியதலம்.

பட்டினத்துப்பிள்ளையார் பூம்புகாரென்ற காவிரிப்பூம் பட்டினத்தில் வைசியகுலத்திற் றிருவவதாரஞ்செய்தருளித் திருவெண்காடரென்றநாமத்தோடு கப்பல்வாணிபமுதலியபெரும்பொருளுடையோராய்ச் சிவபக்தியோடு வாழுநாளில், திருவிடை மருதூரிற் சிவபூசைசெய்யும் அர்ச்சகர்தம்மனைவி யிறந்தமைபற்றிப் புனர்விவாகஞ் செய்ய மருதப்பரைப் பொருள்வேண்ட, அவர் ஒருபார்ப்பன வடிவமெடுத்துமருதவாணரென்னும் பெயரோடுபதினாறுவயதுடையோராயெதிர் தோன்றித் தம்மைவிற்று வரும்பொருளாற் கலியாணஞ் செய்துகொள்ளக் கட்டளை யிட்டருளியபடி, பட்டினத்துப்பிள்ளையாரிடத்து ஆவணமெழுதி மருதவாணரைவிற்று நம்பியா ரப்பொருள் கொண்டுசெல்ல, மருதவாணர் சிலகாலம் பட்டினத்துப்பிள்ளையாருக்குப் பிள்ளையார்போல்நடந்து பொருளீட்டிவந்து, பின்னர் பட்டினத்துப் பிள்ளையாரைத் துறவியாக்கக் கருதி காதற்ற ஊசியை சரட்டோடு மடித்து அன்னைகையிற்கொடுப்ப அதனைப்பெற்ற வெண்காடர் அதன்வழித்தாய் ஞானமுதிப்பத் துறவுபூண்டுழி, தமது திருவடியடைந்த சேந்தனாரை இச்சைவழி நிற்பவேவித் தம்முடன்பிறந்தாள் நஞ்சுகலந்த அப்பந்தர, அதனை வீட்டில்வைத் தெரித்து, சிதம்பரம், திருவிடைமருதூர், சீர்காழி, திருவதிகை, திருவண்ணமலை, திருவேகம்பம், திருக்காளத்திமுதலிய தலங்களைத் தரிசித்து, "கோவில் நான்மணிமாலை", "திருவிடைமருதூர் மும்மணிக்கோவை"; "திருக்கழுமல மும்மணிக்கோவை", "திருவேகம்பமுடையார்திருவந்தாதி", "திருவொற்றியூர் ஒருபாவொருபஃது", முதலிய பிரபந்தங்களும் தனிப்பாடல்களும் அருளிச்செய்து, பேய்க்கரும்பு தித்திக்கும்படியானதலம் தனக்கிறுதித் தலமெனத்தெரிந்து, அது இந்தத்தலமென்றுணர்ந்து இத்தலத்தின்கண் கடற்கரையிற்சிறுவராற்செய்யப்பட்டமணற்கேணியில் இலிங்கமாய் விளங்கியதலம்.

இந்தச் சிவாலயமத்தியில் பிலத்துவார மொன்றிருக்கின்றது. அதில்வட்டப்பாறை நாச்சியாரென்றுசொல்லப்படும், வடவாம்பிகையென்னும் ஒருபராசக்தி யிருக்கின்றனள், ஆதிசங்கராசாரியர்காஞ்சி,

ஸ்ரீகாளத்திமுதலிய க்ஷேத்திரங்களிற்சென்று, காமகோடி முதலிய பீடங்களுக்கு நியமங்கள் ஏற்படுத்திப் பின்பு இத்தலத்துக்குவந்து இப்பிலமத்தியத்திலிருக்கும் பராசத்திக்குபூர்வம் ஆவாஹனவிசர்ச்சனங்களில்லாமல் சமஸ்தசனங்களும் சாதாரணமாகப் பூசைசெய்திருந்தபடியால் அந்த ஆவாஹனமுதலியவைதீகபூசைகளே உத்தமமென்று நினைத்து, அந்த சத்திவசித்திருக்கும்பிலமுகத்தை ஓர்பாறையினால்மூடியதன்மேல்யந்திர உத்தாரணஞ்செய்து, வைதீகபூசையின் நியமத்தையுஞ் சொல்லிப்போயினர். பிறகு வைதீகபூசைக்கு இடையூறுநேரிட்டபடியால், அந்தச்சத்தி பரிவாரதேவதைகளோடு இராத்திரிகாலத்தில் அந்நகரத்தில் சஞ்சாரஞ்செய்து, அந்தவேளையில் எதிர்ப்பட்ட மனிதர்களைப் பட்சித்துக்கொண்டிருக்க, அந்நகரவாசிகள் சுமார் உ௱ - வருஷத்துக்குமுன் அப்போதிருந்த சங்கராசாரியரிடம்சென்று, இவ்விர்த்தாந்தங்களைத் தெரிவித்து, அழைத்து வந்து, ஆதிசங்கரர் கற்பிதமான யந்திரத்தை அதோமுகமாகத்திருப்பி, அக்குடிகளுக்கு க்ஷேமமுண்டாகும்படியான ஏற்பாடு செய்து போயினர். இப்போது இந்தச்சத்திக்கு வருஷமுதலில்சித்திரைமாசத்தில் பதினைந்துநாளைக்கு வைபவமாக உற்சவம்நடந்துவருகின்றது, அவற்றில் ஏழுநாள் வைதீகபூசையும், ஏழுநாள் தாந்திரிக பூசையும் பதினைந்தாம்நாள் இராத்திரி மகிஷபலியும் செய்துவருகிறார்கள். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது-திருப்பதிகங்கள்-அ. இதற்குத் தெற்கு அ-மைலில்,

உரு. * திருமயிலை,—மைலாப்பூர், மாயூரம், வேதபுரம்.

[கபாலீச்சுரர், கற்பகவல்லியம்மை, கபாலிதீர்த்தம், வேததீர்த்தம். புன்னைவிருக்ஷம்.]

பிரமதேவன் கெர்வித்ததற்காகப்பரமசிவன் அவன்சிரசிலொன்றைக் கிள்ளியெறிந்தபோது, பிரமதேவன் சிருட்டிக்குந் திறமை யற்றவனாகி அந்தவல்லமையைப்பெறும்பொருட்டுகாசி,காஞ்சீ,ஸ்ரீகாத்தி கேதாரம், கோகரணம்,சிதம்பரம்முதலிய தலங்களுக்குப்போய் ஆங்காங்குள்ள தீர்த்தங்களில்மூழ்கி, சிவ, விஷ்ணுமூர்த்திகளுக்குப் பிரதட்சணநமஸ்காரங்கள்செய்து, தெய்வானுக்கிரகத்தினால் இந்தமாயூரநகரத்துக்குவந்து இங்கிருக்கும் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இதற்குக்கிழக்கில் ஒரு இலிங்கஸ்தாபனஞ்செய்து ஆகாரமில்லாம லகோரமானதவஞ்செய்ய அந்த இலிங்கமத்தியில் நின்றும் பரமசிவன் தான் முன்னால் சேதித்த பிரமகபாலத்தைக் கையிலேந்தி பிரசன்னராகிபிரமதேவன் கோரிக்கையை நிறைவேற்றினராதலால் அவருக்குக் கபாலீசுரரெனப் பேருண்டாயது.

ஓர்காலத்தில் பஞ்சாட்சர இரகசியத்தைப்பரமசிவ னுபதேசிக்கும்போது பார்வதிதேவியார் மனம்வேறாய் மயிலின்நடனத்தில்புத்தி செலுத்தி யிருந்தமையால் மயிலாகப் பிறக்கும்படி சபிக்கப்பட்டு மயிலுருவாகப் பூசித்து சாபவிமோசன மடைந்ததலம்.

பூர்வம் பிரமதேவன் வசத்திலிருந்த வேதங்களை சோமகாசுரனென்னு மிராட்சசன் அபகரித்துச் சமுத்திரதீர்த்தத்தி லொளித்து வைக்கப் பரமசிவனுக்கினையினால் விஷ்ணுதேவர் மச்சாவதாரம் எடுத்து அவ்வரக்கனைக்கொன்று வேதங்களைமீட்டும்பிரமதேவனிடம் சேர்ப்பித்தார்; ஆயினும் ராட்சச சம்பந்தத்தால் வேதங்களுக்குத் தேசசுகுறைந்திருந்தமையால் அவ்வேதங்கள் இத்தலத்துக்குவந்து பிரமதீர்த்தத்தில்மூழ்கி,சிவாராதனைசெய்து முன்போல தேசசுபூரணமாயடைந்தபடியால் இந்நகரத்துக்கும் தீர்த்தத்துக்கும் வேதபுரமென்றும் வேததீர்த்தமென்றும் பேருண்டாயின.

ஸ்ரீசுப்பிரமண்யக்கடவுள்தாரகாசுரன் முதலியோர்களைச்செயிக்கத் தவம்புரிந்து வேலாயுதம் பெற்றதலம்.

முன்பு ஓர்காலத்தில்,ஜெகத்ரக்ஷகரான ஸ்ரீமன்நாராயணமூர்த்தி தன்மாயையை இலட்சுமிதேவிக்குத் தெரிவிக்கும்பொருட்டு தான் அந்தர்த்தியான மாய்விட்டார்; அவ்விலட்சுமிதேவி தன்பிராண நாயகனை அனேகத்தலங்களிற் றேடி சஞ்சரித்துக்கொண்டிருக்க, அகத்தியர் சொல்லியபடி இங்குவந்து பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிவானுக்கிரகம்பெற்று மாய்கையினால் விடப்பட்ட தன்பிராணநாயகனை யடைந்த படியினால், இந்நகரத்திர்க்கு மாயாபுரியென்றொரு நாமதேய முண்டாயிற்று.

இந்நகரத்தைச்சுற்றி மேற்கில் ௩-மைலில் வியாக்கிரபாதமுனி பிரதிஷ்டைசெய்த வியாக்கிரபாதேச இலங்கமும், தென்மேற்கு ௬-மைலில், பாண்டவாளால் பிரதிஷ்டையான, பூர்வம்பாண்டவாத்ரியென்றும், இப்போது பறங்கிமலையென்றுவழங்கும் மலையுச்சியிலும், விஷ்ணுதேவர் மச்சாவதார, வாமன அவதாரங்களில்பூசித்த சிவ இலிங்கங்களும், சுக்கிரபகவான் வாமன அவதாரத்தில் தானத்தைத் தடுத்த பாபநிவர்த்திக்காகப் பிரதிஷ்டைசெய்த சிவ இலிங்கமும், ஸ்ரீராமர், இலட்சுமணப்பெருமாள், சுக்ரீபர்,ஜாம்புவந்தர்முதலியோர் அயோத்திக்குப்போகும்போது இங்கிறங்கி ஸ்தாபித்த சிவ இலிங்கங்களும் இருக்கின்றன. இவை கலியில் மறைந்திருக்கின்றன.

தெய்வப்புலமை திருவள்ளுவநாயனர் எருந்தருளி திருக்குறள் முதலிய பிரபந்தங்களைப்பாடி மதுரைச்சங்கத்தாரை "ஆற்றங்கரை

யின்" என்னும் வெண்பாவால் வென்று பின்னீங்குற்று ஏலேல சிங்கனை யாட்கொண்டு அவரால் தேகவியோகமானபின், தன்னனுமதியின்பேரில் வைக்கோற்புரியினுல் அது அறுபடுமட்டும் இழுப்புண்டதலம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் செய்தருளிய அருட்டிறங்களைக் கேள்வியுற்றவரான வைசியகுலத்திற் சிவனடியாரிற்சிறந்த சிவனேசர் தயதருமைப்பெண்ணையும் நிதிக்குவியலோடு தம்மையும் அவ்வாளுடைய பிள்ளையாருக்குத்தத்தமாகக் கொடுக்கக்கருதிப்பத்திசெய்து வருங்காலத்தில், பெதும்பைப் பருவமுள்ள அவரது அருமைத் திருமகளார் மலர்கொய்யும்பொழுது அரவுகடித்திறந்தவரைத் தகனஞ்செய்து சாம்பரோடுகூடிய என்பைக் கடத்திலிட்டுப் பூசித்துவரும் போது, அங்குத் திருஞான சம்பந்தசுவாமிகள் எழுந்தருளிப் "பூம்பாவைத் திருப்பதிகம்" பாடி அவ்வங்கத்தை மங்கையாக்கியதலம்.

(வாயிலாநாயினுர்,) வேளாளமரபில் பங்குனிமாத உத்திரட்டாதியிலவதரித்துச் சிவபணிவிடை முதலியவைசெய்ய நினைத்துந் தனமின்மையா லுளமென்னுமாலயத்துட் பரமசிவனையிருத்தி ஞான பூசை செய்துகொண்டிருந்து மார்கழிமாத ரேவதியிற் றிருக்கயிலையடைந்ததலம். ஐயடிகள் காடவர்கோன் "க்ஷேத்திரவெண்பா" பாடியதலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது; திருப்பதிகம்-க.

—இதற்கு தெற்கு ௫ - மைலில்,

## உச. * திருவான்மியூர்.

[கோகரக்தேச்சுரர், மருந்தீச்சுரர், நடனதியாகேசுரர், சொக்கநாயகியம்மை, திரிபுரசுந்தர மாதம்மை, வான்மீகதீர்த்தம், சமுத்திரதீர்த்தம்.]

வெண்ணிறமான சுயம்புலிங்கம்,ஓர்பசுத்தனதுபாலைச்சொரிந்து பூசித்து முத்தியடைந்ததலம். வான்மீகரிஷி பூசிக்கத் திருநடன தரிசனங் கட்டளையிட்டருளியதலம். திருநாவுக்கரசுசுவாமிகள்திருஞான சம்பந்த சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது, திருப்பதிகங்கள். ௩.

—இதற்குத் தென்மேற்கு ௧௭-மைலில்,

## உ௫ * திருக்கச்சூராலக்கோயில்,—திருக்கச்சூர்.

[விருந்திட்டேச்சுரர், அமுதந்தியாகேசர், அஞ்சனாட்சியம்மை, அமுததீர்த்தம்.]

வித்தியாதரர்பூசித்ததலம், சுந்தரமூர்த்திசுவாமிகள் பசியால் வருந்திக்களைப்புந் திருத்தலையறிந்து திருவருள் சுரந்து சிவபெரு

மானே ஓர்மறையவரா யோடேந்திச்சென்று அமுது யாசித்தருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது, திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு உ௦-மைலில்,

உ௬ * திரு இடைச்சுரம்.

[இடைச்சுரநாதேச்சுரர், ஞானபுரீச்சுரர், இமயமடக்கொடியம்மை, கோவர்த்தனாம்பிகை, கோவர்த்தனகிரி, இந்திரதீர்த்தம்.]

கௌதமரிஷி, சனற்குமாரரிஷி பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது, திருப்பதிகம் க.

—இதற்கு வடகிழக்கு எ-மைலில்,

உஎ * திருக்கழுக்குன்றம்.

(பட்சிதீர்த்தம், வேதகிரி, ருத்திரகோடீஸ்வரம்)

[வேதகிரீச்சுரர், பெண்ணினல்லாளம்மை, சங்குதீர்த்தம், வசுதீர்த்தம் இந்திரதீர்த்தம், பட்சிதீர்த்தம்.]

நான்கு வேதங்களே ஒருமலையுருவாக நின்றதலம். அஷ்டவசுக்கள், திருநந்திதேவர், இந்திரன், திருமால் முதலாயினோர் பூசித்ததலம். பசு, வராகம் முதலியவை பிரதக்ஷணம்வந்து வேத உருப்பெற்றதலம். திருப்பாற்கடலைக்கடைய மந்தரகிரியைப்பேர்த்தபோது அதிலுண்டாகிய கோடிராட்சதர்களைக்கொன்ற கோடிஉருத்திரர்கள் பூசித்து பேறடைந்ததலம். கிரேதாயுகத்தில் சண்டன் பிரசண்டனெனும்கழுகரசர்களும், திரேதாயுகத்தில் சம்பாதி சடாயுவென்னுங் கழுகரசர்களும், துவாபரயுகத்தில் சம்புகுத்தன்மாகுத்தனெனும் ரிஷிகள் சத்திபெரிது சிவம் பெரிதெனத் தர்க்கித்து, அவ்விருவரும்வந்து கூறியதையும் சம்மதியாமற்பெற்ற சாபவசத்தாற் கழுகுருவுடையோராயிருந்தஅக்கழுகளும்பூசித்துமுத்தியடைந்தன. அதுபோலவே கலியுகத்தில் பூடாவிருத்தாவென்னு மிரண்டுதவசிகள் சிவபெருமானருளிய திருவார்த்தையைமறுத்து உடனே முத்திவேண்ட எதிர்மொழிந்த தப்பிதத்திற்காக கழுகுருபம்பெற்றுக் கலியீற்றில் முத்தியடையவழிபட்டுக்கொண் டிருக்குந்தலம். சமயாசாரியராகிய ஸ்ரீமன் மாணிக்கவாசகசுவாமிகள் குருவடிவந்தொழப் பெற்று "காட்டினாய் கழுக்குன்றிலே", எனத்திருவாசகம்பாடியருளிய தலம். இத்தலத்தில் மாத்திரம் சமயாசாரிரர்களுக்குப் பிரத்தியேகமாக திருக்கோயிலிருக்கின்றன. சமயாசாரியர்மூவராலும் பதிகங்கள்பெற்றுள்ளது, திருப்பதிகங்கள்-௩.

—இதற்குத் தென்மேற்கு ௩௦-மைலில்,

உஅ. * திரு அச்சிறுபாக்கம்.

[பாக்கபுரேச்சுரர், ஆதிசுந்தரமின்னம்மை, தேவதீர்த்தம், கொன்றைவிருட்சம்.]

தேவர்கள் பூசித்ததலம். திரிபுராதிகளைச் செயிக்கும்பொருட்டுச் சிவபெருமானுக்குச் சகலதேவர்களுந் திருத்தேராய் வந்தபொழுது அத்தேவர்கள் தம்முதவியாலன்றிச் சிவபெருமான் திரிபுரத்தைச் செயித்தல், எவ்வாறுகூடுமென்று நினைத்த நினைப்பையுணர்ந்த சிவபெருமான் தேரின்மீது அடிவைத்தூன்ற அத்தேரின் அச்சுகள் ஒடிந்ததலம், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகம்-க.

—இதற்கு மேற்கு ௩௦-மைலில்,

உகூ * திருவக்கரை.

[சந்திரசேகரேச்சுரர், தேனம்பிகையம்மை, வக்கிரதீர்த்தம்.]

குண்டலமகாமுனியும்,வக்கிராசூரனும்,சந்திரனும் பூசித்ததலம், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது,திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு அ-மைலில்,

௩௦. * திருஅரசிலி,—ஒழுந்தியார்பட்டி.

[அரசிலிநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, அரசடித்தீர்த்தம்.]

வாமதேவன் என்னும்ரிஷியாற் பூசிக்கப்பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளால் பதிகம்பெற்றுள்ளது, திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு ௩-மைலில்,

௩க. * திரு இரும்பைமாகாளம்.

[மாகாளேச்சுரர், குயின்மொழியம்மை, மாகாளதீர்த்தம்.]

அரிகரபுத்திரரது சேனைத்தலைவராகிய மாகாளர் பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடமேற்கு சுமார் ௬-மைலில்,

௩உ. * சீகாளத்தி.

[காளத்தீச்சுரர், ஞானப்பூங்கோதையம்மை, பொன்முகரிநதித்தீர்த்தம்.]

சீ, காளம், அத்தி, என்ற மூன்றுபதச்சேர்க்கையால், சீகாளத்தி என்றாயிற்று- அவற்றுள் சீ, என்பது சிலந்தி, காளம்,என்பதுபாம்பு, அத்தியென்பது யானை,அம்மூன்றும் பூசித்துமுத்திபெற்றது.கிரேதாயுகத்தில் சிலந்திவாயா லிழைத்தநூல்கொண்டு கோவிலாற்றச் சிவபெருமான் அதனன்பு சோதிப்பான்பொருட்டு விளக்கின் சுடரா

விருத்தியாக்கி நாற்கோயிலை வேவச்செய்யச் சிலந்திபதைத்து அவ் விளக்கில் வீழ்ந்திறக்கத் தொடங்குமுன் அதைக்காத்திரட்சித்தனர்.

திரேதாயுக அந்தியத்தில் காளம் என்ற பாம்பும், துவாபரயுக ஆதியில் ஓர்யானையும் பூசித்தன. அவற்றுள் பாம்பு மணிகளாலும், யானை இலைகளாலும் பூசிப்ப, ஒன்றையொன்று இகலித் தத்தம் பூசனையை யநுசிதஞ் செய்ததாகக்கருதி, பாம்பு யானைத்துதிக்கைக்குட் புகுந்துவருத்த, யானை, தலையைத்தரையின்மோத, அவ்விரண்டும் உயிர்விட்டுச் சிவகதியடைந்தன.

ஸ்ரீகயிலாயகிரி ஆயிரம் உன்னத சிகரங்களையுடையதாயிருக்கின்றது. அவற்றுள் சந்தோஷகரமாயும் வாசயோக்கியமாயு மிருக்கும் சிவானந்தநிலையமென்கிற சிகரத்தில், சுவபாவமாக வெண்ணிறத்தோடு பிரகாசிக்கின்ற சிவலிங்கத்தை வாயுவுபகவான், சகல சீவர்களுக்கும் தான்ஆதாரமாக இருக்க நினைத்து, பூர்வம் பூசித்து அப்பேறடைந்தனன். ஆனதா லிதற்கு வாயுவுலிங்கமெனப் பேராயினது. பிறகு பிரமதேவன் அதே இலிங்கத்தை யாராதித்து பரமசிவனுக்கினையினல் அந்த சிவானந்த நிலையமென்னுஞ் சிகரத்தை பூமியிற் கொணர்ந்து, இவ்விடத்திற் ருபித்ததனல் இதற்கு தட்சண கயிலாயமெனப் பெயராயினது. இது வாயுலிங்க மென்பதற் கடையாளமாக இச்சன்னிதானத்திலிருக்கும் திருவிளக்கு எக்காலத்திலும் எந்தவேளையிலும்சதா அசைந்து கொண்டே யிருக்கின்றது.

வித்தியாபீட உற்பத்தி ;—பரமசிவன் தன்குமாரனுகிய ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகளை சகல வேத, ஆகம, புராண, இதிகாச, சாஸ்திர, மந்திர இரகசியங்களிலும் பாண்டித்திய முள்ளவராக்கி இந்தத்தலத்திலிருக்கும் வாயுலிங்கத்துக்கு வடகிழக்குதிக்கில், சமஸ்த்தவித்தைகளையும் ஒருபர்வதரூபமாக ஏற்படுத்தி, அதின்பேரில், அவரைஉட்கார வைத்து, அவரைப்பிரார்த்திக்கும் சமஸ்த்த தேவமானிடர்களுக்குச் சகலவித்தைகளையும் உபதேசிக்கக் கட்டளையிட்டதலம்.

சுவர்ணமுகரிநதி உற்பத்தி. — பூர்வம் அகஸ்தியர் இங்கு சிவார்ச்சனைபுரிந்து தவம்புரிகையில் இந்தத் தலத்தில் ஒரு நதியை "உண்டாகச்செய்" என ஒரு அசரீரிவாக்குபிறக்க அந்தத்தலத்திலிருக்கும் பாதாளவிக்கினேச்சுரர் அனுக்கிரகத்தால் இதற்குமேற்கில் கஉ-காதவழியிலிருக்கும் பிரமகிரிக்குப்போய் அங்கொரு இலிங்கம் பிரதிஷ்டைசெய்து, அகோரமான தவஞ்செய்கையில், பரமசிவனுக்கினையினல் பிரமதேவன் பிரசன்னமாகி அகஸ்தியர் கோரியபடி பாதா

ளத்திலிருந்து கங்கையை வரவழைத்து அவர்பின்னுல் செல்லும்படி ஆக்கியாபிக்க, அந்தப்பிரவாகம் அங்கிருந்து உற்பத்தியாகி வேங்கடாசலத்திற்குதெற்கில்புறப்பட்டு, தக்ஷிணகயிலாசத்திற்குவந்து, வாய்வு இலிங்கத்திற்கு மேற்குதிசையிற்சென்று, கிழக்குசமுத்திரத்திற் கலக்கின்றது.சுவர்ணமுகரிநதிஇந்தத்தலத்தில்உத்திரவாகினியாகப்பாய்கின்றது இதற்கு அகஸ்த்தியகிரிஜா, அகஸ்த்தியநந்தினி,பிரமப்பிரோரிதா, வியத்கங்கா, சர்வலோக தீர்த்தசேவியா, அவிட்சின்னதயா, பவானி, ஜெகத்தாத்திரி, பவித்திரீ, கிருததின்முகா, சிவானந்தகரி, வேகவதி, யசஸ்வினி, வக்கிரஹ, கனநாதினி, பக்தபாசமூலநிகுர்த்தனி, மனோக்கியசித்தா முதலிய இருபத்தைந்து நாமங்களுள்ளன.

ஒவ்வோர் காலத்தில் இந்தத்தலத்துக்கு வந்து இங்குள்ள சிவபெருமானைவழிபட்டு, பாவங்களைப் போக்கடித்து, தங்கள்தங்கள் அபீஷ்டங்களைநிறைவேத்திக்கொண்ட தேவர்கள், சித்தர்கள், முனீச்சுராள், இருடிகள், மனிதர்கள் எண்ணிலர், விரிவஞ்சி அவற்றின் விவரங்களைவிட்டனம்.

இத்தலத்திலுண்டான சிவலிங்கமுதலிய மூகூர்த்தங்கள் :—பாதாள விக்கினேச்சுரர், துர்க்கேச்சுரர், களாதுர்க்காதேவி, சகலாமாஞயகேச்சுரர், தட்சிணமூர்த்தி, சனத்குமாரேச்சுரர், பராசரேச்சுரர், வியாசேச்சுரர், வித்தியாபீடத்தில் குமாரசுவாமி, சகஸ்திரதேவலிங்கேச்சுரர், மார்க்கண்டேச்சுரர், ஸ்கந்தலிங்கேச்சுரர்,பரசுராமேச்சுரர், கோதண்டராமேச்சுரர், திரிகண்டேச்சுரர், உத்தாரகேச்சுரர், மிருத்தியுஞ்சயேச்சுரர், விஜயேச்சுரர், நீலகண்டேச்சுரர், கயிலாசநாதேச்சுரர், மயூரேச்சுரர், மூகேச்சுரர், மணிகண்ணேச்சுரர், ஹரிஹரேச்சுரர், இந்திரேச்சுரர், பரத்துவாசேச்சுரர், கண்ணப்பநாயனர் முதலியவர்.

இத்தலத்திலுண்டான தீர்த்தங்கள் :— மவுசலதீர்த்தம், கியானப்பிரகாச தீர்த்தம், பாதாளகங்கை, பிரமவித்தியா தீர்த்தம், கண்ணப்ப தீர்த்தம், சகஸ்திரதேவ தீர்த்தம், மார்கண்ட தீர்த்தம், வேத தீர்த்தம், இராம தீர்த்தம், சக்கர தீர்த்தம், சக்தி தீர்த்தம், மிருத்தியுஞ்சய தீர்த்தம், பாசவிட்சேதக தீர்த்தம், நீலகண்ட தீர்த்தம், தத்துவப்பிரகாச தீர்த்தம், மயூர தீர்த்தம், மூக தீர்த்தம், மணிகண்ணேச்சுர தீர்த்தம், ஹரிஹர தீர்த்தம், இந்திர தீர்த்தம், பரத்துவாஜ தீர்த்தம், சூரியபுஷ்கரணி, சந்திரபுஷ்கரணி, இலக்குமி தீர்த்தம், ஸ்ரீ தீர்த்தம், காள தீர்த்தம், ஹஸ்த்தி தீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம் முதலியன.

திண்ணன் என்னும் கண்ணப்பநாயனுர் சரித்திரம்:— துவாபரயுகத்தக்ஷத்திரியத்திம்பாண்டுமைந்தரிலொருவனுகிய அருச்சுனன் பாசுபதம் பெறக்கருதித் தவஞ்செய்தபோது, வேடனுகிப் போந்த சிவபெருமானுடன் மல்லாடிப்பின்னர், சிவபெருமானைத் தரிசித்த போது, பாசுபதாஸ்த்திரம் வேண்டாது முத்தியை வேண்டச் சிவ பெருமான் நீ கருதியபாசுபதாஸ்த்திரந்தந்தோம் நீ கேட்டமுத்தியை மற்றொரு ஜனனத்திற் றருவோமென் றனுக்கிரகித்து, நம்மை வேட னென்றுரைத்த காரணத்தால் வேடனுகப்பிறந்து முத்தியையடைவா யென்ற திருவாக்கின்படி, போத்தப்பி நாட்டில் உடுப்பூரில் வேடரா சனுகிய நாகனும், அவன் மனைவிதத்தையும், நெடுங்காலம் புத்திரப் பேறில்லாது குறிஞ்சிக்கடவுளாகிய சுப்பிரமணிய ரனுக்கிரகத்தால், கார்த்திகைமாத அசுவனிநாளிற் றிருவவதாரமாகித் திண்ணன் என்னும் பெயருடையவராய், அக்குலத்திற்குரிய வில்வித்தைமுதலி யவற்றிற் றேர்ச்சியடைந்து, ஒருநாள் நாணன் காடன் என்னுமிர ண்டுபேருடன் காட்டுக்கு வேட்டைக்குப்போய் ஒரு பன்றியைக்கொ ன்றனர், அதையெடுப்பித்து தண்ணீர்த்துறைக்குவரும்போது எதிரி ற்புலப்பட்ட திருக்காளத்திமலை குடுமித்தேவரிருக்கு மலையென நாண னுற் றெரிந்தனர்.

அந்தமலையைக் கண்டமாத்திரத்திலேயே திண்ணனுருடைய "ம னம் வேருய் உலகபந்த சமுசாரத்தொல்லைக ளறுபட்டு, தண்ணீர்சு மூலமிட்டுத் தொனியுடன்பாய்வது பிரணவாகாரமாயும், றீங்கார சத் தமாயும், தனக்குத்தோன்றி, ஆற்றைக்கடந்து சிவலிங்க தரிசனமான தே இருவினையொப்பும் மலபரிபாகமுடைய திண்ணனுர் குணங்கள் மாறிச் சிவனிடத்தில் வைத்த அன்புருவமானுர். அதுமுதல் ஆறுநா ளைக்குள்ளாக ஆறுஉட்பகைகளையும் சிவார்ப்பணஞ்செய்து, ஆராதார நிலையேறிக் கண்ணிடந்தப்பிச் சிவபெருமானுல் கண்ணப்பா? நீ என்னப்பா? நான் உன்னப்பா? எனவன்புகூர்ந்தழைக்கப்பட்டு தைமாத மிருகசிரிடத்தில் முத்தி பெற்றனர்.

கடைச்சங்கத்து வித்வசிரோமணியாகிய நக்கீரதேவரும், சிவ கோசரியார் முதலியபலரும் முத்திபெற்றதலம்.

சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளதலம்- திருப்பதிக ங்கள் - ச.

ருரு. ¶ திருவட்டீச்சுரன்பேட்டை.

(ஸ்ரீவரதீச்சுரர், சண்பகவல்லியம்மை, சண்பகதீர்த்தம்.)

பார்வதி தேவியார் பூசித்ததலம். தேவர்கள் பூசித்ததலம்.

---

¶ இக்குறிப்பிட்டதலம் பாடல்பெறுதலை.

௩௪. ¶ வில்லிவாக்கம்.

(அகத்தீச்சுரர், பார்வதிதேவி, திருக்குளதீர்த்தம்.)

வாதாபி, வில்வாபி வசித்ததலம். அகத்தியர்பூசித்து பேறு பெற்றதலம்.

௩௫. ¶ குளத்தூர்.

(சோமநாதேச்சுரர், அமிர்தவல்லி, சோமதீர்த்தம்.)

சந்திரன், அசுவனிமுதலிய-உஎ-நட்சத்திரங்களாகிய தன்பத்தினிகளிடத்தில் சமபிரீதியாயிருப்பதாகப்பிரமாணஞ்செய்ததைத்தப்பினதால், தன்மாமனுன தட்சப்பிரசாபதி அங்கவீனனுகும்படி சபிக்க, அதையீசுவர ரனுக்கிரகத்தால் போக்கியதலம்.

௩௬. ¶ அயனவரம்.

(பிரமேச்சுரர், பரசுராமேச்சுரர், பார்வதிதேவி, பிரமதீர்த்தம்.)

பிரமதேவர் பூசுத்துப் பேறுபெற்றதலம். பரசுராமர் தனுர்வேதாத்தியாயனம்செய்து ராஜகுலத்தை நாசஞ்செய்வதனு லுண்டாகிய பாவங்களைப் போக்கடித்ததலம். சோழராசன் பூசித்ததலம்.

௩௭. ¶ கோயம்பேடு.

(குசலபுரீச்சுரர், தர்மசம்வர்த்தனி, சிவகங்கை.)

வால்மீகர், குசலவாள் பூசித்து பேறுபெற்றதலம்.

௩௮. ¶ ஆதனூர்.

(அகத்தீச்சுரர், ஆனந்தவல்லி, கூபதீர்த்தம்.)

அகஸ்தியர் பூசித்ததலம். மித்திரவிந்தனென்னு மரசன் சிவானுக்கிரகம் பெற்றதலம்.

௩௯. ¶ திருமழிசை. (மகிஷாசுரபுரம்.)

(மனுனுகூலீச்சுரர், குளிர்ந்தனுயகி, கூபதீர்த்தம்.)

சுயம்புலிங்கம். சோழமகாராஜனுக்கு அறுந்த கையைக் கூட்டி வைத்ததலம்.

௪௰. ¶ பூவிருந்தவல்லி.

(வைதீச்சுரர், தையநாயகியம்மை, மங்களதீர்த்தம்.)

தேவேந்திரன் பிரதிஷ்டை செய்து ஆராதித்து ரோகங்களைப் போக்கடித்ததலம். இக்காலத்தும் பிரதிமங்களவாரம் மங்களதீர்த்தத்தில் குளித்து வைதீச்சுரனை ஆராதித்து ரோகங்களைப் போக்கடிப்போர் பலர்.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறுதவைகள்.

## சக. ¶ மாங்காடு.

(அகத்தீச்சுரர்முதலியபஞ்சலிங்கங்கள், பார்வதி.)

இந்தத்தலத்தில் முன்னால் உச-விஷ்ணுத்தலங்களும், எ-சிவத்தலங்களுமிருந்தன. பார்வதி அன்னதானஞ்செய்து தவம்புரிந்ததலம். மகிஷாசூரனை சம்மாரஞ்செய்ததலம். சுக்கிரன்முதலாகிய அனேகதேவர்கள் பூசித்ததலம்.

## சஉ. ¶ திருநின்றவூர்.

(இருதயாலீச்சுரர், மரகதாம்பாள், வருணதீர்த்தமென்னும் க்ஷீராப்தி.)

பூசல்நாயனார்,பிரமணகுலத்தில் ஆவணிமாதப்பூரநாளில் திருவவதாரஞ் செய்தருளிச் சிவாலயங்கட்டப் பொருள்தேடிக் கிட்டாமைபற்றி, மனத்தாலே நெடுங்காலம் சிறிதுசிறிதாக ஒரு கோயிலைக்கட்டி அதற்குப்பிரதிட்டைசெய்ய நாள்பார்த்திருந்தனர். அதேகாலத்தில் காடவராசன், காஞ்சீபுரத்தில் கட்டியகோயிலுக்கு நியமித்திருந்த லக்கினத்தையுணர்ந்த சிவபெருமான், அரசன் கனவிற்றோன்றி, பூசல்நாயனாரது கோயிலிற் புகுவோமென் றனுக்கிரகிப்ப,காடவராஜன் இத்தலமடைந்து கோயிலைக்காணாது நாயனாரைக்கண்டு விசாரித்துண்மையையறிந்து வணங்கிச்செல்ல, நாயனார் மனமாலயத்தில் குறித்தநாளில் பிரதிஷ்டைசெய்து நெடுங்காலம் பூசித்து, அர்ப்பிசி மாதம் கிருத்திகைநாளில் சிவபுரமடைந்ததலம்.

## சங. ¶ திருவூர்.

(சுருங்கீச்சுரர், உத்பலாம்பிகை, பிரமதீர்த்தம்.)

இவ்விடத்தில் பூர்வம் இலந்தைமரங்கள் விசேஷித்திருந்தமையால் தட்சணபதரிகா வனமென்னப்பட்டது. சுருங்கிமகாமுனி பூசித்ததலம். சோழராஜன் பூசித்து இஷ்டசித்தி யடைந்ததலம்.

## சச. ¶ திருவள்ளூர்.

(தீர்த்தேச்சுரர், திரிபுரசுந்தரியம்மன், ஹிருத்தாபநாசதீர்த்தம்.)

ஜனகாதிமுனிவர்கள் காட்சிபெற்றதலம். ஸ்ரீமன்நாராயணமூர்த்தி, பத்மாசூரனை வஞ்சித்துக்கொன்ற பாதகம் நீக்கியதலம். தேவேந்திரன், விருத்திகாசூரனை வதைசெய்தபாபம் போக்கியதலம். இந்தத் தலத்தில் ஈச்சுரன் தீர்த்தசமீபத்தில் ஆவிர்ப்பவித்த காரணத்தால் தீர்த்தேச்சுரனென்றும், அந்ததீர்த்தத்தின லிந்திரநாராயணர்களுக்கு மனோதாபம் பரிகாரமானபடியால் அதற்கு இருத்தாப நாசதீர்த்தமென்றும் பேராயினது.

## சரு. ¶ நம்பாக்கம்.

(மாந்தேச்சுரர், சிவகாமியம்மாள், குசஸ்தலநதி.)

சோழமகாராஜனுக்குப்பாம்புருவாய்தரிசனங்கொடுத்தருளியதலம்

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

சசு. ¶ செருத்தணி,—திருத்தணி.

முருகப்பிரானது விசேடத்தலங்களி லொன்று.

[தணிகாசலபதி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை, குமாரதீர்த்தம்.]

செரு-உயுத்தம், தணி-தணிந்தது, செருத்தணி-உயுத்தந்தணிந்தது என்றுபொருள். அதாவது, முருகக்கடவுள்சூரனோடு உயுத்தஞ்செய்து தணிந்திருந்த இடமென்றும், குறமாதாகிய வள்ளிநாயகியாரைக்காவிற் கொடுவந்தபொழுதெதிர்த்த அவரதுசுற்றத்தாருடன் உயுத்தஞ்செய்து தணிந்திருந்த இடமென்றும் பொருளாகும். நவபுண்ணியதீர்த்த முள்ளதலம். இதில் ஓர்சுனையாகிய அற்புதத்தீர்த்தத்தில் தினந்தோறும் பூசிக்கும்பொருட்டு தேவேந்திரனால் நீலோற்பல மலர் உண்டுசெய்யப்பட்டிருந்தது, அதில் சிலகாலத்துக்குமுன்வரையில் காலையிலொருபூவும், உச்சியிலொருபூவும், மாலையிலொருபூவும், மலர்ந்துகொண்டிருந்த பலமகிமைகளைப் பொருந்தியதலம். திரிமூர்த்திகள், தேவேந்திரன், நந்தி, ஆதிசேஷன், சப்தரிஷிகள் முதலியோர் பூசித்து அவரவர்வேண்டுங் கோரிக்கைகளை யீடேறப் பெற்றதலம். அருணகிரிநாதரால் பாடல்பெற்றதலம்.

சஎ. ¶ திருவிரிஞ்சிபுரம்.

[மார்க்கசகாயநாதர், மரகதவல்லியம்மை, சத்திதீர்த்தம்.]

பிரமா, விஷ்ணு, சத்தி, இவர்கள் பூசித்ததலம். கழுதைமுகமுள்ள அசுரன்பூசித்து அம்முகம் சீர்பெற்ற காரணத்தால் இந்நகர், கரபுரி என்றாயிற்று. மிளகுப்பொதிகொண்டு செல்லும்தனபாலகன் வழித்துணைக்கு வருவோருக்குப் பாதிமிளகு தருவதாகப் பிரார்த்தித்ததற்காக, சிவபெருமானே வழித்துணையாகவந்தும், அவ்வணிகன் உடன்பாட்டிக்குப் பின்வாங்கியதைப் பலவாறு தடுத்துப்பாதிமிளகைக் கொண்டதலம். இதனாலே மார்க்கசகாய ரெனப் பேருண்டாயிற்று.

சஅ. ¶ சுருட்டேபல்லே.

(வால்மீகேச்சுரர், பள்ளிகொண்டேச்சுரர், மரகதவல்லி, பார்வதி.)

வால்மீகர், ஸ்ரீராமர், சீதாதேவி, குசலவாள் பூசித்ததலம். சமுத்திரத்திற்பிறந்த ஆலகாலவிஷத்தைப் பரமசிவன் சகலதேவர்களிடையில் புசிக்கப்பார்த்த பார்வதிதேவியார் தடுத்தசமையம்.

சகூ. ¶ இராமகிரி.

(வாலீச்சுரர், மரகதவல்லி, காளிங்கதீர்த்தம்.)

இந்தத்தலத்தில் ஒரு சிலாரூப நந்திவாயிலிருந்து எக்காலமும் தாரையாய்ப் பிரவகிக்கிற ஒரு தாரா தீர்த்தமிருக்கிறது. வாலிபூசித்து

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

நிமிஷகாலத்தில் சமஸ்த்த பூமண்டலத்திலும் சஞ்சரிக்கும் வேகம் பெற்று பிரதிதினம் உதயம், மத்தியானம், சாயங்காலங்களில் நாலுசமுத்திரங்களிலும் அக்கியப்பிரதானம் செய்துவந்தான்.

௫0. ¶ புக்கஅக்கிராகாரம்.

(காசிவிஸ்வேச்சுரர், விசாலாட்சியம்மை, புக்கைரூபதீர்த்தம்.)

ஜரத்காரரிஷி இஷ்டப்படி விஸ்வரூபதரராய், விசாலாட்சி, காளபைரவர் முதலியோருடன் வந்து காட்சிகொடுத்தருளியதலம். காசியில் பிரவாகரூபமாயிருக்கிறகங்கை இத்தலத்தில் புக்கைரூபமாயிருக்கிறது

௫௧. ¶ கரும்பேடு.

(நாதாதீச்சுரர், ஞானப்பிரசூனம்பிகை, திரிசூலதீர்த்தம்.)

திரிசூலம் பூசித்து சிவதத்துவவுபதேசம்பெற்ற தலம். நாதத்தோடுஉதித்து மதங்கமகாமுனிக்கு சான்னித்தியமுண்டாக்கியதலம். அக்கியாதவாசஞ்செய்த பாண்டவர்களில் நகுல சகாதேவர் இங்கு பசுக்களையும் குதிரைகளையும் மேய்த்துக்கொண்டிருந்து பூசித்ததலம். நாகராசன் பூசித்ததலம்.

௫௨. ¶ சதாசிவகோணை.

(சதாசிவேச்சுரர், காமாட்சிதேவி, ஆகாசகங்கை.)

பிர்மா, விஷ்ணுமுதலிய தேவர்கள் பூசித்துப் பேறடைந்ததலம். இந்தத்தலத்தில்கங்கைதாராரூபமாய்எந்தகாலத்திலும்பிரவகிக்கிறது

௫௩. ¶ கெம்புலபாளையம்.

(அகஸ்தீச்சுரர், மரகதவல்லி, பதுமசரசு.)

பரமசிவன் கலியாணகோலத்தோடு பார்வதிசமேதராய் சகலதேவர்கள், முனிவர்முதலானவர் புடைசூழ கலியாணத்துக்கு வாராதிருந்த அகத்தியமகாமுனிக்கு அங்ஙனம் நின்று காட்சி கொடுத்ததலம்.

௫௪. ¶ ஜோகுலமல்லம்.

(பராசரேச்சுரர், சுந்தரவல்லி, பராசரதீர்த்தம்.)

வேத, ஆகம, புராண, இதிகாசங்களில் நிபுணனாயிருக்கும் புத்திரப்பேறபேட்சித்த பராசரரிஷிக்கு அப்பேறளித்ததலம்.

௫௫. ¶ மடவலம்.—(மரவலம்.)

(கோவர்சநாதேச்சுரர், ஆனந்தவல்லி, பாபநாசதீர்த்தம்.)

பரமசிவன் கன்றுக்குட்டியாய் அங்குமேய்ந்திருந்த ஒருபசுவின் பாலைக்குடித்து வந்ததலம். கௌதமர் பூசித்ததலம். கோ-பசு, வர்சம்-கன்று.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

௫௬. ¶ மூகிலி.

(முகிலீச்சுரர், காமாட்சி, திரிசூலதீர்த்தம்)

மேகம்பூசித்து சகலபிராணிகளுக்கும் ஆதாரமானசலத்தைத் வருஷிக்கஅனுக்கிரகம்பெற்றதலம். ஸ்ரீகிருஷ்ணசுவாமிபூசிக்கப்பசுக்களுக்கும் கோபாலருக்கும் சூலத்தினூற்குத்திதீர்த்தம் உண்டாக்கியதலம். இதில்சிலாரூபரிஷபத்தின்வாயிலிருந்து சதாசலம்பெருகுகின்றது.

௫௭ ¶ புதுக்கோட்டை. இதற்கருகில் அகஸ்தியாசலமிருக்கிறது.

(அகஸ்தீச்சுரர், ஆனந்தவல்லி, பாதாளகங்கை, அகஸ்தியதீர்த்தம்.)

தட்சணகயிலாசமென்னும் ஸ்ரீகாளஹஸ்தியில் சலாதாரம் உண்டாக்க, அகஸ்தியமகாமுனி இப்பர்வதத்தில் தவம்புரிய பரமசிவனுக்கினையினுல் பிரமதேவர் பிரசன்னமாகி பாதாளகங்கையை அங்குவரவழைத்து, ஸ்ரீகாளத்தி முகாந்திரமாய் ஓடி சமுத்திரத்தில் கலக்கும்படி ஆக்கியாபித்ததலம்.

௫௮. ¶ வடதில்லை.

(பாபஹரேச்சுரர், மரகதவல்லி, அரணிநதி.)

சோழமகாராஜன் பிரமஹத்தியைப்போக்கி நடனதரிசன மளித்ததலம்.

௫௯. ¶ மாதரபாக்கம்.

(விஸ்வேச்சுரர், விசாலாட்சி, கூபதீர்த்தம்.)

காலவமுனீஸ்வரர் பூசித்துப் பேறுபெற்றதலம்.

௬0. ¶ க்ஷீரேஸ்வரபுரம்.

(க்ஷீரேச்சுரர், தேவநாயகி, அமிர்தபுஷ்கரணி.)

ஸ்ரீநாராயணமூர்த்தி அமிர்தம் பங்கிட்டு கையைக்கழுவி, அதை இராட்சசாள் உண்ணுதிருக்கப் பரமசிவனைப் பூசித்து நந்திதேவரைக் காவல் வைத்த தலம்.

௬௧. ¶ சத்தியவேடு.—(சப்தபுரம்.)

(மதங்கேச்சுரர், மரகதவல்லி, மதங்கதீர்த்தம்.)

கஸ்யபர் முதலான சப்தரிஷிகள் பூசித்ததலம். இவர்கள் சிஷியரான மதங்க மகாமுனிக்குப் பரமசிவன் பிரத்தியட்சமாய் உன் கோரிக்கை யென்னவென, எனக்குத் தெரியாது என்குருமாரான சப்தரிஷிகளைக் கேட்கவேண்டு மென்றுசொல்ல, அவருக்காக அந்த சப்தரிஷிகளையும் அங்குவரவழைத்து அவர்களுக்கும் காட்சிகொடுத்து, அவாளால் இவர் கோரிக்கையறிந்து அனுக்கிரகித்ததலம். இக்காலத்தில் இது கொண்டாரெட்டி யென்பவனுல் சீர்ணோத்தாரம் செய்யப்பட்டது.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெருதவைகள்.

௩௨. ¶ பெரியபாளையம்.

(அரிமுக்தீச்சுரர், அன்னபூரணியம்மன், வான்மீகிதீர்த்தம், அரணிநதி.)

வான்மீகிரிஷி பூசித்ததலம். சாபத்தினுல் வானர ரூபமடைந்த பஞ்சபூதங்கள் பூசித்து சாபவிமோசனம் பெற்றதலம். சித்திரவர்மன் பூசித்துப் பேறடைந்ததலம்.

௩௩. ¶ அரியத்துறை.

(வரமுக்தீச்சுரர், மரகதவல்லி, காசிகங்கை.)

உரோமசன் என்னும் ரிஷிபூசிக்க, அவருக்கு பிரதிதினம் தரிசனம் கொடுத்ததலம். சித்திரசேனன் என்னும் அரசன் பேற டைந்ததலம். பார்வதி பூசித்ததலம்.

௩௪. ¶ பொன்னேரி.

(அகத்தீச்சுரர், பார்வதியம்மை, அரணிநதி.)

அகத்தியர் பூசித்ததலம், இப்போதும் பொன்னேரியில் ஒரு பாகத்துக்குக்கும்பமங்கலமென்றுவழங்கி வருகின்றது; சித்திராபவுர் நவமியில், இதற்கு ஒரு மயில் தூரத்திலிருக்கும் திருஆய்ப்பாடியில் வீற்றிருக்கும் ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்கும், அகத்தீச்சுரருக்கும், சந்திப்பு உற்சவம் என்கிற பெரிய உற்சவம் நடக்கின்றது; இச்சந்திப்பு தரிச னஞ் செய்ய பலதேசத்து ஜெனங்கள் வருடந்தோறும் சென்று தரிசிக்குந் தலம்.

௩௫. ¶ திருக்களம்.

(திருக்கள்ளீச்சுரர், காமாட்சித்தாயார், குசஸ்தலநதி.)

சமயாசாரியர், இங்குவந்து பூசாசாமான்களைக் கரையில் வைத்து ஸ்தானஞ் செய்கையில்,அவற்றை வேறிடத்துக்கு எடுத்துக்கொண்டு போய் பின் அவாளுக்குக் காட்டியருளியதால், இவருக்குத் திருக்கள் ளீச்சுரரெனப் பெயராயினது.

௩௬. ¶ இரட்டைமலை.

(காளத்தீச்சுரர், ஞானப்பிரசூனும்பாள், கூபதீர்த்தம்.)

சுவர்னன், விசுவாவசு என்னுமிரண்டு கந்தருவாள் சிவநிந்தை யால் சாபமுற்று, இரண்டு மலையாக அவதரித்த தலம். பின் இம்மலை யின்மேல் ஒரு புற்றினிடம் பரமசிவ னுற்பத்தியாய் சாபவிமோசனம் செய்தருளிய தலம். சூரிய குலத் தரசனுகிய திரிசங்கு மகாராசனுக் குக்காட்சி கொடுத்தருளிய தலம். பிரதிதினமும் ஸ்ரீகாளஹஸ்திக்குப்

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெருதவைகள்,

போய் சிவதரிசனஞ் செய்யும் ஓர் பிராமணன், வழியிலிருக்கும் காளிங்க நதிப் பிரவாகத்தால் அங்கு போகக் கூடாமல் மன வருத்த முற்றிருக்குங் காலையில், இத்தலத்துக்கு வந்து தரிசனஞ் செய்யும் படி கட்டளையிட்டருளிய தலம். ஸ்ரீராமர் பூசித்து பேறுபெற்றதலம்.

சு௭. ¶ திருப்பாலைவனம்.

(அமிர்தேச்சுரர், யோகாம்பிகை, சூரியபுஷ்கரணி, அமிர்தசமுசபுஷ்கரணி, சந்திரபுஷ்கரணி, பத்மபுஷ்கரணி, ஆனந்ததீர்த்தம்.)

அருந்ததியின் மேல்கொண்ட மோகத்தினால் சூரியனுக்கு வந்த சாப விமோசனஞ் செய்ததலம். பிச்சாண்டி வேடம் பூண்டு நிர்த்தனம் செய்த பரமசிவனைக் கண்டு மோகித்த தாருகாவனத்து ரிஷி பத்தினிகளில் ஒருத்தி பாலை மரமாகி சிவலிங்கத்தைச் சூழ்ந்து ஆலிங்கன சுகத்தை யனுபவித்த தலம். முகுந்த மகாமுனி பேறுபெற்ற தலம். பரமசிவனைக் கண்டானந்த மடைந்து, இவர்கண்களினின்றொழுகிய பாஷ்பங்களின் தொகுதியே ஆனந்த தீர்த்தம், இதில் தவளைகள் வசிப்பதில்லை. சந்திரனும் அமிர்தசுமுகமுனிவரும் பூசித்ததலம்.

சு௮. ¶ காட்டாவூர். (அரண்ணியபுரம்.)

(ஸ்ரீசுப்பிரமணியர், பரமசிவன், அரணிநதி.)

ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகள் பரமசிவனுக்கு பிரணவார்த்தத்தை யுபதேசித் தருளிய திருக்கோலத்தை, உரோமரிஷி கோரியபடி அவருக்குத் தரிசனங் காட்டி யருளியதலம்.

சுகூ. ¶ மெதவாயல். (குமுதபுரம்)

(அக்கினீச்சுரர், திரிபுரசுந்தரி, திருக்குளதீர்த்தம்.)

அக்கினி பகவானுக்கு அசீரண ரோகம் போக்கியதலம்.

௭௰. ¶ பஞ்சேட்டி.

(அகத்தீச்சுரர், ஆனந்தவல்லியம்மை, அகத்தியதீர்த்தம், கந்தர்வதீர்த்தம்.)

அகத்திய மகாமுனி பூசித்ததலம். சித்திரகாருண்டன், சித்திரரூபன், சித்திரமாலியன், சித்திராம்சன், சித்துருண்டன் என்னும் ஐந்து கந்தருவர் பூசித்து சாபவிமோசனம் பெற்றதலம்.

௭க. ¶ கற்குளம்.

(காமேச்சுரர், சொக்கநாயகியம்மை, யமதீர்த்தம், சந்திரபுஷ்கரணி, மன்மததீர்த்தம், வியாக்கிரபாததீர்த்தம்.)

மார்க்கண்டேயர் பூசித்த சிவலிங்கத்தை ஆராதித்து எமதருமராசன் சிவாபராதம் போக்கிய தலம். மழமுனி பூசித்து தன் கைகால்

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

களில் புட்பங் கொய்ய புலி நகங்கள் பெற்றதலம். சந்திரன் ஆராதித்து பிரகஸ்பதி சாபம் போக்கிய தலம். இரதிதேவிபூசித்து மன்மதனைத் தான்மாத்திரம் பார்த்திருக்கக் கிருபை பெற்றதலம். மன்மதன்பூசித்துபேறு பெற்ற தலம்.

எ௨. ¶ சிந்தாமணீச்சுரர் கோயில்.

(சிந்தாமணீச்சுரர், சிவகாமித்தாயார், கூபதீர்த்தம்.)

நாராயணகிரியில் பிரமதேவன் எக்கியஞ் செய்கையில் அரணியில் உற்பத்தியான அரணீநதி சமுத்திரத்தில் சங்கமாகிறதலம். மேல்சமுத்திர தீரத்திலிருக்கும் கோகரண க்ஷேத்திரத்திற்கு நேராக கீழ்சமுத்திரக்கரையில் இருக்கின்றமையால், இது கீழ்கோகரணமென்று சொல்லப்படுகின்றது.

எ௩. ¶ மேலூர்.

(மணங்கேச்சுரர், திரிபுரசுந்தரி, கூபதீர்த்தம்.)

புற்றினிடத்து மறைபட்டிருந்த சிவலிங்கத்துக்குத் தன் பாலால் அபிஷேகஞ் செய்து வந்த பசுவைக் கண்ட இடையன், அப்புற்றை வெட்ட, உதிரப் பிரவாகந் துடன்வெளிப்பட்டதலம். மிளகுமூட்டைகளைச் சோளமூட்டைகளாக்கி, மறுபடி பிரார்த்தனையின் பேரில் மிளகு மூட்டைகளாக்கி, அவ்வர்த்தகரால் கோயில் கட்டுவித்ததலம்.

எ௪. ¶ நாயிறு (பானுபுரி.)

(புஷ்பரதேச்சுரர், சுவர்ணம்பிகை, சூரியபுஷ்கரணிதீர்த்தம்.)

இதன்றி கபாலீச்சுரர், இரணியேச்சுரர், ஜம்புகேச்சுரர் என்னும் பெயர்களையுடைய சிவமூர்த்திகள் வேறு வேறாலயங்களி லிருக்கின்றனர். இது முன்மூன்று யுகங்களில் சூரியனாலும், கலியுகத்தில் சோழராஜனாலும், சங்கராசாரியராலும் பூசிக்கப் பெற்ற தலம். இத்தலத்திலிருந்த சுவர்ணம்பிகையை ஸ்ரீசங்கராசாரியர் பூஜதனஞ் செய்து அதற்குப் பதில் சிலாவிக்கிரகத்தைத் தாபித்தனர். சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருமணஞ் செய்த சங்கிலிநாச்சியார் பிறந்ததலம்.

எரு. ¶ புழலி.

(சுந்தரேச்சுரர், சுவர்ணம்பிகை, திருக்குளதீர்த்தம்.)

கோகர்ணத்தில் தவசுசெய்து கொண்டிருந்த உரோமச மகாமுனிக்கு மைலையில் கபாலீச்சுரரை பிரதோஷகாலத்தில் பூசிக்க உத்திரவாக, அவர் இத் தலத்துக்கு வரும்போது அந்தகாலம் வந்தமையால், மைலையில் கபாலீச்சரைத் தரிசிக்கக் கூடாமையைப்பற்றி, சிங்

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

இத்துக் கொண்டிருக்கும் போது, பரமசிவன் பார்வதி சமேதராகி இடப வாகனமேறி காட்சி கொடுத்தருளியதலம்.

எசு. ¶ வேபூர்.

(வசிஷ்டேச்சுரர், பாலகுஜாம்பாள், பாலாறு.)

வசிஷ்டர் பூசித்து அனேக கோரிக்கைகளை யடைந்ததலம்.

எஎ ¶ பிரமபுரம்.

(பிரமேச்சுரர், நாகேச்சுரர், நாகவல்லியம்பாள், பிரமதீர்த்தம்)

பிரமதேவர் பூசித்து சிருட்டிசக்தி யடைந்ததலம். நாகங்கள் பூசித்து கெருடபாதை நீக்கியதலம்.

எஅ. ¶ சம்பவராயநல்லூர்.

(விருபாட்சேச்சுரர், அகிலாண்டேஸ்வரி, சர்வதீர்த்தம்.)

பரசுராமர் ஆராதித்து தாயாரைக்கொன்றதோஷம்போக்கியதலம். சம்பவராய னென்னும் பிரதானியால் பிரதிஷ்டை செய்த நகரம்.

எகூ. ¶ திருவானைக்கோயில். (வாலீபுரம்.)

(திருவாலீச்சுரர், க்ஷீரவரதாம்பாள், அக்கினிதீர்த்தம், சிவகங்கை.)

சனக, சனந்தனாதிகள், துருவாசர் பூசித்ததலம். வாலி பூசித்து பேறடைந்ததலம். இந்திரன் ஐராவதம் சிவநிர்மாலியத்தை அவமதித்ததனால் சாபமடைந்து யானையாய்ப்பிறந்து பூசித்துபேறடைந்ததலம்

அ௰. ¶ கோவிந்தவாடி. (அகரம்.)

(தட்சணாமூர்த்தி, கோவிந்தபாடகேச்சுரர்.)

கோவிந்தன் முதலிய தேவர்களுக்குஞ் சனகாதி முனிவருக்குந் தட்சணாமூர்த்தமா யெழுந்தருளி ஆகமசித்தாந்தஇரகசியங்களை யுபதேசித்த தலம்,

அக. ¶ சோளங்கிபுரம். (கடிகாசலம்.)

(சோழலிங்கேச்சுரர், பார்வதிதேவி, கூபதீர்த்தம்.)

சோழ மகாராஜன் இங்கிருந்த சுயம்பு லிங்கத்தைக் கண்டு கோயில் கட்டி, அதிலதைத் தாபித்து இங்கு ஒரு பட்டணம் தன்பேரால் கட்டி இஷ்டசித்தி யடைந்த தலம்.

அஉ. ¶ புலிப்பாறை.

(வியாக்கிரேச்சுரர், பாலகுசாம்பாள், திரிவேணிசங்கதீர்த்தம்.)

புலி உருவங் கொண்ட ஒரு முனிவரும், இடையனும், பூசித்து முத்தி யடைந்ததலம்.

---

¶ இச்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

அரு. ¶ சிட்டணஞ்சேரி. (ஸ்ரீகிருஷ்ணபுரம்.)

(பிரமேச்சுரர், ஸ்ரீகரோச்சுரர், சுந்தரநாயகி, சிவகாமசுந்தரி, பிரமதீர்த்தம், சிவகங்கை, குமாரதீர்த்தம், க்ஷீரநதி.)

பிரமதேவர் பேறுபெற்றதலம். வால்மீகர் பூசித்து இஷ்ட சித்தியடைந்ததலம். பஞ்சபாண்டவாளும், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும், பூசித்ததலம். கங்காதேவி பூசித்து சகலநதி ஆதிபத்தியமும்மோட்சதாத்துருத்துவமும் பெற்றதலம். குமாரசுவாமிக்குக் காட்சி கொடுத்தலம்.

அச. ¶ மணிமங்கலம்.

(தர்மேச்சுரர், வேதவல்லி, கூபதீர்த்தம்.)

சோழராஜன் பூசித்து இஷ்டசித்தி யடைந்த தலம்.

அரு. ¶ மணிவாக்கம்.

(மிருத்துயுஞ்செயர், மரகதாம்பாள், பாதாளகங்கை,)

சகல தேவர்களும் பூசித்து மிருத்துவை செயிக்க வரம் பெற்ற தலம். பயிங்கலமுனி பூசித்ததலம்.

அசா. ¶ வரதூர்.

(அகத்தீச்சுரர், காமாட்சியம்மை, கூபதீர்த்தம்.)

அகத்தியர் முதலிய சப்தரிஷிகளும் பூசித்துப் பேறடைந்த தலம். சோழராஜன் பூசித்து, வரங்கள் பெற்ற தலமாதலால் வரதூரெனப் பெயராயினது.

அள. ¶ மாத்தூர்.

(ஆபத்சகாயர், அமிர்தவல்லி, கூபதீர்த்தம்.)

இட்சுவாகுவமிசத்தில் ஒருவரான அனரண்ணிய மகாராஜன் தன் அரசாட்சியை யிழந்து பூசித்துப் பேறடைந்த தலம். சிந்திற்கொடிகளால் மறைந்திருந்து, பின் வெளிப்பட்டமையாலிந்த அம்மனுக்கு அமிர்தவல்லி யெனப் பெயராயினது.

அஅ. ¶ எச்சூர்.

(மார்க்கண்டேச்சுரர், மரகதாம்பாள், பூததீர்த்தம், காசிகங்கை.)

மார்க்கண்டேயர் பூசித்துப் பேறடைந்ததலம். சிவசருமர் ஸ்ரீசேலத்தில் மகாசிவராத்திரி தினத்தில் செய்த அபசாரத்தை மன்னித்தருளிய தலம். அவர் வரவழைத்த கங்கை காசிகங்கையைவிட அதிக பலனைத் தருவதால், இவ்வூருக்கு எச்சூர் எனப்பெயருண்டாயினது.

அகூ. ¶ கடம்பர்கோயில்.

(கடம்பநாதர், ஆவுடையார்நாயகி, கசியபதீர்த்தம்.)

கசியபமுனி யாகஞ் செய்ததலம். குமாரசுவாமி, இந்திரன், அக்கினி, பிரமன் முதலியோர் பூசித்ததலம்,

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறுதவைகள்.

௬0. ¶ பென்னகர்.

(பிரமேச்சுரர், திரிசூலவதனம்பாள், அம்சதீர்த்தம், பிரமதீர்த்தம், பவானிதீர்த்தம்)

நாராணய முனி தவஞ்செய்த தலம். இவர்தொடையில் உற்பத்தியான ஊர்வசியைப் பார்க்கிலும், அதிசவுந்தரியமாக திலோத்தமை என்பவளைப் பிரமன் சிருஷ்டித்து, அவள்மேல் மோகமாக, அவள் பெண் மானுருவமெடுக்க, பிரமன் ஆண்மானாய் அவளுடன் சேர்ந்த பாவம் போக்கிய தலம்.

௬௧. ¶ மரக்காணம். (ஆனந்தத்தாண்டவபுரம்)

(பூமீச்சுரர், கிரிசாம்பிகை, சிவகங்கை, அமராவதிதீர்த்தம், அகத்தியதீர்த்தம்.)

பூமிதேவி, இரதிதேவி, ஸ்ரீராமர், அகத்தியர் முதலானவர்கள் பூசித்ததலம். ஆதிசேஷன் ஆராதித்து ஆனந்தத்தாண்டவ தரிசனங் கண்ட தலம்.

௬௨. ¶ செய்யூர்.

(கைலாசநாதர், வல்மீகேச்சுரர், பார்வதிதேவி, மரகதாம்பாள், வருணதீர்த்தம், சிவதீர்த்தம்.)

ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகள் பூசித்த தலம். சோழராசனுக்குப் பிரத்தியட்சமாகி ஆலயங்கட்டி வைத்த தலம்.

௬௩. ¶ திருப்புலிவனம்.

(வியாக்கிரபுலீச்சுரர், சிற்றுடைசேரடித்தாயார், வியாக்கிரதீர்த்தம்.)

வியாக்கிரம் பூசித்த தலம். கற்பூர வர்த்தனுக்கு சொப்பனம் சாதித்து, அவனால் கோயில் கட்டச்செய்து, அவனுக்கு முத்தியளித்த தலம். சகர சக்கரவர்த்தி பூசித்த தலம். சிலையுடனிருக்கும் லிங்காகாரத் தலம்.

௬௪. ¶ பெருமுக்கல்.

(முக்கியாசலேச்சுரர், காமாட்சி, வால்மீகிதீர்த்தம், அகத்தியதீர்த்தம்.)

பார்வதி தேவியும், வால்மீகரும் பூசித்த தலம். இதற்கு முக்கியாசல மென்றும் பேருண்டு.

௬௫. ¶ வாயலூர்.

(வியாக்கிரபாதேச்சுரர், பார்வதிதேவி, கூபதீர்த்தம்.)

வியாக்கிரபாதர் பூசித்ததலம். சௌரிய மகாராசன் கொண்டுவந்த காசிகங்கையை இத்தலத்தி லபிஷேகஞ்செய்ய சொற்பனஞ் சாதித்து அவ்விராசனுக்கு முத்தி யளித்ததலம்.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்

௬௬. ¶ பரமேஸ்வரமங்கலம்.

(கைலாசநாதர், சௌந்தரியநாயகி, கூபதீர்த்தம்.)

லட்சுமிதேவி சௌந்தரிய நாயகியென்னும் பெயரடைந்து பரமசிவனைப்பூசித்துத்தவம்புரிந்துவிவாகம் செய்து கொண்ட தலம்.

௬௭. ¶ தையூர்.

(ஸ்கந்தேச்சுரர், மரகதவல்லியம்மை, சந்திரபுஷ்கரணி.)

சூரபத்மனென்னும் அரக்கனை வதைத்த ஸ்ரீசுப்பிரமணியருக்குத் தரிசனங்கொடுத்து இரட்சித்தத் தலம்.

௬௮. ¶ திருப்போரூர்.

(ஸ்ரீசுப்பிரமணியசுவாமி, வள்ளியம்மை, தெய்வயானையம்மை, பிரணவாமிர்ததீர்த்தம்.)

ஓர்காலத்தில் இராட்சசாளுக்கும் கலிக்கும் அஞ்சி, நாலுவேதங்களும் பூசிக்கப் பரமசிவன் அவற்றை உருத்திர கோடீசுரமென்னும் திருக்கழுக்குன்றமலை யுருவாக்கி, அதன்பேரில் தான் வீற்றிருக்கின்றனர். இதைக்கண்ட பிரணவம் பரமசிவனை வேண்டி தன்னையும் அவ்வாறு ஆட்கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்க, திருப்போரூரில் தன் குமாரனிடம் செல்லும்படி ஆக்கியாபித்தனர். அப்படியே பிரணவம் திருப்போரூருக்குப்போய் ஸ்ரீசுப்பிரமணியக் கடவுளைக் குறித்துத் தவம்புரிய, அவர் பிரத்தியட்சமாகி அப்பிரணவத்தைப் பிரணவாத்திரியென்னும் மலையுருவமாக்கி, அதன்மேல் ஸ்கந்தேஸ்வரனைப் பிரதிஷ்டை செய்த தலம். பிருகு மகாமுனி சாபத்தால் வேப்பமரமாய் அவதரித்த இலக்குமி தேவியை இரட்சித்த நிம்பவினயகர் வசிக்குந் தலம். சூரனுடன் போராடிய தலம். சிதம்பரசுவாமி, குமரகுருசுவாமி முதலியோர் பூசித்ததலம். பிரதிவருஷ ஆடிமாச கிருத்திகையில் சகல தேவர்களும், முனிவர்களும், ரிஷிகளும் மானிடர்களும் வந்து பூசிக்குந்தலம்.

௬௯. ¶ இளையனார்வேலூர்.

(பாலசுப்பிரமணியமூர்த்தி, பாகுநதி.)

கஸ்யப மகாமுனிவர் செய்யும் யாகத்துக்கு இடையூறு செய்த மலையன், மாரன் என்னும் இரண்டு ராட்சதாளைச் சங்கரிக்கும்படி பரமசிவன் ஆக்கியாபிக்க, ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகள் அவாள்பேரில் எறிந்த பல்லியம் அவாளைக் கொன்று பூமியில் படிந்த தலம். இளையன்-பாலியன், வேலன்-சுப்பிரமணியன்.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறுதலைகள்.

ரு ¶ நெடியம்.

(செங்கல்வராயசுவாமி, வல்லிநாயகி, இந்திரதீர்த்தம்.)

இந்திராதி தேவர்களுக்குக் காட்சி கொடுத்து அபயம் அளித்ததலம்.

ருக. ¶ ஆண்டார்குப்பம்.

(பாலசுப்பிரமணியசுவாமிகள், பாலாம்பிகை.)

பூர்வம் பிரமதேவனைத் தண்டித்தாட்கொண்ட காலத்தில் கொண்டருளிய கோலத்தோடு (அதாவது இரண்டு கைகளையும் இரண்டு தொடைகளின் மேல்வைத்து நின்ற திருக்கோலமா யிருத்தல்) ஒரு பத்தனுக்குக் காட்சி கொடுத்தருளிய தலம்.

ருஉ. ¶ சங்கமங்கை.

(சங்கமங்கைநாதேச்சுரர், உலகநாயகியம்மை, அற்புததீர்த்தம்.)

(சாக்கியநாயனார்,) ஐப்பசிமாதத் திருவோணத்திற் புத்தமதத்திற் றிருவவதாரஞ் செய்தருளி, அம்மதத்தார் வழியொழுகுவோர் போல நடித்து, உள்ளன்பால் சிவபெருமான்மீது கல்லெறியுந்நியமம் பூண்டு கல்லே மலராக அருச்சித்து, மார்கழிமாதப் பூராடத்தில் முத்தி பெற்றதலம் திருவேகம்பத்துக்குக் கிழக்கே ஓர் ஏரிக்கரையி லிருக்கின்றது.

தொண்டைநாடு முற்றிற்று.

---

இந்நாட்டில் திருப்பதிகம் பெற்றதலம். (௩உ) புராதனதலம் (௬௪) சுப்பிரமணியத்தலம். (௬) ஆக (௱உ) இதில் முத்தியடைந்த நாயன்மார், எழுவர்.

---

¶ இக்குறியிட்டதலங்கள் பாடல்பெறாதனவகள்.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# மகதநாடு அல்லது நடுநாடு.

---

## க * திருஅண்ணுமலை.

(அருணசலேச்சுரர், உண்ணுமுலையம்மை, பிரமதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், உமையவல்லிதீர்த்தம்,—தேய்விலிங்கம்.)

சிவபெருமான் வல்லாள ராஜனுக்குப் புத்திரனுகத் தோன்றி, உத்தரகிரியை யாவுஞ் செய்த தலம்.

இரண்டாம் பிராகார மேற்புறத்தில் விஷ்ணு புள்ளாங்குழல் வாயில் வைத்தூதிக் கொண்டிருக்குந்தலம். இவ்வாறே திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள் பதிகத்திலுங் கட்டளை யிட்டிருக்கின்றது.

யாம்பிரமம், யாம்பிரமமென்று போராடிய பிரமா, விஷ்ணுக்களுக்கு இடையே அழற்றூணுயெழுந்து அநுக்கிரகித்து அவர்கள் வேண்டுகோளின்படி, கார்த்திகைமாதக் கிருத்திகையிற் சோதி தரிசனங் கட்டளையிட்டருளிய தலம்.

ஈஸ்வரி, சிவபெருமானது திருநேத்திரங்களைத் திருக்கரத்தினுல் மறைத்த பாவம் நீக்கவேண்டுமாய்த் தவஞ்செய்து இடபாகம் பெற்ற தலம். ஸ்ரீமன்மாணிக்கவாசக சுவாமிகள், "திருவெம்பாவை" "திருவம்மானை" பாடியருளிய தலம்.

(அருணகிரியார்) பட்டினத்துச் சுவாமிகளது வீரியத்தாற் றிருவவதாரஞ் செய்தருளி, முருகப்பிரானிடத்து அன்புடையோராய் "திருப்புகழ்" முதலிய அனேக பிரபந்தங்கள்பாடி யருளியதலம்.

பிரதட்சணம்வந்த புழு, பூனை, அசுவமுதலியவைகள் தேவகணமான தலம்.

இம்மலை கிரேதாயுகத்தில் அக்கினி மலையாயும், திரேதாயுகத்தில் சுவர்னமலையாயும், துவாபரயுகத்தில் தாம்பிர மலையாயும், கலியுகத்தில் கல் மலையாயு மிருக்கின்றது. இத்தலம் நினைக்க முத்தித் தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ரு.

—இதற்குத் தென்கிழக்கு சுயி - மைலில்,

## உ. * திருவாமாத்தூர்.

(காமார்த்தேச்சுரர், அழகியநாயகியம்மை, பசுத்தீர்த்தம், வன்னிவிருட்சம்.)

கோடிமகாரிஷியும் காமதேனுவும் பூசித்த தலம். பசுக்களுக்குத்

தாயகமான தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ரு.

—இதற்கு மேற்கு ரு - மைலில்,

௩. * திருப்பனங்காட்டூர்.—(பனையபுரம்.)

(பனங்காட்டேச்சுரர், அமிர்தவல்லியம்மை, அமிர்ததீர்த்தம்.)

வித்தியாதரர் பூசித்ததலம். சிபிச்சக்கரவர்த்திக்குத் தரிசனந் தந்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருபபதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு ௰எ - மைலில்,

௪. * திருமுண்டீச்சுரம்.

(முண்டீச்சுரர், கானார்குழலியம்மை, கண்ணுயிரத்தீர்த்தம்.)

தேவேந்திரன் பூசித்த தலம். பிரமதேவனுக்கு பிரமஹத்தி போக்கிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு எ - மைலில்,

ரு. * திருப்பாதிரிப்புலியூர்,—(பாடலீபுரம்.) பாதிரிவிருக்ஷம்.

(தோன்றாத்துணையீச்சுரர், தோகையாம்பிகையம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

வியாக்கிரபாதரிஷி பூசித்தகாரணத்தால் இதுவடபுலியூ ரெனவும்வழங்கும்; திருநாவுக்கரசுசுவாமிகள் சமணர்களாற் கற்றூணிலார்த்துக் கடலிற்பாச்சியபோது, "சொற்றுணைவேதியன்" என்னும் பதிகம்பாடி அக்கல்லே புணையாகக்கரையேறியதலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தென்மேற்கு எ - மைலில்,

சு. * திருமாணிகுழி. (திருமாண்டகுழி என மருவிவழங்கும்.)

(மாணிக்கமேனிவரதேச்சுரர், மாணிக்கவல்லியம்மை, பெண்ணைநதிதீர்த்தம், கொன்றைவிருட்சம்.)

வாமனவதாரத்தில் சிவபக்தனாகிய பலிச் சக்கரவர்த்தியை மோசஞ் செய்து பாதாளத்தி லமிழ்த்திய பாவம்போக விஷ்ணு மாணிக்கத்தைவைத்துப் பூசித்த தலம். அமிர்தம் பங்கிட்டபோது ஸ்ரீமகாவிஷ்ணுஎடுத்த மோகினி உருவைப் பரமசிவன் ஆலிங்கனஞ் செய்ய, அவ்வுருவில் மூன்றாவது கண், சடை, சந்திரன் முதலிய ஒட்டிக்கொண்டதனால் இங்கிருக்கும். ஸ்ரீமகாவிஷ்ணு சங்கு, சக்கர, கதாதர

ராய், நெற்றியில் நேத்திரமும், சிரசில் சடையும் சந்திரனையும் உடைத்தாய் தேவநாதனென்றும் பூவராகமூர்த்தியென்றும்சொல்லப் படுகிறார். விஷ்ணு, கருடன், இந்திரன் ஆராதித்துப் பேறுபெற்ற தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப் பதிகம்-௧.

—இதற்கு வடமேற்கு ௰௪ - மைலில்,

௭. * திருவடுகூர். (ஆண்டார்கோயில்.)

(வடுகேச்சுரர், பஞ்சநதீச்சுரர், வடுவகிர்க்கண்ணம்மை, திரிபுரசுந்தரி, பெண்ணைநதிதீர்த்தம்.)

உக்கிர விரியரிஷியும், பைரவரும், பூசித்த தலம். திருஞானசம் பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - ௧.

—இதற்குத் தென்மேற்கு ௧ - மைலில்,

௮. * திருத்துறையூர்.

(துறையூரப்பேச்சுரர், பசுபதீச்சுரர், சீட்டகுருநாதர், பூங்கோதையம்மை, சிவலோகநாயகி, பெண்ணைநதிதீர்த்தம்.)

நாரதமாமுனிவர் பூசித்த தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு திருவடி சூட்டியதுந் தவிர, குரு முகூர்த்தமா யெழுந்தருளி யுபதே சஞ்செய்த முகூர்த்தமுள்ள தலம். சந்தான குரவரிலொருவரான, அருணந்தி சிவாசாரியசுவாமிகள் ஆதிசைவமரபிலே சகலாகம பண்டி தனென்னுங் காரணப்பேருடன் திருவவதாரஞ் செய்தருளிச் "சிவஞா னசித்தியார்" "இருபாவிருபஃது" யெனுஞ்சித்தாந்தசாஸ்திரங்களைத் திருவாய்மலர்ந் தருளிப் புரட்டாசி மாதம் பூரநாளில் முத்திபெற்றரு ளிய தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப் பதிகம் - ௧.

—இதற்குத் தென்மேற்கு ௰௪ - மைலில்,

௯. * திருவெண்ணெநல்லூர்.

(தடுத்தாட்கொண்டேச்சுரர், வேற்கண்ணியம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

சாண்டில்ய மகாமுனி பூசித்த தலம். இவ்வாலயத்திற்கு அருட் டுறை என்றும் பெயர். சம்புபத்தரிஷிபூசித்ததலம். ஆலாலசுந்தராகி யசுந்தரமூர்த்தி சுவாமிகளைக்கயிலையிலிருந்து, பூமிக்கு வரும்படியெம் பெருமான் கட்டளையிட்டருளிய பொழுது, யான் மானிட யாய்கை யின் மயங்காவண்ணம், தடுத்தாண்டருளவேண்டுமென்று வேண்டிய விண்ணப்பத்திற்கு அங்ஙனமாருக வென்றனுஞை செய்தபடி, நாயனாருக்குநேமித்த பெண்களிருப்பவும், மணம்வந்த புத்தூர்ச்சடங்

கவி ஐயர் திருமகளாரை மணஞ் செய்ய வெத்தனப்படும் பொழுது சிவபெருமான், விருத்த வேதியரா யாவணங் காட்டித் தடுத்தாண்டு, அடிமை படைத்த தலம்.

சந்தானசாரியரிற்றலைவராகிய "மெய்கண்டசிவாசாரிய" சுவாமிகள் வேளாள மரபிலே சுவேதவனப் பெருமாளெனுந் திருநாமத்தோடு திருவவதாரஞ்செய்தருளிப் பரஞ்சோதி மகாமுனிவராற்சிவதீட்சை பெற்று, "சிவஞானபோதத்தைத்" தமிழில் மொழிபெயர்த்தருளி, நாற்பத்தொன்பதின்மர்களை மாணுக்கர்களாகப்பெற்று, ஐப்பசிமாதச் சுவாதி நாளில் முத்திபெற்ற தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு மேற்கு ந - மைலில்,

௰. * திருவிடையாறு.

(இடையாற்றேச்சுரர், சிற்றிடைநாயகியம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

சுகப்பிரமரிஷி பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ௰ - மைலில்,

௰க. * அறையணிநல்லூர்.

(அறையணிநாதேச்சுரர், அருளுயகியம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

பிரசண்டரிஷி பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு க - மைலில்,

௰உ. * திருக்கோவலூர் வீரட்டானம். (திருக்கோவலூர்.)

(வீரட்டானேச்சுரர், சிவானந்தவல்லியம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

இரணியாட்சனுடைய குமாரனாகிய அந்தகாசுரன் ஓர்காலத்து; யுத்தங் கருதிக் கயிலாசகிரிக்குச்செல்லுழி, அக்காலை தாருகாவனத்து இருடிகள் பொருட்டுச் சிவபெருமான் பிட்சாடனரா யெழுந்தருளத் தேவியார் தனித்திருந்தமைப்பற்றி, விஷ்ணு நந்தியாதியர் பெண்களாய்க் காவல் பூண்டிருந்ததில், அந்தகாசுரன். அம்மையைக் கவரும் பொருட்டு வந்தானென்றுன்னி, நந்தியாதியர் அவனோடு பொருது புறங்கண்டபின்னர், சிவபெருமான் கயிலைக்கெழுந்தருளி, வலப்புறத்து மாலாகிய சத்தியும், இடப்புறத்து உமையாகிய சத்தியுமாக வெழுந்தருளி யிருக்குங்கால், பின்னும் பெருத்த படையுடன் வந்த அந்த

காசுரனைக் காலபைரவனைக்கொண்டு வென்றருளிய தலம். இது அட்டவீரட்டானத்திலொன்று.

(மெய்ப்பொருள்நாயனர்) மன்னவர் மரபில் ஆடிமாத அத்த நாளிற்றிரு வவதாரஞ் செய்தருளி அரசு செலுத்துங்கால், உயுத்தத்திற்றோற்ற பகைவன், வஞ்சகமாகச் சிவவேடம் பூண்டு உபதேசிப்பவன்போல், மறைத்து வைத்திருந்த சுரிகையாற் குத்தி, உயிர்க்குத்தீங்கு செய்யவும், அவனது சிவவேடத்தா லவனைத் துன்பஞ்செய்யாமல், அவன் நகரில் விடுத்து வரும்படி கற்பித்து அச்செய்தி வருமளவும் உயிர்தரித்திருந்து, கார்த்திகைமாதவுத்திரநாளில் முத்திபெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தென்கிழக்கு ௰ரு - மைலில்,

## ௰௩. * திருநெல்வெண்ணெய்.

(வெண்ணெயப்பேச்சுரர், நீலமலர்க்கண்ணம்மை, பெண்ணைநதிதீர்த்தம்.)

சநகர், சநாந்தகர், சநாதனர், சநர்க்குமாரர் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்கிழக்கு உ௰ - மைலில்,

## ௰௪. * திருமுதுகுன்றம். (விருத்தாசலம், பழமலை,)

(பழமலைநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, மணிமுத்தாநதிதீர்த்தம், (வன்னிவிருட்சம்.)

பிரமா, விஷ்ணு, அட்டவசுக்கள் முதலியோர்பூசித்துத் திருநடன தரிசனம் பெற்றதலம். உமையவள், அகத்தீச்சுரர், விபசித்து, சிவனன்னன் எனப்பல அடியவர்களும் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். விஷ்ணு காதுக் குறும்பிகளிற் பிறந்த மதுகைடவர்களெனும் இரண்டு ராக்ஷதர்களும் விஷ்ணுவுடன் யுத்தஞ்செய்ய, அவர்களை ஜெயிக்கும்படி விஷ்ணு பூசிக்க, விருத்தசொரூபமாய்வந்து அநுக்கிரகஞ் செய்தருளியதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானாற் கொடுக்கப்பட்ட பன்னீராயிரம் பொன்னைவழியிற் கொண்டுபோதல் வருத்தமென் றெண்ணித் தாம் வசிக்கும் திருவாரூர்க் குளத்திற் றரவேண்டுமென்று இத்தலத்தின் முக்கிய தீர்த்தமாகிய மணிமுத்தாநதியிற் சொரிந்து அவ்வாறே, குளத்திற் பெற்றுக்கொண்ட தலம். மரணமடையும் ஜெனங்களுக்கு அந்திய காலத்தில் பஞ்சாட்சர

மந்திரத்தைக் காதிலுபதேசிக்குந் தலம். மூவராசாரியராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - கக.

—இதற்கு வடக்கு உய - மைலில்,

## ய௫. * திருநாவலூர்.

(திருநாவலேச்சுரர், சுந்தரநாயகியம்மை, சிவகங்கைதீர்த்தம், நாவல்விருட்சம்.)

பார்வதி, மகாவிஷ்ணு, சண்டேசர், சுக்கிரன் முதலியோர்கள் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கயிலாய கிரியில் சிவபெருமான் தேவியாரோடு, ஆடி நோக்குங்காற்றோற்றிய பிரதி விம்பத்தை யழைத்தருள, வந்தவராகிய ஆலாலசுந்தரர் சிவபெருமானுக்குத் திருநீறு மாலிகையுமெடுத் தணியுந் திருத்தொண்டினிற்பவர், பூக்கொய்ய, நந்தனவனஞ் செல்லுழி, அவ்வாறே அம்மைக் குவந்த சேடியராகிய, அநிந்திதை, கமலினி என்பவர்களைக் கண்ணுற்ற காரணத்தாற் சிவாஞ்ஞைப்படி ஆனிமாத உத்திரத்தில் ஆதிசைவகுலத்திற் றிருவவதாரஞ் செய்தருளிய தலம்.

(சடையநாயனர்) ஆதிசைவகுலத்தில் ஆடிமாதப் புனர்பூசத்திற் றிருவவதாரஞ் செய்தருளிச் சுந்தர மூர்த்தி சுவாமிகளைத் திருமகனாகப் பெறும் பேறுபெற்றுச் சிவகைங்கரியமும்புரிந்து, மார்கழிமாதத் திருவாதிரையில் முத்திபெற்ற தலம்.

(இசைஞானியார்) ஆதிசைவகுலத்தில் ஐப்பசிமாத மூலநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, சடைய நாயனருக்குத் திருமனைவியராய்ச் சுந்தர மூர்த்தி சுவாமிகளை யீன்றருளிச் சித்திரைமாதச் சித்திரை நாளில் முத்திபெற்ற தலம்.

(நரசிங்கமுனையரையநாயனர்) மாசிமாத உரோகிணியிற் குறுநில மன்னவர் மரபிற் றிருவவதாரஞ் செய்தருளி, நாடுகாத்துநம்பியாரூரரை மகன்மை படைத்து, அடியார் பூசையிலொவ்வொருவருக்குந் தினம் நூறுநூறு பொன்கொடுப்புழி, மார்கழி மாதத் திருவாதிரையில் வந்த காமுகர் ஒருவர், விபூதியணிந்திருந்தமைநோக்கி யிருநூறு பொன்கொடுத்து வழிபட்டுச் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகத்திற் போர்குறிக்கும் பெருவாழ்வையும் பெற்றுப் புரட்டாசி மாதச் சதையத்திற் சிவபுரமடைந்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடகிழக்கு ய௫ - மைலில்,

௰௬. * திருவதிகைவீரட்டானம். (திருவதிகை.)

(திருவதிகைவீரட்டானேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை, செடிலநதி, சூலகங்கை, சக்கரதீர்த்தம், சரக்கொன்றைவிருட்சம்.)

கருடன், பிரமா, விஷ்ணு, பஞ்சபாண்டவர் பூசித்த தலம்.

வித்துன்மாலி, தாருகாட்சன், கமலாட்சன் என்னும் பெயரையுடைய திரிபுராதிகள்செய்யு மிடுக்கணுக்கஞ்சி விஷ்ணுவினிடத்து முறையிட்டதேவர்கள்பொருட்டு, அசுரர்கள்சிவபூசாதரர்களா யிருத்தல்பற்றி யவர்களை வெல்வதரிதென்று, விஷ்ணுவானவர், புத்தராய்ப் போந்து, அவர்களைப் புத்தராக்கியும் வெல்லற்கரிதாய்த் தேவர்கள் யாவருஞ் சிவபெருமானிடத்து முறையிடச் சிவபெருமான் அத்தேவர்களது, உதவிசிறிதுமின்றி அத்திரிபுராதிகளை பினாகபாணியாகித்தானுந் தேவியுந்தட்சணமுகமாகஇருந்துநகைத்தெரித்ததலம். இது அட்டவீரட்டானத்தி லொன்று.

(திருநாவுக்கரசுசுவாமிகள்,) இத்தலத்துக்கு மேற்கு எ-மைலில் பசுபதீச்சுரருக்குந் திரிபுரசுந்தரி யம்மைக்கும் வாசத்தானமாகிய கோயிலுள்ள திருவாமூரில், வேளாளகுத்தில், புகழனார், மாதினியாரென்பவர்கள்பால், பங்குனிமாத உரோகிணியிற் றிருவவதாரஞ் செய்து, மருணீக்கியாரென்னும் பெயர் பூண்டெழுந்தருளி யிருந்து, தந்தைதாயார் சிவபதமடைந்த பின், சைவசமயம் விடுத்து, அமண்சமயங்குறுகி அங்குத் தருமசேனரென்னும் பெயரோடு சமண்சமயாசாரியராய்ப் புத்தாதி மதங்களைவென்று விளங்குகையில், அவரது சோதரியாராகிய திலகவதியார் வேண்டுகோளின்படி, சூலைநோயால்அமண்சமயப் பற்றையொழிவித்துச் சைவராகிச் சிவபெருமான்திருவாக்கால் "திருநாவுக்கரசு" என்னும் நாமஞ்சூட்டிப் பதிகம் பாடப் பெற்றருளிய தலம்.

அரசுகள் இவ்வாறு சைவராய் விளங்கிய தன்மையைக் கண்டு பொறாத சமணர்கள் தம்மதச்சார்பா யிருந்த பல்லவ ராசனிடத்து மாறுபாடா யறிவித்து அரசுகளைத் தண்டிக்கும்படியேவ, அரசன் அவ்வாறே யவரைக் கொணர்வித்து ஏழுநாள்வரையி னீற்றறையிலிடுவிப்பச் சிவத்தியானத்தால், துன்புறாதுய்ந்த அந்நாயனாருக்கு, அவ்வரசன் சமணர்களேவலால் நஞ்சூட்ட, அதனையும் அருளால் உண்டருளிய திருநாவுக்கரசு சுவாமிகளை மதயானையாற் கொல்விக்கச்செய்ய, அவ்யானை யவரை வணங்கிப் பாகர் முதலியோரை யெற்றிச் சமணர்களைத் தள்ளி மிதித்தெறியப் பின்னுமவர்கள் வேண்டுகோளால்

அரசன் கற்றூணிற் கட்டிக் கடலிற் பாச்ச, அதனையே தெப்பமாகக் கொண்டு கரைசேர்ந்தநாயனர் பலதலம் வணங்கி இத்தலத்தெழுந்தருளியிருக்கும் பொழுது, அப்பல்லவராசன் சமண்சமயம் பொய்யெனத் துறந்து, சைவசமயம் புகுந்ததலம். அரசு சுவாமிகளை நீற்றறையிலிட்ட விடம் இப்போது ஓடையாக வி[illegible]றது. அதுதான் சக்கரதீர்த்தம்.

இதிற்குணதரவீச்சுரம் என்னும் ஆலயமு மிருக்கிறது, அது காடவனெனு மரசன் சமண் சமயம் பொய்யென் றுணர்ந்தமைப்பற்றிச் சமணர்க ளாலயஞ் சிறந்து விளங்கிய பாடலிபுத்திரத்தை யழித்துச் சமைத்தருளியது.

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் திருநடன தரிசனங் கட்டளை யிட்டருளிய தலம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சித்தவடமடத்திற் றிருவடித் தீட்சை செய்தருளிய தலம்.

(மனவாசகங்கடந்தார்) சந்தானசாரியரு ளொருவராகிய மெய்கண்ட தேவரிடத்துத் தீட்சை பெற்றருளி "உண்மை விளக்க மென்னும்" சித்தாந்த சாத்திரஞ் செய்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௰அ.

—இதற்குத் தென்கிழக்கு உ௫ - மைலில்,

௰எ. * திருஅச்சோபுரம். (தியாகவல்லி.)

(சோபுரநாதேச்சுரர், சோபுரநாயகியம்மை, பரமதீர்த்தம்.)

தம்பிரான் கண்ட தலம். அகத்தியமுனிவர், பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு எ - மைலில்,

௰அ. * திருத்தினைநகர்.

(திருநீச்சுரர், ஒப்பில்லாநாயகியம்மை, கெடிலநதி, மணிமுத்தாநதிதீர்த்தம், கொன்றைவிருட்சம்.)

மறைமுனிவர் பூசித்த தலம். தினை யமுது நைவேதனம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு உஅ - மைலில்,

௰௯. * திருஎருக்கத்தம்புலியூர் (நாகேந்திரபட்டினம்.)

(நீலகண்டநாயகேச்சுரர், நீலமலர்க்கண்ணியம்மை, மணிமுத்தாநதிதீர்த்தம்.)

நாகராசன் பூசித்ததலம். வெள்ளெருக்கன்செடியின்கீழ் சுவாமி யுற்பவம்.

(திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனர்) ஐப்பசிமாத வைசாக நாளில் யாழ்ப்பாணர்குலத்திற் றிருவவதாரஞ்செய்தருளித்திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருக்கூட்டத்தி லொருவராய், அச்சுவாமிகளது திருப்பதிகங்களை யாழிலமைக்கும் பெரும்பேறு பெற்று, வைகாசிமாத மூலநாளிற் பெருமணத்தில் நடந்த, அச்சுவாமிகள் திருமணத்தில் மனைவியாரோடு முத்தியடைந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு அ - மைலில்,

## உ௰. * திருக்கூடலையாற்றூர்.

(நெறிகாட்டும்நாயகேச்சுரர், புரிகுழலாம்பிகையம்மை, சங்குதீர்த்தம், மணிமுத்தாநதிதீர்த்தம்.)

வான்மீகரிஷி பூசித்த தலம். வடமேற்கிலிருந்து மணிமுத்தாநதியும், தென்மேற்கிலிருந்து நீவாநதியுங்கூடி கிழக்கே போகின்றபடியாலிதற்குக் கூடலையாற்றூரென்று பெயர் வாய்த்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருமுது குன்றத்துக்குப்போகும் பொழுது சிவபெருமான், ஓர் வேதியராய்த்தோன்றி, இது கூடலையாற்றூர் மார்க்கமாய் விருத்தாசலத்துக் கேகும்வழியென்று அச்சுவாமிகளை வழிமறித்தழைத்து, அவராற் பதிகம் பெற்றருளிய தலம். திருப்பதிகம்-க.

—இதற்கு மேற்கு ௰சு - மைலில்,

## உக *திருத்தூங்கானைமாடம். (திருக்கடைந்தைநகர், பெண்ணாடகம்.)

(சுடர்க்கொழுந்தேச்சுரர், கடந்தைநாயகியம்மை, கெடிலநதி தீர்த்தம், கஜவிமானம்.)

சப்தகன்னிகையர், வெள்ளையானை, தேவேந்திரன், காமதேனு பூசித்ததலம். (கலிக்கம்பநாயனர்,) வைசியர் குலத்தில் மார்க்கழிமாதப் பூரட்டாதிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவனடியாரைப் பூசிக்குந் திருத்தொண்டு செய்துவருங்கால் ஓர்நாள் ஓரடியவர், முன் தம்பணி செய்திருந்தவராக, நாயனரது மனைவியார், பாதப் பிரச்சாடனத்திற்கு நீர்வார்க்கத் தாழ்த்தமைகண்டு சிவனடியாரைப் பழமை நினைந் திகழ்ந்தனரென்று அவரது கரத்தைச் சேதித்துத் தைமாத இரேவதிநாளில் முத்தி பெற்றதலம். திருநாவுக்கரசுசுவாமிகள் சமண்மதத்திருந்த தமது உடற்றீங்ககற்றும்பொருட்டு இருதோளிலும், சூலம் விடைஎன்னும் இலச்சினை சூடவேண்டியபடி யநுக்கிரகித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ.

இதற்குத் தென்மேற்கு சு-மைலில்,

## ௨௨ * திருநெல்வாயில் அறத்துறை.

(அறத்துறைநாதேச்சுரர், ஆநந்தநாயகியம்மை, கெடிலநதி தீர்த்தம், வெள்ளாறு.)

சப்தரிஷிகளும் தேவேந்திரனும் பூசித்ததலம். திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள், பெண்ணாடகத்திலிருந்து இத்தலத்திற் கெழுந்தருளவுன்னி, அதுகாறுந் தமது தந்தையார் தோண்மீது சென்ற, அவர் அங்கிருந்தும், பாதசாரியாய் நடந்து மாறன்பாடியை யடைய, அவரது பாதங்கள் சிவந்து வருந்தியதைத்திருவுளங்கொண்ட, அறத்துறைநாதர், தமது ஆலயத்தில் முத்துச்சிவிகையு முத்துக்குடையு முத்துச்சின்னங்களும் வைப்பித்து, அவ்வூர் அடியவர்கட்குக் கனவின்கட் டோன்றி அவைகளைத் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு அளிக்கும்படி கட்டளை யிட்டருளியபடியே மறுநாள் கவுணியர்கோன், அவைகளைப்பெற்றுத் திருப்பதிகமருளிய தலம். ஆதித்துறைகாரியனூர், அதன்கிழக்கு திருவாலத்துறை, அதன்கிழக்குதிருமாந்துறை, அதன் கிழக்கு ஆடுதுறை, அதன் கிழக்கு திருவதிட்டத்துறை என்னுந் திட்டக்குடி, அதன் கிழக்கு அறத்துறை, அதன் கிழக்கு திருக்கைத்துறை. இந்தத்துறை யேழும் சப்தவிருடிகள் பூசைசெய்ய வேண்டியதற்கு "நீவா" வென்று கூப்பிட்டதாகஐதீகம். ஆனதால் நீவாநதி யென்றும் அந்நீவாநதியே வெள்ளாறென்றும் வழங்குகின்றது. சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.

## ௨௩ ¶ கரையேறவிட்ட நல்லூர்.

(திருக்காட்சிநாதேச்சுரர், தரிசனம்பிகையம்மை, கெடிலநதிதீர்த்தம்.)

தேவர்கள் பூசித்த தலம். மாணிக்கவாசகசுவாமிகள் வடபுலியூரைத்தரிசிக்க வரும்போது, கெடிலநதிபெருகிக் குறுக்கிட்டதைச் சிவபெருமான் ஓர் சித்தராய்வந்து வழிவிடுத்தருளிய தலம்.

## ௨௪ ¶ வில்லிவாக்கம்.

(இராதமார்ஜாலேச்சுரர், பார்வதிதேவி, புண்டரீகபுஷ்கரணி.)

அகத்தியர், பிரமா, இந்திரன், சந்திரன், விஷ்ணு முதலியோர் பூசித்ததலம் கங்கைபூசித்துப் பேறுபெற்றதலம்.

## ௨௫ ¶ கோபுராபுரம்.

(கோபர்வதேச்சுரர், ஆதிசத்தீஸ்வரி, ஈசானியகங்கைதீர்த்தம்.)

விருத்தாசலத்தின் ஒரு சிகரமாகிய கோபர்வதத்தில் பார்வதிதேவியார் பூசித்த தலம்.

---

¶ இக்குறிப்பிட்ட தலங்கள் பாடல்பெறாதவைகள்.

உரு. ¶ திட்டுகுடி.

(வைதியநாதேச்சுரர், அசனும்பிகை, சத்திதீர்த்தம்.)

இந்தத்தலத்தில் தேவர்கள், ரிஷிகள் முதலியோர் பிரதிஷ்டை செய்த உ௰ரு - சிவலிங்கங்களும், அவர்கள் ஏற்படுத்திய உ௰௪ - தீர்த்தங்களுமிருக்கின்றன. பிரமதேவர் பூசித்துத் தன் குமாரனாகிய வசிஷ்டருக்குப் பஞ்சாட்சரமந்திரம் சாங்கோபாங்கமாக உபதேசிப்பித்த தலம் காக்காசூரன் விசுவாமித்திரர் சொற்கேட்டு வசிட்டருக்கிடையூறுசெய்ய, அவர் அவ்வூரில் காக்கை யில்லாதிருக்கச் சபித்த தலம். பார்வதிதேவியாரும் சீதாதேவியாரும் பூசித்த தலம். குசலவாள் வசிட்டரிடத்தில் வித்தியாப்பியாசஞ் செய்து அஸ்வமேதயாகம் செய்த ஸ்ரீராமன் முதலானவர்களுடன் யுத்தஞ் செய்த தலம். அக்கினிதேவன் பூசித்து அசீர்ணரோகம் போக்கடித்த தலம். ஸ்ரீராமர் பூசித்ததலம்.

உஎ. ¶ இருஷீவந்தியம்.

(அர்த்தநாரீச்சுரர், முத்தாம்பிகை, ஞானபோதபுஷ்கரணி.)

பார்வதி தேவியார் பூசித்து பரமசிவன் அர்த்த பாகம் பெற்ற தலம். பிரமா, விஷ்ணு முதலான சகல தேவர்களும் ஸ்ரீராமரும் பூசித்த தலம்.

உஅ. ¶ உளுந்தூர்—(மாஷபுரம்.)

(மாஷேச்சுரர், லோகநாயகி, ஞானோதயதீர்த்தம், சுப்பிரமணியதீர்த்தம்.)

அகத்தியருக்கு வில்வல வாதாபி என்னும் இராட்சசரை, வதைத்தபாபம்போக்கியதலம். தனதன் என்கிற வர்த்தகன்கொண்டு வந்த மிளகு மூட்டைகளை உளுந்துமூட்டைகளாக்கி பின் மிளகுமூட்டைகளாக்கிய தலம்.

உகூ. ¶ இலவானூர்.

(இராமார்த்தநாதர், பிரகன்நாயகி, சிலாதீர்த்தம், தண்டதீர்த்தம்.)

பிரமதேவன், மார்க்கண்டேயர் பூசித்துப் பேறடைந்த தலம். குமாரசுவாமி யாகஞ்செய்த தலம். வேதிகைமகாராஜனுக்குக் காட்சி கொடுத்து அவன் தானஞ்செய்த அக்கிராரங்களில் பாதிதானம்[illegible]க்கிக்கொண்ட தலம்.

௩௰. ¶ கூவனூர்.

(அகத்தீச்சுரர், கற்பூரவல்லி, சந்திரபுஷ்கரணி, அகஸ்தியதீர்த்தம்.)

அகஸ்தியர் முதலிய முனிவர்களும் பூசித்து தம்தம் மனோபீஷ்

¶இக்குறிப்பிட்ட தலங்கள் பாடல்பெறாதவைகள்.

டங்களை அடைந்ததலம். சந்திரனுக்கு, குருபாரியாள் கமனதோஷம் நிவர்த்தித்த தலம்.

௩௧. ¶ வரஞ்சரம்.

(பசுபதீச்சுரர், பாலகுசாம்பாள், மானசசரசு, கோமுகநதி.)

காமதேனுபூசித்து பேறுபெற்றதலம். இராவணாசுரனுக்கு ஈஸ்வரன்கொடுத்த பார்வதியையும் சூலாயுதத்தையும் விஷ்ணு மாயையால் போக்கடித்து மண்டோதரியையும் வேறொருசூலாயுதத்தையும் பெற்றதலம்.

௩உ ¶ உடையூர்.

(பசுபதீச்சுரர், அகிலாண்டேஸ்வரி, க்ஷீரபுஷ்கரணி, திருவேணிசங்கம்.)

கௌதமர் பூசித்து பஞ்சகாலத்தில், ௰உத - பிராமண குடும்பங்களை இரட்சித்த தலம். காயத்திரி பூசித்து சாபத்தினுல் பசுரூபமாயிருந்ததைநிவர்த்தித்த தலம்.

௩௩. ¶ ஓங்காரபுரம்.

(சிவகௌரீச்சுரர், நீலாயதாட்சி, கருடதீர்த்தம், ஜாம்புவந்ததீர்த்தம், கௌரிதீர்த்தம்.)

பதஞ்சலி, வியாக்கிரபாதர், பார்வதி பூசித்து நடனதரிசனங் கண்டதலம். துருவாசரால் பிருங்கிமகாரிஷிக்கு நேரிட்டசாபத்தைப் போக்கடித்த தலம். கருடன்பூசித்து அமிர்தங் கொண்டுவரச் சக்தி பெற்ற தலம். ஜாம்புவந்தர் ஆராதித்து பேறு பெற்றதலம்.

௩௪. ¶ கூடலூர்.

(கூடபுரீச்சுரர், பார்வதி, சிவதீர்த்தம், பிரமதீர்த்தம், இலக்குமிதீர்த்தம்)

பிரமா, இலட்சுமி, ஸ்ரீராமர், தேவேந்திரன், அகத்தியர் முதலியோர் பூசித்து பேறுபெற்ற தலம்.

௩௫ ¶ விலையனூர்

(காமேச்சுரர், கோகிலாம்பாள், சேஷதீர்த்தம், இருத்தாபநாசினி.)

மன்மதனும் இரதியும் பூசித்து அவரவர் வேண்டும் வரங்களடைந்த தலம். தேவேந்திரனும் ஆதிசேஷனும் பூசித்ததலம்.

௩௬. ¶ மைலாசலம்.—(மைலம்-)

(ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிகள், வள்ளியம்மை, தெய்வானையம்மை, ஈசானதீர்த்தம், சரவணப்பொய்கை.)

ஸ்ரீசுப்பிரமணியசுவாமிகள் வாகனமாகிய மயில்தவஞ்செய்ததலம். அகத்தியருக்குப் பிரணவார்த்தத்தை உபதேசித்த தலம்.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதவைகள்.

## ௩எ. ‡ திண்டிவனம்.

(தின்திரிவனேச்சுரர், மரகதாம்பிகை, நரசிம்மதீர்த்தம், வருணதீர்த்தம்.)

பிரமா யாகஞ் செய்யும் போது, பிரதிஷ்டைசெய்ததலம். திண்டி, முண்டி, கிங்கிலி, கிலாலன், மகரிஷி என் ஐந்து தபசிகள் பூசித்ததலம். நரசிம்மசுவாமி ஆராதித்த தலம்.

## ௩அ ‡ செங்கமா.

(விருஷபேச்சுரர், பிரகத்குசாம்பிகை, தாண்டவதீர்த்தம்.)

மித்திரமகாமுனி ஆச்சிரமம். இதில் பரமசிவன் மித்திர மகாமுனிக்கு பிரதிதினம் ஒரு நெல்லிக் கனியை யுற்பத்தி செய்ய, அதை அவர் புசித்து தவஞ்செய்து வந்தனர். ஓர் நாள் வனவாசஞ் செய்திருந்த பஞ்சபாண்டவாள் அங்குவர, அந்த பழத்தைப் பார்த்து திரௌபதி யபேட்சித்து அருச்சுனனுடன் சொல்ல, அவன் வில்லாலடித்து அதை விழச்செய்யவும், தருமருக்குத் தெரிந்து மோசம் வந்ததென ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைத் தியானிக்க, அவர் வந்து மாத்தியானிக ஸ்நானத்துக்குப்போயிருக்கும்மித்திர மகாமுனி வருவதன் முன், இக்கனியை மரத்தில் ஒட்டச் செய்ய வேண்டு மென்று அந்த ஐவருடைய மனோபாவங்களை யதார்த்தமாகச் சொன்னபோது அந்தப்பழம் மேலே யெகிறி மரத்தில் ஒட்டிக்கொண்டது. மித்திரமகாரிஷிவந்து, அந்தக் கனியை வேறொருவர் தொட்டார்களென கியான திருஷ்டியாலறிந்து, அதை யேற்காது, பரமசிவனைத் தியானிக்க, அவர் ரிஷப வாகன ரூடராய் வந்து அந்த பழத்தை திரௌபதிக்குக் கொடுத்து முனிவருக்கு மோட்ச மளித்த தலம்.

## ௩௯. ‡ தேவகிபுரம்.

(கனசகிரீச்சுரர், பிரகன்னயகி, நவக்கிரக தீர்த்தம், அஷ்டதிக்பாலகர்தீர்த்தம்.)

கஸ்யபர், அத்திரி, பரத்துவாசர், விசுவாமித்திரர், அகத்தியர், புலத்தியர், கௌதமர், ஜமதக்கினி, வதிஷ்டர் முதலிய முனீச்சுரர் பூசித்த தலம். சூரியன் முதலிய நவக்கிரகங்கள் ஆராதித்து ராவணனால் நேரிட்ட வுபாதி நீக்கிய தலம். இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர் பூசித்து வேண்டும் வரங்களை யடைந்த தலம். தேவகிதேவி பூசித்து ஸ்ரீமன் நாராயண மூர்த்தியே தனக்குப் புத்திரனாகும்படி வரம் பெற்ற தலம்.

## ௪௰. ‡ காமக்கூர்—(காமபுரம்.)

(சந்திரசேகரர், அமிர்தாம்பிகை, ஈசானதீர்த்தம், அக்கினிதீர்த்தம்)

மன்மதனும் அக்கினிதேவனும் பூசித்து அனுக்கிரகம்பெற்றதலம்.

‡ இக்குறிப்பிட்ட தலங்கள் பாடல்பெறுதலைகள்.

௪௧. ‡வேணுகுன்றம்.—(இதற்கருகில் தவளகிரி யிருக்கின்றது.)

(தவளகிரீச்சுரர், பர்வதவதினி, பிரமதீர்த்த முதலிய நான்குதீர்த்தம்.)

பதஞ்சலி முனியும் வியாக்கிரபாத முனியும் ஆராதித்து இஷ்ட சித்தி யடைந்த தலம். பிரமா முதலிய தேவர்கள் பூசித்த தலம்.

௪௨. ‡வரபுரம்.

(நேத்திரோத்காரகேச்சுரர், சத்தியாம்பிகை, சிவகங்கைதீர்த்தம்.)

சிபிச் சக்கரவர்த்தி தர்ம மார்க்கம் தவிராமல் இராச்சிய பரிபாலனஞ்செய்கிறனென்று ஈஸ்வரனும், ஈஸ்வரியும், வேடன், பட்சி ரூபங்களாகவந்து பரிட்சித் தனுக்கிரகஞ் செய்த தலம்.

௪௩. ‡மாதூர்.

(இராமநாதேச்சுரர், திரிபுரசுந்தரி, கங்காதீர்த்தம், வாயுதீர்த்தம்.)

சிவாக்கினைப்படிக்கு பார்வதி தேவியார் மகிஷாசுரனை வதைத்த தலம். ஸ்ரீராமர் வஞ்சனையினல் வாலியைக்கொன்ற தோஷம்போக்க பூசித்துப்பேறுபெற்ற தலம். அனேக ரிஷிகள் பூசித்ததலம்.

௪௪. ‡கோட்டைக்குப்பம்.

(புண்ணிய கோடீச்சுரர், அன்னபூரணித்தாயார், புண்ணியகோடித்தீர்த்தம்.)

அனேக ரிஷிகள் பூசித்து பேறு பெற்ற தலம்.

௪௫. ‡வந்தவாசி.

(சுயம்பீச்சுரர், சதபுத்திரி நாயகி, சிவதீர்த்தம், சிவகங்கை.)

ஜெயகந்தரமகாராஜன் பூசித்து மகோதரவியாதியைப் போக்கிய தலம்.

௪௬. ‡மாறன்பாடி.

(தாகநிவார்த்தனேச்சுரர், அன்னபூரணியம்மை, தேன்துளிதீர்த்தம்.)

தேவர்கள் பூசித்து அவரவர் வேண்டுகோளை யடைந்த தலம்.

௪௭ ‡நெய்யாடிவாக்கம்.

(பிரதிகங்கேச்சுரர், திரிபுரசுந்தரி, ஈசானியதீர்த்தம், யமதீர்த்தம்.)

கசியப மகாரிஷி யாகஞ் செய்த தலம். சோழராஜன் பூசித்த தலம். ஒரு பிராமணன் காசிக்குக் கொண்டு போகும் தன் பிதாவின் அஸ்தி மல்லிகைப் புஷ்பங்களாகி வாசனை பரிமளித்த தலம்.

இதில் பதிகம்பெற்றதலம் - ௨௨, புராதனத்தலம்-௨௪, சுப்பிரமணியர் தலம்-௧ ஆக - ௪௭.

முத்தியடைந்த நாயன்மார் ஐவர்.

மகதநாடு அல்லது நடுநாடு முற்றிற்று.

---

‡ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறுதலைகள்.

சிவசுப்பிரமணியர் துணை.

# சோழநாடு.

## காவிரியின் வடகரை.

* ச. திருக்கோயில் திருப்புலியூர் முதலியபலகாமங்களுள்ள சிதம்பரம்.)

(சபாநாயகர், சிவகாமியம்மை, திருமூலநாயகர், உமையம்மை, திருப்புலீச்சர தீர்த்தம், குய்ய தீர்த்தம், புலிமடு, வியாக்கிரபாதம், அநந்தம், பிரமம், நாகசேரி, சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமாநந்தகூபம் முதலிய அனேக தீர்த்தங்களுள்ளன.)

தில்லைவனக்ஷேத்திரம், கனகசபை, வத்தியந்தர முனிவர்குமாராகிய பாலமுனிவர் தில்லைவனத்திற் பத்தி மிகுதியால் மலர் கொய்தற்கு, பொழுதுவிடிந்தால் வண்டாலும், இருட்டானுற் கண் தெரியாமையாலும், இடையூறு படுவ தறிந்து சிவாநுக்கிரகத்தாற் புலிக்கண்ணும், புலிநகமும் பெற்று வியாக்கிரபாதனெனும் பெயரோடு தவஞ்செய்திருந்தனர் தாருகாவனத்து நடனத்தை விஷ்ணு தேவராலுணர்ந்த ஆதிசேடர், அத்திரி முனிவர்பாற்பதஞ்சலியாராயவதாரம் செய்திருந்தனர். சிவகாமவல்லித்தாயார் வாமபாகத்தில் நின்று திருநோக்குற்று மகிழவும், பிரமன் விஷ்ணு இந்திரன் ஆதியாகிய தேவர்களும், பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலிய விருடிகளுங் கண்டுபேரானந்தமடைந்துய்யவும், குருவாரத்தோடு கூடிய தைப்பூசத்தன்று சிவபெருமான் பஞ்சகிருத்திய ஆநந்தத் தாண்டவஞ் செய்தருளிய தலம். சமஸ்த தலங்களி லுள்ள சிவகலைக ளனைத்தும் அர்த்தயாமத்தில் வந்தொடுங்கிப் பின் செல்லா நிற்குந் தலம்.

துன்மதன், துச்சகன் துற்றெரிசனன் முதலிய அநேகர் முத்திபெற்ற தலம். ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு சிவதீட்சை செய்தருளியவரும், வியாக்கிரபாதகமாரிஷியின் புத்திரருமாகிய உபமன்னியு மகாரிஷிக்குத் திருப்பாற்கடல் அருளிய தலம். திருத்தொண்டத் தொகைக்கு முதலெடுத்துக் கொடுத்த புற்றிடங்கொண்டார், தில்லைவாழந்தணர்களென்று சிறப்பித்தருளிய திருவுடையந்தணர்கள் மூவாயிரவர் பூசிக்குந் தலம். வியாசமுனிவர், சுகமுனிவர், சௌனகமுனிவர், சூதமுனிவர் முதலியோர் பூசித்து அருள் பெற்ற தலம். சைமினி முனிவர் மூன்றடி, தம்கவியாயும், ஈற்றடி வேதமாயுமுள்ள வேதபாதஸ்தவஞ் சொல்லித் தோத்தரித்த தலம்.

(சேந்தனர்) திருவெண்காடனெனும் பட்டினத்துப் பிள்ளையாரது கருணீகராயிருந்து, நிகழம்பூண்டு மனைவிமக்களின் வேண்டுகோளாற்

பட்டினத்து சுவாமிகள் திருவாக்குப்படிநிகழ நீங்கியபின்னர், மனைவி மக்களுடன் இத்தலம் புக்கு, விறகு விற்று வரும் ஊதியத்தால் ஓர் சிவனடியாருக்குப் பகிர்ந்தூட்டி யுண்ணும் நியமம் பூண்டொழுகத் தில்லைவாணர் அவர்பால் நள்ளிருளிற்குறுகிக்கூழுண்டு, அக்கூழைத் தம் திருமேனிமேல், மறுநாள் ஆலயத்திற் காட்டி, மூலையிலிருந்த அச்சேந்தனாரை முற்றத் தேவிட்டு, அவரால் நிகழ்ந்த அற்புதத்தை ஐயுற்ற அடியார்களுக்காக, அவர் பாடியருளிய திருப்பல்லாண்டின் வழித்தாய், இரதம் - தானே நடந்துவரக் கொண்டருளும்படி அநுக்கிரகித்த தலம்.

(மாணிக்கவாசக சுவாமிகள்,) திருப்பெருந்துறையில் இத்தலத்திற்கு வரும்படி கட்டளையிட்டருளியபடி இத்தலமடைந்து, "கண்டப்பத்து", "கோயில்மூத்ததிருப்பதிகம்" முதலியவை திருவாய்மலர்ந்து, பின்னர், நிஷ்டாபரரா யெழுந்தருளியிருப்ப, யாழ்ப்பாணத்துப்புத்தர், இத்தலத்தோரை வாதில் வெல்ல வந்தமையுணர்ந்து நிஷ்டை நீங்கி யெழுந்து, அவர்களை வாதில்வென்றருளி, ஊமைப்பெண்ணைப்பேசுவித்து, அதன்கூற்றாகத் "திருச்சாழல்" பாடியருளிச், சிவபெருமான் பிராமணவடிவங் கொண்டு வந்து கேட்பத் தாம் பாடியருளிய "திருவாசகத்தையும்", "திருக்கோவையும்", அவரது திருக்கரத்தாலெழுதுவித்தருளி, ஆனிமாத மகநாளில் சிவபிரானோடு இரண்டறக்கலந்த தலம்.

(திருநீலகண்டநாயனார்) வேட்கோவர்குலத்தில் சித்திரைமாதக் கிருத்திகைநாளி லவதரித்துத் திருநீலகண்டமென்னும் ஆணைவலியாற் றம்மனைவியுடன் சயனித்தும், அவரைத் தீண்டாராய், முதுமைப்பருவமளவுஞ் சென்ற வைராக்கியம் வெளிப்படுத்தும் கருத்துடைய சிவபெருமான், ஓர் ஓட்டைக்கொடுத்து அதனைக் கரந்தருளி, அதன் பொருட்டு, அவ் விருவோரையும், பாலதீர்த்தத்தில் மூழ்கிச் சத்தியம் புரிவித்து, இளமைநல்கித் தைமாத வைசாகநாளில் முத்தி யருளிய தலம்.

இத்திருப்பதி, சபாநாயகர் கோயிலுக்கு மேற்கில் இளமையாக்கினார் என்னும் பரமசிவனுக்கும் பாலசுந்தராம்பாள் என்னும் பார்வதி தேவியாருக்கும் வாசயோக்கியமான இளமையாக்கினார் கோயிலெனவழங்கும் திருப்புலீச்சரமாகும். இது வியாக்கிரபாதமுனிவரால் பூசிக்கப்பட்டது. இதற்கு மேற்கில் பதஞ்சலிமுனிவராற் பூசிக்கப்பட்ட அனந்தீச்சுரர் சவுந்தரநாயகியம்மை வசிக்கும் கோயிலிருக்கின்றது. இச்சன்னதிக் கெதிரில் அனந்ததீர்த்தமும், பின்புறத்தில் நாகசேரி

தீர்த்தமுமிருக்கின்றன. இதற்குவடக்கில் திருக்களாஞ்சேரியில்பிரம தேவன்பூசித்த பிரமபுரீச்சுரரும், சிங்காரவல்லியம்மனுமுள்ள ஆலயமும், பிரமதீர்த்தமுமிருக்கின்றன. மேற்சொல்லிய திருப்பதிகள்சிதம்பரத்திலுள்ளன.

(திருநாளைப்போவார்நாயனார்) திரு ஆதனூரிற்புலையர்குலத்தில், மார்கழிமாதச் சித்திரையிலவதரித்து, சிவனடியாருக்குத் தோற்கருவிக்கான வார்முதலியனவும், அபிஷேகத்திற்கான கோரோசனை யாதியனவுங்கொடுத்து இத்தலந் தரிசிக்கும் விருப்புடையோராய், நாளைப் போவேன், நாளைப்போவேனென்று சொல்லிக்கொண்டிருந்த காரணத்தால்,அப்பேர்தாங்கிச்சிவாநுக்கிரகத்தாலித்தலங்காணப்பெற்று, அக்கினியிற் குளித்து, முனிவராய்ப் புரட்டாசிமாத உரோகிணி நாளில் முத்தி பெற்றதலம்.

(கூற்றுவநாயனார்) களந்தைநகரில், மன்னவர்மரபிற் கார்த்திகை மாத உத்திரட்டாதி நாளி லவதரித்து, சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு பூண்டொழுகிச் சிவபெருமானது திருவடியையே முடியாகச்சூட்டப்பெற்று, நாடாண்டு ஆடிமாதத்திருவாதிரைநாளில் முத்தி பெற்றதலம்.

(கோச்செங்கட்சோழநாயனார்) மன்னவர்மரபிற் சோழராசனது மனைவி கமலவதியார் திருவயிற்றிற் கார்த்திகைமாத மிருகசீரிடத்திற் றிருவவதாரமாய், அனேக ஆலயங்கட்டுவித்தும், சிவபணிவிடை செய்தும்வந்து, மாசிமாத சதையநாளில் முத்திபெற்றதலம். இந்நாயனார் முன்ஜனனத்தில் திருவானைக்காவில் யானையாயிருந்து பூசித்து இப்பதமடைந்தனர்.

( கணம்புல்லநாயனார் ) திரு இருக்குவேளூரில் பங்குனிமாதச் சதையத்தில், குறுநிலமன்னவர் மரபிலவதரித்து, புல்லறுத்துவிற்றுவரும் ஊதியத்தால், திருவிளக்குப் பணிசெய்தொழுகும் நாளில், ஓர் நாள் அப்புல் விலைப்படாதொழிய, அதனையேதிருமுன்னர் விளக்காகவெரித்தும், எஞ்சியகாலத்திற்குத் தம் குஞ்சியையே விரகாகவெரித்து, கார்த்திகை மாதக்கிருத்திகைநாளில், முத்திபெற்றதலம்.

சமயாசாரியர்களுக்குத் தனித்தனியே திருநடன தரிசனங் கட்டளை யிட்டருளியதும் அல்லாமல், திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகளுக்கு, தில்லைவாழந்தணர்களைச் சிவகணங்களாகக் காட்டியருளிய தலம்.

ஐயடிகள்காடவர்கோன் "க்ஷேத்திர வெண்பா" வருளியதலம்.

திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி, காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புரு

டோத்தமநம்பி, சேதிராயர், இவர்களால் "திருவிசைப்பாவும்", சேந்தனரால் 'திருப்பல்லாண்டும்" பாடியருளியதலம்.

(சந்தானசாரியர்களில், மறைஞான சம்பந்த சிவாசாரியார்) பெண்ணாடகத்திலே பிராமணகுலத்திலே திருவவதாரஞ்செய்தருளி, இத்தலத்திற் கடுத்த திருக்களாஞ்சேரியி லெழுந்தருளி யிருந்து, உமாபதி சிவாசாரியாருக்குச் சிவதீட்சை செய்தருளி, ஆவணிமாத உத்திரநாளில் முத்திபெற்ற தலம்.

(உமாபதிசிவாசாரியார்) தில்லைவாழந்தணர்களுள்ளொருவராகிய இந்நாயனர், இத்தலத்திற்கடுத்த கொற்றவன்குடியிலே யெழுந்தருளி யிருந்து, "சிவப்பிரகாசம்," "திருவருட்பயன்," "வினவெண்பா," "போற்றிப் பஃறொடை," "கொடிக்கவி," "நெஞ்சுவிடுதூது," "உண்மைநெறிவிளக்கம்," "சங்கற்ப நிராகரணம்" என்னும் சித்தாந்த சாஸ்திரங்களைச் செய்தருளித் "திருத்தொண்டர்புராணசாரம்", "திருமுறைகண்டபுராணம்," "சேக்கிழார்புராணம்," "திருப்பதிகக்கோவை" யென்னும் பிரபந்தங்களுஞ்செய்தருளினர். இவர் இத்தலமான்மியத்தை, வடமொழியினின்றுமொழிபெயர்த்துக்"கோயிற்புராணமென்று" பாடிமுடித்துப் பெட்டகத்தில் வைத்திருந்தபொழுது, நடேசர், தில்லைவாழந்தணர்களுக்குக் கனவிற்றோன்றி, நாம் உமாபதியினது பெட்டகத்துள்ளிருக்கின்றோ மென்று அம்மான்மியத்தைக் கேட்பித்தருளியதலம். அன்றியும், அவ்வுமாபதி சிவாசாரியசுவாமிகள், சிவபெருமானல் அனுப்பப்பட்ட திருமுகத்தைப் பெற்றுப் பெத்தான் சாம்பானை முத்தியிற்சேர்த்தருளியபொழுது அவன்மனைவியும் அரசனுங் காண, முள்ளிச்செடிக்கு முத்திகொடுத்தருளி, சித்திரைமாத அத்த நாளில் சிவமாம் பெரும்பேறு பெற்றதலம்.

சித்தாந்த சாத்திரங்களிலொன்றாகிய "திருக்களிற்றுப் படியாரெனும்" சாத்திரத்தை, திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் திருவாய் மலர்ந்தருளி, திருக்களிரையுடைய பஞ்சாட்சரப் படியின்மீது வைக்க, அதுவே சிவபெருமானடி சேர்வார்களுக்கு நல்வழிகாட்டி யென்பதுபோல, அதனை அப்படியிலிருந்தகளிறு;கைநிமிர்ந்தெடுத்து நடேசரது திருவடியில் வைத்தருளியதலம்.

இன்னமிதன் பெருமையைக் குறிக்கில் விரியுமாதலால்விரிவஞ்சி விடுத்தனம். சமயாசாரியர் மூவராலும் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - கக.

—இதற்குத் தென்கிழக்கு ௩ - மைலில்,

உ. * திருவேட்களம்.

(பாசுபதேச்சுரர், நல்லநாயகியம்மை, நாரததீர்த்தம்.)

மூங்கில்வனக்ஷேத்திரம். நாரதரிஷி பூசித்ததலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தெற்கு ஒரு மைலில்,

ங. * திருநெல்வாயில். (சிவபுரி.)

(உச்சிநாதேச்சுரர், கனகாம்பிகையம்மை, கனகதீர்த்தம், கிருபாசமுத்திரம்.)

கண்ணுவரிஷியும், தேவர்களும் பூசித்ததலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு கால் மைலில்,

ச. * திருக்கழிப்பாலை. (காரைமேடு.)

(பால்வண்ணநாதேச்சுரர், பொற்பதவேதநாயகியம்மை, வான்மீகதீர்த்தம், கொள்ளிடம்.)

வான்மீகரிஷி பூசித்ததலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - அ.

—இதற்கு தென்கிழக்கு ரு - மைலில்,

ரு. * திருநல்லூர்ப்பெருமணம். (ஆச்சாபுரம்.)

(சிவலோகத்தியாகேச்சுரர், நங்கையுமைநாயகியம்மை, கொள்ளிடநதிதீர்த்தம்.)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், திருநீலநக்கர் முதலிய திருத்தொண்டர் வேண்டுகோளின்படி, நம்பாண்டார் நம்பியுடைய திருமகளாரை விவாகஞ்செய்ய ஒருவாறிசைந்து, திருமணக்கோலங் கொண்டெழுந்தருளி, திருநீலநக்கநாயனர் சடங்கு செய்யப் பாணிக்கிரகணஞ்செய்தருளி, அக்கினியை வலஞ்செய்ய வேண்டி, அக்கினியாவார் சிவபெருமானே யெனத்துணிந்து, ஆலயத்திற் கெழுந்தருளி, அத்திருக்கோயிலே சோதியாயிருப்பவும், அதனுள் ளொரு வாயில்காட்டவுங்கண்டு, அங்குநின்று "நமச்சிவாயப்பதிகம்" கட்டளையிட்டு திருக்கலியாணங் காணவந்த எல்லாப் பரிசனங்களுடனும், வைகாசிமாத மூலநாளில் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், தமது மனைவியார் கையைப் பற்றிக் கொண்டு திருநீல நக்கநாயனர், முருகநாயனர், சிவபாத விருதையர், நம்பாண்டார்நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர்முதலியோர் தம்பதிகளுடனும், சிவிகைதாங்குவோர் முதலிய பரிசனங்களுந் தொழுதுவர, அச்சோதியுட்புகுந்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு வடகிழக்கு ங - மைலில்;

சு. *திருமயேந்திரப்பள்ளி. (கோயிலடிப்பாளையம்.)

(திருமேனியழகேச்சுரர், முல்லைநகைவடிவம்மை,
கொள்ளிடநதிதீர்த்தம், மந்திரபுஷ்கரணி.)

சிவபெருமான், உமாதேவியாரோடு ஏகாந்தமாய் வீற்றிருக்குங் கால், அங்குத் தீபநெய்யை விரும்பிவந்த ஓர் எலி, தனது நாவால், அந்நெய்யை வௌவும்போது, அத்தீபம்பிரகாசமாகக் கருணாகரரா கிய சிவபெருமான், அவ்வெலிமீதுண்டாகிய சந்தோஷத்தால், மாவலியெனுஞ் சக்கரவர்த்தியாகித் திரிபுவனமும் ஆளக்கடவாயென நல்வரங்கொடுத்தருளியதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தெற்கு ய - மைலில்,

எ. * திருத்தென்முல்லைவாயில்.

(முல்லைவனநாதேச்சுரர், அணிகொண்டகோதையம்மை,
இந்திரதீர்த்தம், சக்கரதீர்த்தம்.)

தேவேந்திரன், சுதர்மன் பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு ங - மைலில்,

அ. * திருக்கலிக்காமூர். (அன்னப்பன்பேட்டை.)

(சுந்தரேச்சுரர், அழகுவனமுலையம்மை, சிவதீர்த்தம், அம்புலிதீர்த்தம்.)

பராசரிஷிபூசித்ததலம் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தெற்கு ங - மைலில்,

கூ. * திருச்சாய்க்காடு. (சாயாவனம்.)

(சாயாவனேச்சுரர், குயிலினுநன்மொழியம்மை,
சங்கமுகதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம்.)

உபமன்னியரிஷி பூசித்ததலம்.

(இயற்பகைநாயனார்) காவிரிப்பூம்பட்டினத்திலே வைசியகுலத்திலே, தைமாதப் பூசநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச்சிவனடியாரிடத்து, அன்போடு அவர் விரும்பியதைமறாது, கொடுத்துவருங் கால், விடபுருடவேதியர்போலச் சிவவேடந் தாங்கிவந்த சிவபெருமான், நாயனாரது மனைவியைக்கேட்ப, உடனேகொடுத்தும், அதைத் தடுத்த சுற்றத்தாரை ஒருங்கு களைந்து சுவாமியை வழிவிட்டுத் திரும்புங்கால், சாயாவனேச்சுரர், அவரைப் பின்னும், அழைத்து அந் தம் பதிகளிருவருக்கும் மார்கழிமாத உத்திரநாளில் முத்தியளித்தருளிய தலம்.

ஐயடிகள் காடவர்கோன் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ச.

—இதற்குக் கிழக்கு அரை மைலில்,

கo. * திருப்பல்லவனேச்சுரம். (காவிரி பூம்பட்டினம்)

(பல்லவனம்பூரேணச்சுரர், சௌந்தராம்பிகையம்மை, காவிரிநதி, சங்கமதீர்த்தம்.)

பல்லவனெனும் அரசன் பூசித்ததலம். பட்டினத்துப்பிள்ளையார், இயற்பகைநாயனர், திருவவதாரஞ் செய்தருளியதலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடமேற்கு ௩ - மைலில்,

கக. * திருவெண்காடு. (சுவேதாரணியம்.)

(சுவேதாரணியேச்சுரர், பிரமவிர்த்திபா நாயகியம்மை, சுவேததீர்த்தம், திருக்குளதீர்த்தம், கொன்றை விருட்சம்.)

தாருகாசுரனேடு உயுத்தஞ்செய்து கொம்புகளிழக்கப் பெற்ற வெள்ளையானை பூசித்து, அக்கொம்புகளுண்டாகப் பெற்றதலம்.

சாபகாரணப் பசுவானது சிவனடியாரைத் துரத்திச் செல்வதறிந்து, சிவபெருமானுர்திரிசூலத்தாற் குத்தி, சந்நிதியில் வைத்த தலம். கோவில் திருக்காப்பிட்ட பின்னர், உள்ளேயிருந்த பிள்ளையை அர்ச்சக ரெடுக்கக்கருதிக் கதவின் றிருக்காப்பை நீக்க, அப்பிள்ளை கொன்றை விருட்சமாகி யிருக்கக் கண்டதலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் சு.

—இதற்கு மேற்கு க - மைலில்,

கஉ. * திருக்காட்டுப்பள்ளி.

(ஆரணியசுந்தரேச்சுரர், அகிலாண்டநாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம், அமுதப்பொய்கை.)

தேவேந்திரன், விருத்திரா சூரனைக் கொன்ற பழிபற்றித் திரிதருகையில், அவர் தேவலோகமடைந்து, அரசுபுரியவேண்டுமென்று தேவர்கள் பூசித்ததலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ச - மைலில்,

கங. * திருக்குருகாவூர். (திருமேனிவெள்ளடை.)

(திருமேனி வெள்ளடையீச்சுரர், காவியங்கண்ணியம்மை, வெள்ளடை தீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்குத் தையம்மாவாசையில் திருவருளால் தாகசாந்திசெய்வித்த கூபதீர்த்தம். இதற்குவடகிழக்கு

க - மயில்தூரத்திலிருக்கின்றது. சுந்தரமூர்த்திசுவாமிகள் சித்திராபர்வத்தில் திருக்குழாங்களோடும்பசித்துவருவதறிந்து சிவபெருமான் கட்டமுதருவித்து, வேடரூபமாய் ஆலையத்துக்கழைத்துவந்துமறைந்த தலம் அச்சுவாமிகளாலும், திருஞானசம்பந்தசுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தென்மேற்கு ச-மைலில்,

கசு. ✻ திருப்பிரமபுரம். (வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம், சீர்காழி.)

(பிரமபுரேச்சுரர், திருநிலைநாயகியம்மை, சக்கரதீர்த்தம், திருத்தோணியில்வீற்றிருப்பவர் தோணியப்பார்.)

பிரமா, விஷ்ணு, தேவேந்திரன் முதலியோர் பூசித்த தலம். மகாபிரளயத்திலும், பிரமா விஷ்ணு முதலியவர்களுக்குச் சேதம் வராதபடி, தோணியாக மேன் மிதந்துள்ள தலம்.

பிரகலாதனைக் காக்க நினைத்துத் தூணிற்றோன்றி, இரணியனைக் கொன்ற நாரசிம்மத்துக்கு உக்கிரநிலை யதிகரிப்பதறிந்த சிவபெருமான், சரபப்பட்சிவடிவங்கொண்டு அதன் கருவமொடுக்கிப் பின் சட்டைநாதவடிவமாகவிருந்து அநுக்கிரகித்த தலம்.

இவற்றுள், பிரமபுரம் அடியிலும், தோணிபுரம் மத்தியிலும், சட்டைநாதர் அதன்மேலும் அடுக்கடுக்காய்க்காட்சிதந்தருளும்தலம்.

சூரனுதியர் செய்த இடுக்கத்தால், இந்திராணியோடு மிந்திரன், மூங்கில்வடிவமாயிருந்துபூசித்ததலம். அவ்விந்திரனுலுண்டுபண்ணிய நந்தனவனவிருத்தியின்பொருட்டு நதிவருவிக்கநினைத்து, ஆபத்துவாரணப்பிள்ளையாரைப் பூசிக்க, அவர் அகத்தியமுனிவர், கொண்டு செல்லுங்கமண்டலக்காவிரி நீரை, காகவுருவாய்ச்சென்று கவிழ்த்து அந்நந்தனவனமாத்திரத்தினமையாது உலகமுழுவதும் அக் காவிரி நீரால் சுகமடைவித்தருளியதலம்.

(ஆளுடையபிள்ளையாரென்னும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்)பூசுரகுலத்திலேகௌணியர்கோத்திரத்திலே சிவபாதவிருதயர் பகவதியாரெனு மிருமுதுகுரவர்செய்த தவத்தினாலே ஆவணிமாதத் திருவாதிரைநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, மூன்றாம் வயதிலே சித்திரைமாத சஷ்டிதிதியில் ஆலயத்திலுள்ள தீர்த்தக்கரையிலேநின் றழுதருள, அவ்வழுகையாற்றும் பொருட்டு உமாதேவியார் திருமுலைப்பாலில் ஞானமிர்தத்தைக்குழைத்துக்கொடுப்ப உண்டருளியதனாலே, "ஞானசம்பந்தரென்னும்" காரணப்பெயரோடும் விளங்கியதை

புணராத தந்தையார் அனுசிதமென்றுகருதி, கோல்கொண்டுமிரட்ட எம்மை யிங்ஙனஞ்செய்தவரியரெனச் சுட்டிக் காட்டிப் பதிகமோதி அதுமுதற் சிவஞானச்செல்வராய்த் தலங்கடோறுந் தமிழ் வேதம் புகன்று வருகையில், இவரைச்சேவியுற்ற திருநாவுக்கரசுசுவாமிகள் வந்துவணங்க, அப்பரை அப்பரோ? எழுமென்று அழைத்தருளிப்பின் னுமநேக அற்புதங்கள் செய்தருளியதலம். சுந்தரமூர்த்திசுவாமிகள், ஆளுடையபிள்ளையார் அவதரித்த இத்தலத்தைமிதிக்க அஞ்சுகிறே னென்று இந்நகரத்தைச்சுற்றிப் பிரதக்ஷணஞ்செய்திருப்ப, அவருக் குச் சிவபெருமான் அருட்சுரந்து, திருக்கயிலாயத்தி லெழுந்தருளியி ருக்குந் திருக்கோலதரிசனங் கட்டளையிட்டருளிய தலம்.

மாணிக்கவாசக சுவாமிகள், சிவபெருமானது திருவடியைப் பிடித்துக்கொண்டு "பிடித்தப்பத்து" பாடியருளிய தலம்.

(கணநாதநாயனார்) பிரமகுலத்தில், ஆவணிமாத இரேவதிநாளி லவதரித்து, அடியாருக்குச் சிவதிருப்பணி பயிற்றுவித்துக் கிரகத் தாச்சிரமத்திலிருந்து திருஞானசம்பந்தசுவாமிகளது வழிப்பாட்டால் பங்குனிமாதத்திருவாதிரைநாளில்முத்தியடைந்ததலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௭௧.

—இதற்குத் தென்மேற்கு ௧ - மைலில்,

௧௫. *திருக்கோலக்கா. (திருத்தாளமுடையார்கோவில்.)

(சப்தபுரீச்சுரர், ஓசைகொடுத்தநாயகியம்மை, சூரியதீர்த்தம், ஆனந்ததீர்த்தம்.)

கண்ணுவமகாமுனி, அகத்தியமகாமுனி பூசித்ததலம். திருஞான சம்பந்தப்பிள்ளையாரது கரதாள தேவார கீதத்தைக்கேட்டுச் சிரவணா நந்தமடைந்த சிவபெருமான், பொற்றிருத்தாள மொன்றைக் கரத்தில் கொடுக்க, அதற்கம்மை ஓசைகொடுத்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்கு மேற்கு ௪ - மைலில்,

௧௬. * திருப்புள்ளிருக்கும்வேளூர். (வைத்தீச்சுரன்கோவில்.)

(வைத்தியநாதேச்சுரர், தையனாயகியம்மை, சித்தாமிர்ததீர்த்தம், வேம்புவிருட்சம்.)

சடாயு, சம்பாதி, சூரியன், வேதம், சுப்பிரமணியர், இராமசுவாமி, இலக்குமணர் முதலியோர்பூசித்துத் திருவருட்பெற்ற தலம். தேவேந் திரன் பூசித்து இரத்தினமிவல் பெற்றதலம். இத் தலத்திலுறையு முத்துக்குமார சுவாமியார் பல தொண்டர்களாலும் பல பிரபந்தப் பாமாலைசூடியுள்ளவர். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.

—இதற்குத்தென்கிழக்கு ௨ - மைலில்,

கஎ. * திருக்கண்ணார்கோவில். (குருமாணக்குடி.)

(கண்ணாயிரேச்சுரர், முருகுவளர்கோதையம்மை, மணிகர்ணிகை, இந்திரதீர்த்தம்)

தேவேந்திரன் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்கிழக்கு ச - மைலில்,

கஅ. * திருக்கடைமுடி. (கீழூர்)

(கடைமுடி நாதச்சுரர், அபிராம்பிகையம்மை, கருணாதீர்த்தம்.)

பிரமா பூசித்த தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. இதற்கு வடமேற்கு ச - மைலில்,

கக. * திருநின்றவூர்.

(மகாலட்சுமேச்சுரர், உலகநாயகியம்மை, மகாலட்சுமிதீர்த்தம், நீலமலர்ப்பொய்கை.)

மகாலட்சுமி பூசித்த தலம். விஷ்ணுமூர்த்தியானவர், சலந்திராசுரனது மனைவியாகிய பிருந்தையின்மீது மயல்கொண்டு அவளைப்புணரச் சலந்திராசுரனுருவத்தோடு சென்று, புணர்ந்த களவறிந்த பிருந்தை தீப்பாய, அவண் மாண்ட சுடலையின்கண் மதிமாண்டமூத போது விஷ்ணு உய்யும்வண்ணம், திருமாது பூசித்துச் சிவபெருமானருளாற்பெற்றவித்தினை அச்சுடலையில்வித்தி யதனாலே துளபம், நெல்லி, அகத்தி, இவைகள்தோன்ற, அப்போது விஷ்ணுவின், மயலொழித்து, தனக்குப் பதியாகவடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ச.

—இதற்கு வடமேற்கு - ச மைலில்,

உ௰. * திருப்புன்கூர்.

(சிவலோகநாதர், சொக்கநாயகியம்மை, சௌந்தரேச்சுரர், பெரியநாயகியம்மை, கணபதிகண்டதீர்த்தம், இடபதீர்த்தம், சிவகங்கை)

ஆதனூரிற் புலையர்குலத்திற் றோன்றிய நந்தனாரெனுந் திருநாளைப்போவார், கோயில் வாயிதலினின்றும் தரிசிக்க, குறுக்கிட்ட திருநந்திதேவரை விலகும்படி வேண்டியவாறே அநுக்கிரகஞ்செய்து தரிசனங் கொடுத்தருளிய தலம்.

(ஏயர்கோன்கலிக்காமநாயனார்) திருப்பெருமங்கலத்தில் வேளாளர் குலத்திலே ஆனிமாதப் பூரநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சோழராஜனிடத்துச் சேனாதிபதி உத்தியோகஞ் செய்து, சிவாலயத் திருப்பணிவிடை செய்துவருங்கால், சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானைப் பரவையாரிடத்துத் தூதாக அனுப்பிய சமாசாரத்தால், அவர்மீது செற்றங்கொண்டிருந்தனர். சுந்தரமூர்த்திசுவாமிகள்

வேண்டுகோளாற் சிவபெருமான் சூலைநோயை விடுத்தருளியும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் அச்சூலைதீர்க்க வருமுன்னர், கலிக்காமர், உடைவாளால் வயிற்றைக் கீண்டிறக்கச் சுந்தரமூர்த்திநாயனர், சென்று கண்டு, தாமுமுடனிறக்கும்பொருட்டு வாளையெடுக்கையில், சிவபெருமான் தடுத்தருளிக் கலிக்காமநாயனரை எழுப்பியருளி, இருவரையு மிணங்குவித்த பின்னர், கலிக்காமர் திருத்தொண்டு செய்திருந்து ஆனிமாதத்தி ரேவதிநாளில் முத்திபெற்றருளிய தலம். சமயாசாரியர்மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.

—இதற்குத் தென்மேற்கு ௫-மைலில்,

௨௧. * திருநீடூர்.

(அருட்சோமநாதேச்சுரர், வேயுறுதோளியம்மை, சிவதீர்த்தம்.)

துவட்டாசுரனைக் கொன்ற பழி தீரவேண்டித் தேவேந்திரன் பூசித்த தலம்.

(முனையடுவார்நாயனர்) வேளாளமரபிற் புரட்டாசிமாத மகநாளிற் றிருவவதாரஞ் செய்தருளித் தம்மிடத்திலுள்ள பொருள் யாவும், சிவபணிவிடைக்கும், அடியார்க்குஞ் செலவழித்ததுமன்றிப் போர்முனையிற் றோற்றவர்கள்வந்து கூலி பேசினலு மவர்களுக்காகச் சென்று போர்செய்து வென்று பொருள் சம்பாதித்து அடியார்களுக்குத்திருவமுதுசெய்வித்தும் பல அருமையான திருத்தொண்டுசெய்துவந்து, பங்குனிமாதப் பூசநாளிற் சிவபதம் பெற்றதலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - ௧.

—இதற்கு மேற்கு ௩ - மைலில்,

௨௨. * திருஅன்னியூர்.

(ஆப்தசகாயேச்சுரர், பெரியநாயகியம்மை, சிவகங்கை, வருணதீர்த்தம்.)

வருணனாற் பூசிக்கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்கு மேற்கு ௩ - மைலில்,

௨௩. * திருவேள்விகுடி.

(கல்யாணசுந்தரேச்சுரர், பரிமளசுகந்தநாயகியம்மை, கல்யாணதீர்த்தம்.)

ஓரரசபுத்திரனுக்குவிவாகஞ்செய்யநிச்சயித்தபெண்ணை,விவாகமுடிக்குமுன், தந்தைதாயிறந்தமைபற்றிச் சுற்றத்தார் கொடாதொழிந்தமையை அப்பெண்ணாலுணர்ந்த அவ்வரச புத்திரன், இங்குத் தவஞ்செய்யச் சிவபெருமான் பூதத்தால் அப்பெண்ணைக்கொடுவந்து

தாமே திவேட்பவராயிருந்து திருமணவேள்வி செய்தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்கு வடமேற்கு ௨-மைலில்,

௨௪. * திருஎதிர்கொள்பாடி. (மேலைத்திருமணச்சேரி)

(அயிராவதேச்சுரர், மலர்க்குழன்மாதம்மை, அயிராவததீர்த்தம்.)

அயிராவதம் பூசித்ததலம். மேற்கூறிய வேள்விகுடியிற் றிருமண முடித்த அரசகுமாரன் மனைவியோடு தன்னகர் சொல்லும்போது, சிவபெருமான், அவனதுமாதுலனைப்போல இத்தலத்துநின்றும் எதிர்கொண்டு அழைத்துச் சென்றதினாலே எதிர்கொள்பாடியெனப்பெயராயிற்று. சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - ௧.

—இதற்கு அரை மைலில்,

௨௫. * திருமணஞ்சேரி. (கீழைத்திருமணஞ்சேரி)

(அருள்வள்ளனாயகேச்சுரர், யாழின்மென்மொழியம்மை, திருமணதீர்த்தம்.)

மன்மதன் பூசித்ததலம். வைசியகுலோற்பவராகிய நங்கைநாத்திகளிருவர் ஒருங்கே கருப்பமுற்றுழி, பிறக்குஞ் சிசுக்களை ஒருவர்க்கொருவர் சம்பந்தஞ்செய்துகொள்ளுவதென்ற வாக்குறுதிப்படி, ஒருத்தியின்ற சிசு ஆமையாயினதால், மற்றவள், தன் பெண்ணைக் கொடாதொழிய அவ்வாமை பூசித்து, சிவபெருமானால், குறித்த பெண்ணை மணஞ்செய்யப்பெற்று ஆமையுருநீங்கிமானிடவுருவும் பெற்ற தலம்.

(குலச்சிறைநாயனார்,) நெடுமாறர் என்னும் பாண்டியருக்கு முதன்மந்திரியாயிருந்து, அப்பாண்டியர் மாதேவியாராகிய மங்கையர்க்கரசியார்செய்யுந் திருத்தொண்டுக்குத்துணைசெய்து, திருஞான சம்பந்த சுவாமிகளை வரவழைத்து, சமணர்களைவென்று, பாண்டிநாடெங்கும் திருநீற்றை வளர்த்த குலச்சிறைநாயனார் வழிபட்ட தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்கு வடகிழக்கு ௪-மைலில்,

௨௬. * திருக்குறுக்கைவீரட்டானம். (குறுக்கை.)

(வீரட்டானேச்சுரர், ஞானம்பிகையம்மை, சூலதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம்.)

மார்க்கண்டேயர் பூசித்ததலம். திருமால் மனதிற் செனித்த மானசனென்கின்ற மன்மதனை, அசுராதிகளிடையூற்றால் வருந்திய தேவர்கள் சிவபெருமான் யோகம்நீங்கி யுமையைமணக்கும்வண்ணம்

சரந் துறந்து காமமுண்டாக்கும்படியேவ, மன்மதன் மறுத்தும் கேளாமல் அவர்கள் சாபமிட வருவதற்கஞ்சிச் சென்று சிவபெருமான் மீது பாணந் தொடுக்கச் சிவபெருமான் நெற்றிக்கண்திறந்து எரித்தருளப்பெற்றதலம். அட்ட வீரட்டானத்திலொன்று, திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் உ.

இதற்கு வடகிழக்கு ச - மைலில்,

உஎ. *திருக்கருப்பறியலூர். (மேலக்காழி, தலைஞாயிறு)

(குற்றம்பொறுத்தநாதேச்சுரர், கோல்வளைநாயகியம்மை, இந்திரதீர்த்தம், சூரியதீர்த்தம், சிவகங்கை.)

தேவேந்திரன் ஓர்கால் இறுமாப்போடு கயிலைநோக்கிச்செல்லப் பூதவடிவத்துட னெதிர்ப்பட்ட சிவபெருமானை யுணராது குலிசத்தா லெறிந்த போது, அவர் கோபங்கொண்டவர்போல வுக்கிரவடிவங் கொண்டு சீற்றங்காட்ட, பிழைபொறுக்க வேண்டுமென்று தாழ்ந்து பூசித்த அவ்விந்திரன்பொருட்டுத் தம் சீற்றத் தீயை மேலைச்சமுத்திரத்திலெறிந்து, இந்திரனுக் கனுக்கிரகித்த தலம், அச்சீற்றந்தானே, சலந்தராசுரனாயது. இத்தலம் சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடக்கு க - மைலில்,

உஅ. * திருக்குரக்குக்கா.

(கொந்தளேச்சுரர், கொந்தளநாயகியம்மை, அனுமதீர்த்தம்)

அனுமார் பூசித்ததலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு ங - மைலில்,

உகூ. * திருவாழ்கொளிபுத்தூர். (வாழப்பூர்.)

(மாணிக்கவண்ணேச்சுரர், வண்டமர்பூங்குழலுயகியம்மை, மாணிக்கத்தீர்த்தம், பிரமதீர்த்தம், வாகைவிருட்சம்.)

திருமால் மாணிக்கத்தை வைத்துப்பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ங.

—இதற்கு வடக்கு உ - மைலில்,

ஙய. * திருப்பழமண்ணிப்படிக்கரை. (திருமண்ணிப்படிக்கரை, இலுப்பைப்பட்டு, இலுப்பையடி.)

(நீலகண்டேச்சுரர், அமிர்தகரவல்லியம்மை, அமிர்ததீர்த்தம்.)

தேவர்களுக்காகச் சிவபெருமான், ஆலகால விஷத்தையருந்திய போது,உமாதேவியார், திருக்கரத்தால் அவரது திருமிடற்றைப் பிடி

க்க, அவ் விடக்கறையைச் சிவபெருமான் கண்டத்திற் காண்பித்தருளியதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ங - மைலில்,

## ௬க. * திருஓமாம்புலியூர்.

(துயர்தீர்த்த செல்வேச்சுரர், பூங்கொடியம்பிகையம்மை, கொள்ளிடதீர்த்தம், சிவதீர்த்தம்.)

அங்குலனெனும் வேடன் தன்னைத் துரத்திய ஓர் புலிக்குப் பயந்து, அருகிருந்த வில்வமரத்திலேறிக்கொள்ள, புலியும் அம்மரத்தின் கீழிருக்க, இரவாகி விட்டமைபற்றி, விடியுந்தனிலு மம்மரத்தின் இலையைப்றித்து, அவ்வேடன் அருச்சித்திருப்ப, கீழிருந்த சிவபெருமான், அவ்வழிபாட்டுக்கிரங்கி, அன்றிரவு விழித்திருந்து பூசித்ததற்காக, அவ்வேடனுக்கும், அதனைத் தரிசித்திருந்த புலிக்குஞ் சிவபதமருளியதலம். இதன் கீழ்பாரிசத்தில் வடதளியென்றொரு ஆலயம் இருக்கின்றது. இவ்விரண்டும் திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடகிழக்கு ங - மைலில்,

## ௬உ. * திருக்கானாட்டுமுள்ளூர்.

(பதஞ்சலிநாதேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை, கோல்வளைக்கையம்மை, சிவதீர்த்தம்.)

பதஞ்சலிமுனிவராற் பூசிக்கப்பட்ட தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடகிழக்கு ரு - மைலில்,

## ௬௩. * திருநாரையூர்.

(சௌந்தரேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை, காருண்ணியதீர்த்தம், திருக்குளதீர்த்தம், புன்னகவிருட்சம்.)

தேவதத்தனெனுங் காந்தருவன் மரத்திலேறிக் கனிபறிப்புழி, அதன் கீழிருந்து நோற்ற துருவாசமுனிவரது, எதிரோ ஓர்கனி விழுந்து, அவரது நிஷ்டைக் கிடையூறு செய்தமைபற்றி, நாரையாகவென்று சபிக்க, நாரையான அக்காந்தருவன்பூசித்துக்கதியடைந்ததலம்.

பொல்லாப்பிள்ளையாரைப் பூசித்துவரும் அருச்சகர் அயலூர்க்கேக, அவர் புத்திரராகிய நம்பியாண்டார்நம்பி, பொல்லாப்பிள்ளையாரைப் பூசிக்கும்போது, நிவேதனத்தைப் பிள்ளையாருட்கொள்ளாமைபற்றி, கல்லிற் தலைமோதப் போகும்பொழுது, பிள்ளையாரெதிர்தோன்றி, நிவேதனத்தைப் புசித்தருளினமையால், பிள்ளையாரோடு நம்பி

யார் கேண்மைபூண்டு,வேதாகமங்க ளோதிவந்ததைக் கேள்விப்பட்ட அபயகுலசேகர சோழமகாராஜாவானவர், விஸ்தாரமாகிய பலபண்டங்களைப் பரிக்ஷார்த்தமாக, உண்ணச்செய்யவேண்டுமென்றுவேண்ட, பிள்ளையாரா லுண்பித்து அரசன் கருத்தைத் தேற்றியருளி, அரசன் வேண்டுகோளின்படி, மூவராசிரியர் சிதம்பரத்திற் சேமித்துவைத்த திருமுறையை வெளிப்படுத்தியும் திருத்தொண்டத் தொகைக்குப் பிள்ளையார் பொருள் சொல்லக்கேட்டு, அந்தாதி பாடியருளியும், "விநாயகர்திருவிரட்டைமணிமாலை", "கோயிற்றிருப்பண்ணியார் விருத்தம்", "ஆளுடையபிள்ளையார்திருவந்தாதி", மேற்படி "திருசண்பைவிருத்தம்", "மும்மணிக்கோவை", "திருவுலாமாலை", "திருக்கலம்பகம்", "திருத்தொகை," திருநாவுக்கரசு தேவர் "ஏகாதசமாலை" முதலிய பிரபந்தங்களும் அருளிச்செய்து, பல அற்புதங்கள்செய்து, நம்பியாண்டார் நம்பி முத்திபெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௫. —இதற்குத் தென்மேற்கு எ - மைலில்,

## ௩௪. * திருக்கடம்பூர்க்கரகோயில் (மேலக்கடம்பூர்.)

(அமிர்தகடேச்சுரர், சோதிமின்னம்மை, அமுததீர்த்தம்.)

அமிர்தங்கடைய எத்தனித்தபொழுது, நுரையெழும்பியது பார்த்து, தேவேந்திரன் பூசித்து அமிர்த மெழும்படியாக அநுக்கிரகம் பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.

—இதற்கு தென்மேற்கு கக - மைலில்,

## ௩௫. * திருப்பந்தணைநல்லூர்.

(பசுபதீச்சுரர், காம்பன்னதோளியம்மை, மணவாளக்கோலம், பசுதீர்த்தம், கொன்றைவிருட்சம்.)

தேவகன்னிகைகள் பூசித்த தலம். வசிஷ்டர் செய்த விருந்தாற் காமதேனுவை விரும்பிய கௌசிகராஜனாகிய விசுவாமித்திரமாமுனிவர் கொண்டிருந்த கோபத்திற்கஞ்சி, காமதேனு வழிப்பட்டு, விசுவாமித்திரருடன் சிநேகம்செய்துகொண்டதலம். இதில் அம்மன் சந்நிதி வடக்குமுகம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு தென்மேற்கு உ - மைலில்,

## ௩௬. * திருக்கஞ்சனூர்.

(அக்கினியேச்சுரர், கற்பகாயகியம்மை, அக்கினிதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம். புரசுவிருட்சம்.)

அக்கினி, பிரமா, மார்க்கண்டேயர், இந்திரன் பூசித்த தலம்,

(மானக்கஞ்சாறநாயனர்) வேளாளமரபில் மாசிமாத அசுவினிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, அரசனிடத்துச் சேனாதிபதித்தொழிலி லமர்ந்து சிவனடியாரைப் பூசித்துவருங்கால், அருந்தவத்தாற் பெற்ற தமது புத்திரியைக் கலிக்காமநாயனாருக்குக் கலியாணஞ் செய்துகொடுக்க இசைந்து, மணவினைசெய்துகொண்டிருப்புழி, மாவிரத அடியார்வடிவங்கொண்டு சிவபெருமானெழுந்தருள, நாயனார்பார்த்து அவரது திருத்தாளில் தம் புத்திரியை வணங்குவிக்கும்பொழுது, அக்கன்னிகை கூந்தல், பஞ்சவடிக்காகுமென்று, மாவிரதியர்கேட்ப, அங்ஙனமே அடியோடறுத்துத் தந்தருளினர். இத்துணிவுக்குச் சிவபெருமானிரங்கிக் காட்சி கொடுத்தும், கலியாணத்துக்குவந்த கலிக்காமநாயனார் முண்டிதப்பெண்ணை மணஞ்செய்ய அடாதென்றுவருந்துழி, அப்பெண்ணுக்குக் கூந்தலளித்தும், மணவினை முடித்தருளிய தலம். மானக்கஞ்சாறநாயனார், மார்கழிமாதச் சுவாதிநாளிற் சிவபெருமானது சந்நிதானத்திலே அவரது பெருங்கருணைத்திறத்தைப் புகழ்ந்துபாடும் பெரும்பேறுபெற்றருளிய தலம்.

அரதத்தாசாரியசுவாமிகள் வசித்துப் பல அற்புதங்கள் காட்டியருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குக் கிழக்கு க - மைலில்,

௬எ. * திருக்கோடிகா.

(கோடிகாவேச்சுரர், வடிவாம்பிகையம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

மூன்றுகோடி ரிஷிகள் பூசித்து அவரவர் வேண்டும் வரங்களையடைந்த தலம்.

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளியதலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்ளது. திருப்பதிகங்கள் - ௪.

—இதற்கு மேற்கு ௩ - மைலில்,

௬அ. * திருமங்கலக்குடி.

(பிராணவரதேச்சுரர், மங்களநாயகியம்மை, மங்களதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம், கோங்கிலவுவிருட்சம்.)

ஒருஅரசனது தண்டலாளராயிருந்த சிவபக்தர், அரசிறைப் பொருளைச் செலவழித்து ஆலயத்திருப்பணி செய்ததை அரசனறிந்து அழைப்பிக்க, அச்சிவபக்தர், அரசாஞ்ஞைக்குப் பயந்து, உயிர் துறந்தமையை அரசன்கண்டு, அவரது சரீரத்தை நகரைக் கடந்து அகற்றுவிக்கும்படி செய்தபொழுது, அச்சரீரம் திருவியலூரில்வர,

அதற்குமுன் அவர் மனைவியார் மங்களநாயகியாராற்பெற்ற சுமங்கிலி த்துவத்தின் பயனால் இறந்துபோன, அவ்வடியவர் உயிர்பெற்றெழு ந்து, சிவதரிசனஞ் செய்தருளியதலம்.

ஏயர்கோன் கலிக்காமநாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் பக்தியுடையவராயிருந்து முத்தியடைந்த தலம். திருநாவுக்கரசுசுவா மிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப் பதிகங்கள் - உ.

—இதற்கு வடமேற்கு ச - மைலில்,

ரு௬. * திருப்பனந்தாள். (தாடகேச்சரம், திருப்பனசை.)

(சடையப்பநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, பிரமதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம், பனைவிருட்சம்.)

சிவபக்திமிகுந்த, தாடகையென்னு மம்மையார், சிவார்ச்சனை செய்து மாலைசாத்தப்போம் சமயத்தில் உடைநெகிழ, அதனைத் தம் முழங்கையாலிடுக்கி, மாலைசாத்துந் திருப்பணிக்கு இடையூறுவந்த தைக் குறித்துத் துக்கித்தலை யுணர்ந்த சிவபெருமான் திருமுடியைச் சாய்த்துக் கொடுத்து மாலை சாத்தப் பெற்றுக்கொண்ட தலம். அம் மாலை யேற்கும் நிமித்தம், சாய்ந்த திருமேனியையுடைய சிவபெருமா னை நேர்நிறுத்தும்பொருட்டு, அரசன் அநேக யானைமுதலியவற்றால் வலித்திழுத்தும்,நேர்படாமையை யுணர்ந்த குங்கிலியக்கலயநாயனார், தமது கழுத்திற்கும், சிவபிரானுக்குங் கயிறுபூட்டி யிழுப்ப, சிவபெ ருமா னேர்நின்றருளினராயினும், தாடகையாரது திருத்தொண்டை யுலகோர்க்கறிவிக்கும்பொருட்டு,இக்காலத்தும் சற்றுச் சாய்ந்தேயிரு க்கின்ற தலம்.

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடிய ருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு க - மைலில்,

ரு௭. * திருஆப்பாடி.

(பாலுகந்தேச்சுரர், பெரியநாயகியம்மை, மண்ணியாறு, பால்தீர்த்தம், ஆத்திவிருட்சம்.)

இவ்வாயர்பாடியி லிருந்த ஓர் ஆயன் பால் கறந்து வீட்டுக்குக் கொண்டு செல்லுகையில், இடையே தினந்தோறும் கால்தடுக்கிப் பா ல்கவிழ்ந்துகொண்டு வருதலையுணர்ந்தஅவ்வாயன்,கையிலிருந்தகொடு வாளாலோச்ச, அக்கொடுவாள்பட்டவடுவினின்றுங் குருதிசொரிதலை க்கண்டு,மனமிரங்கிப் "பாலுகந்தநாதரோ" வென்றுதொழ,அநுக்கிர கித்த தலம்.

ஐயடிகள் காடவர்கோன்நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளியதலம். சுவாமிக்குத் தீபாராதனை செய்தவுடன் சண்டேசருக்கு தீபாராதனையாகுந்தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

இதற்குத் தெற்கு அரை மைலில்,

சச ✻ திருச்சேய்ஞலூர்.

(சத்தகிரியீச்சுரர், சகிதேவியம்மை, சத்ததீர்த்தம், மண்ணிநதிதீர்த்தம்.)

சூரசம்மாரத்திற்காக வெழுந்தருளிவந்த ஆறுமுகக்கடவுள், ஓர் நாட்டங்கிச் சிவபூசை செய்து ஆயுதம் பெற்ற தலம்.

சண்டேச்சுரநாயனார் பிராமணகுலத்தில் வைகாசிமாதத்திருவாதிரையில்திருவவதாரஞ் செய்தருளிப்பசுநிறைகாக்குந் தொழிலுடையோராய்,நீர்த்துறையிற்சென்றுமணலாற்சிவலிங்கந்தாபித்து, ஆவின்பாலைக்குடங்களினிரப்பிப் பூசைசெய்துவருதலை,அவர்தந்தையாருணர்ந்துஅப் பால்முதலியவற்றைக் காலாற்றட்டி வீழ்த்த,சண்டேசநாயனார்கோபித்துத் தமதருகிலிருந்தகோலால்தந்தையார்தாளிலெறிய,அக்கோலேமழுவாகத் தந்தைதாளைத் துணித்துவிட்டது. இந்நாயனாரது அன்புக்கிரங்கிய சிவபெருமான் சண்டேசபதமும், பரிகலப்பூசையும் திருவருள்செய்யப் பெற்றுத் தைமாத உத்திரநாளிற் சிவபதமிருக்கப் பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தென்மேற்கு ச - மைலில்,

சஉ. ✻ திருந்துதேவன்குடி.

(கற்கடேச்சுரர், அருமருந்துநாயகியம்மை, பங்கயதீர்த்தம், அசுவதீர்த்தம்.)

தேவர்களும், அசுவமும், நண்டும் பூசித்த தலம். இப்போதும் ஒரே நிறப்பசுக்களின்பால் பதின்கலம்சிவலிங்கப்பெருமான் திருமுடியிலபிஷேகஞ்செய்தால் அம்முடிமீது ஒருபொன்னிறமுடைய நண்டு ஊரத்தரிசனமாமென்பர். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தெற்கு க-மைலில்,

சங. ✻ திருவியலூர்.

(யோகாநந்தேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, சடாயுதீர்த்தம், நிருதிதீர்த்தம்.)

திருமங்கலக் குடியிற் திருப்பணி செய்து தேகவியோகமான அடியவரை, இத்தலத்துக்குக் கொண்டுவரும்பொழுது,சிவபெருமான் உயிர்ப்பிக்கச் செய்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க,

—இதற்கு மேற்கு க - மைலில்,

சச. * திருக்கொட்டையூர் கோடீச்சுரம், (கொட்டையூர்.)
(கோடீச்சுரர், பந்தாடு நாயகியம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

மார்க்கண்டேடயர் முதலிய அநேக ரிஷிகள் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குமேற்கு க - மைலில்,

சரு. * திருவின்னம்பர்
[அம்பர்முத்தேச்சுரர், எழுத்தறிவித்தநாதர், பூங்கொம்பன்னை, கொந்தார் பூங்குழலம்மை, ஐராவததீர்த்தம், திருக்குளதீர்த்தம்.]

அகத்தியமுனிவர் பூசிப்ப, அவருக்கு இலக்கண முபதேசித்தருளிய தலம். கணக்கப்பிள்ளைகளுக்குள்கணக்காராக சிவபெருமானிருந்து வெள்ளேட்டைவைத்து கோயிற்கணக்கொன்றும் குறைவுறாமல் அரசனிடங் கணக்கொப்பிவைத்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகங்கள்-ரு.

—இதற்கு வடக்கு உ - மைலில்,

சசு. * திருப்புறம்பயம்.
[சாட்சிநாதேச்சுரர், கரும்பன்னசொல்லம்மை, பிரமதீர்த்தம், கூவதீர்த்தம், புன்னைவிருட்சம்.]

சுந்தோபசுந்தர்பூசித்த தலம். வணிககன்னிகைக்குக் குறிப்பிட்ட மணவாளன் அரவாலிறந்தவனைத் திருஞானசம்பந்த சுவாமிகளா லுயிர்ப்பிக்கப் பெற்றதலம். இதில் பிரளையங்காத்தப் பிள்ளையார் ஆவணிமாதம் விநாயகசதுர்த்தியில், கூச - சேர், தேன்பரிவட்டங் கொண்டொற்றிக்கொடுக்க அவ்வளவும் விநாயகமுகூர்த்தத்திற் சுவறிவிடுகிறது. வன்னிவிருக்ஷம் வணிகப்பெண்ணுக்குச் சாட்சிசொன்ன தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு.

—இதற்கு வடமேற்கு ச - மைலில்,

சஎ. திருவிஜயமங்கை.
(விஜயநாதேச்சுரர், மங்கைநாயகியம்மை, அருச்சுனதீர்த்தம்.)

பஞ்சவரிலொருவனாகிய விஜயன், பாசுபதம்பெறும்பொருட்டுப் பூசித்ததலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடமேற்கு க-மைலில்,

சஅ. * திருவைகாவூர். (வில்வவனம்.)
(வில்வவனேச்சுரர், பவளக்கைநாயகி, பூவைவல்லியம்மை, கூற்றுவதீர்த்தம், வில்வதீர்த்தம்.)

வில்வவனக்ஷேத்திரம். மகாலட்சுமி பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு அ - மைலில்,

சுசூ. ## * திருவடகுரங்காடுதுறை.

(குலைவணங்குநாதர், அழகுசடைமுடிநாதேச்சுரர், அழகுசடைமுடியம்மை, வாலிதீர்த்தம்.)

வாலி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு மேற்கு க - மைலில்,

ருய. ## * திருப்பழனம்.

(ஆபத்சகாயேச்சுரர், பெரியநாயகியம்மை, மங்களதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம், திக்குப்பாலகர் பூசித்ததலம்.)

(அப்பூதியடிகள் நாயனார்) திருத்திங்களூரிலே அந்தணர்குலத்திலே, மார்கழிமாதப் பூசநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிச் சிவபணிவிடைசெய்து வருங்காலத்தில், திருநாவுக்கரசுசுவாமிகளா னிகழ்ந்த அற்புதங்களைக் கேள்வியுற்றுத் தாம் செய்யுந் தண்ணீர்ப்பந்தல், அறச்சாலை, குளமுதலியவெத்தருமத்திலும், திருநாவுக்கரசுசுவாமிகள் தருமமெனப் பெயரெழுதி யிருந்தனர்; அங்கெழுந்தருளிய திருநாவுக்கரசு சுவாமிகளுக்கி, அந்நாயனாரிடத்திற் சென்றருள, நாயனார் அங்குற்றவர்களுக்கு விருந்தளிக்கும்பொருட்டு, வாழையிலைகொய்யத் தமது மூத்தகுமாரனை பெரிய திருநாவுக்கரசை யனுப்பியதில், அவனை அரவுதீண்டி யிறந்ததையும் பொருட்டுச் செய்யாமல், திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அன்னம் பரிமாறுங்கால், சுவாமிகள் குறிப்பாலுணர்ந்து, விடத்தாலிறந்த பிள்ளையெழும்படி திருப்பதிகமோதி, விருந்தருந்தி, விடைபெற்றுச்செல்ல, நாயனார் பின்னரும் பல பணி, விடைகளைச் செய்தும், திருநாவுக்கரசு சுவாமிகளது திருப்பதிகத்திற் சேரப்பெற்று, தைமாதச் சதயநாளிற் றிருவடிசேர்ந்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு. —இதற்கு மேற்கு க - மைலில்,

ருக. ## * திருவையாறு.

(செம்பொற்சோதிநாதர், பஞ்சநதீச்சுரர், அறம்வளர்த்தநாயகியம்மை, பஞ்சணதீர்த்தம், சூரியதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம்.)

தருமதேவதை அழியாப் பதம் பெறும்பொருட்டுப் பூசித்துத் திருநந்திதேவராய்ச் சகல வைபவங்களும் பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருக்கயிலாய தரிசனத்துக்குச் சென்றவிடத்துக் கைகாலுடம்புறுப்புகளனைத்தும் தேய்ந்து கிடப்பதையறிந்த சிவபெருமான், ஓர் சித்தவடிவமா யெழுந்தருளி, ஓர் பொய்கையை யுண்டாக்குவித்து, அதில் நாவரசுகளை மூழ்குவித்துத் தேய்ந்த உறுப்புகள் வளர்ந்து இத்தலத் தெழும்வண்ணம் கிருபை பாலித்து, அரசுகள் விரும்பி வருந்தி யடைய வெத்தனித்த, திருக்கயிலாயக் காட்சியை

ஆடிமாத அமாவாசையில் காட்டியருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளும், சேரமான்பெருமாள் நாயனாரும், காவிரியின் றென்கரையிலிருந்து இத்தலத்தைத் தரிசிக்கவரும்பொழுது, காவிரியின் பெருவெள்ளத்தினாற் றடுப்புண்டு, சுந்தர மூர்த்திசுவாமிகள் பதிகம் பாடியழைப்ப, ஐயாறுடைய வடிகள் ஓலம் என்றருளி, அக்காவிரிநீரை, வந்த ஜலம் பளிங்குமலேபோ னிற்பவும், மற்றஜலம் வடிந்து, தரையில் வழிகாட்டத்தம்பிரான் தோழரும், அவர் தோழரும் திருக்கூட்டங்களுட னிங்குவந்து ஐயாறடிகளைத் தரிசித்துச்சென்ற பிறகு, காவிரியைப்பெருகி, ஓடும்படிசெய்தருளிய தலம். நந்திகேசுரருக்குத் திருமழபாடியில் திருக்கலியாணம் சித்திரைமாதவிசாகத்தில், சத்தஸ்தானம்.

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலுந் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - கஅ. —இதற்கு மேற்கு க - மைலில்,

## ருஉ. * திருநெய்த்தானம். (தில்லைத்தானம்.)

(நெய்யாடியப்பேச்சுரர், வாலாம்பிகையம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

வாக்கின்செல்வி பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-சு.

—இதற்கு மேற்கு க-மைலில்,

## ருங. திருப்பெரும்புலியூர்.

(வியாக்கிரபுரேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, வியாக்கிரதீர்த்தம்.)

வியாக்கிரபாதரிஷி பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ந - மைலில்,

## ருச. * திருமழபாடி.

(வச்சிரத்தம்பநாதேச்சுரர், அழகாம்பிகையம்மை, கொள்ளிடநதிதீர்த்தம்.)

தேவேந்திரன் பூசித்த தலம். ஐயடிகள்காடவர்கோன் நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளியதலம். சமயாசாரியர்மூவராலும்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-சு. இதற்குவடக்கு , -மைலில்,

## ருரு. * திருப்பழூர். (கீழப்பழூர்.)

(வடவன மூலநாதேச்சுரர், அருந்தவநாயகியம்மை, கொள்ளிடநதிதீர்த்தம்.)

சப்தகன்னியர்கள் பூசித்ததலம். இஃது அட்டவீரட்டத்திலொன்று. இது யானையைச் சம்மாரஞ்செய்தவிடம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

இதற்குத் தென்மேற்கு ய - மைலில்,

## ருசு. * திருக்கானூர்.

(செம்மேனி நாயகேச்சுரர், சிவயோகநாயகியம்மை, வேததீர்த்தம், கொள்ளிடநதிதீர்த்தம்.)

உமாதேவியார், சிவயோகசாதனஞ்செய்திருக்கும்பொழுது சிவபெருமான் அக்கினிசொரூபமாய்த் தரிசனங் கொடுத்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடக்கு ரு - மைலில்,

## ருஎ. * திருஅம்பிலாலந்துறை. (திருமாலயந்துறை, அன்பில்)

(சத்தியவாகேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, கொள்ளிடநதிதீர்த்தம்.)

பிரமா, விஷ்ணு, தேவேந்திரன், வாகீசனெனுமுனி, இவர்கள் பூசித்து அருள்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடமேற்கு எ - மைலில்,

## ருஅ. * திருமாந்துறை.

(ஆம்பிரவனேச்சுரர், அழகாவுயர்ந்தஅம்மை, காயத்திரிதீர்த்தம், மகாதீர்த்தம், மாவிருட்சம்.)

கண்ணுவமகாரிஷி பூசித்ததலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு தென்மேற்கு ச - மைலில்;

## ருசு. * திருப்பாற்றுறை.

(திருமூலநாதேச்சுரர், மேகலாம்பிகையம்மை, திருக்குளதீர்த்தம்.)

மார்க்கண்டரிஷிபூசிக்கும்போது, அபிஷேகத்திற்குஆவின்பால் கிடையாமல் வருந்துவதையுணர்ந்த, சிவபெருமான்பால்பெருக அநுக்கிரகித்த தலம். சிவபெருமான் புற்றில் பொன்னிறமாய் எழுந்தருளியிருந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. இதற்குத் தென்மேற்கு ரு - மைலில்,

## சுய. * திருவானைக்கா, (ஜம்புகேஸ்வரம்.)

(ஜம்புநாயகர், அகிலாண்டநாயகியம்மை, சிவகங்கைதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம், ஜம்புநாவல்விருட்சம்.)

நாவல்வனம், அப்புலிங்கம். இஃது பஞ்சபூதக்ஷேத்திரத்திலொன்று. அகிலாண்டநயாகியார் ஞானோபதேசப்பேறடைந்த தலம்.

பராசரமுனிவர், திருமால், கோச்செங்கட்சோழர், கௌதமர்முதலாயினோர் வழிபட்டுப் பேறுபெற்றதலம். இவ்வனத்திற் றவஞ்செ

ய்திருந்த ஜம்புமுனிவர்முன், ஒரு நாவற்கனிவிழ, அதை அவர் திருக்கயிலாயத்திற் சென்று சிவபெருமானிடத்துக் கொடுத்தருள, சிவபெருமான் அக்கனியை யுண்டுமிழ்ந்தவித்தினை ஜம்புமுனிவரருந்தினர்; அவ்வித்துச் சிவபிரானுமிழ்ந்த காரணத்தானும், ஜம்புமுனிவர் தவத்தானும், அவர் கபாலங்கீண்டு ஓர் நாவல்மரமாயது. அந்நாவனிழலில் அனேக இருடிகள் முதலாயினோர் தவஞ்செய்திருப்புழி, ஜம்புமுனிவர் சிவபிரானை யம்மரத்தினிழலிலெழுந்தருள வேண்டிக் கொண்டனர். சிவபெருமான் அவருக்கு நீ கொணர்ந்த கனி எவ்விடத்துக் கிடைத்ததோ, அவ்விடத்துக்குவாவெனத்திருவுளம்பற்ற, ஜம்புமுனிவர்தம்மேல் முளைத்துவளர்ந்த மரத்துடன் இத்தலத்திற்கு நடந்துவந்தனர். அப்பொழுது தம்மிடத்துப் பிரியாதிருக்க வேண்டிக்கொண்டபடி, சிவபெருமான் ஜம்புமரத்தடியிலெழுந்தருளி யிருக்குந் தலம்.

ஊழ்வினைப்பாங்கா லோர் சிலம்பியும், வெள்ளையானையும் பூசிக்குங்காலத்து, ஒன்றன் பூசையை மற்றொன்று தத்தம் பூசனைக்கிடையூறு செய்வதாகக் கருதிப் பகைமையுற்று வலிதிலிறக்கச் சிவபெருமான் முன்னின்றருளி, அவ்விரண்டிற்கும் தேவவுருவங் கொடுத்து, அவற்றுள் யானையை நோக்கி, நீ நிஷ்காமியமாகப் பூசித்தமைபற்றி இவ்வனத்திற்கு ஆனைக்காவெனப் பேர்வழங்குக, அன்றியும் சிவகணநாதனுய்வாழக்கடவாயென்றனுக்கிரகித்தருளியும், சிலம்பியைநோக்கி நீபூசிக்குங்கால் ரத்தினகிகளாற் பூசிக்க விரும்பியபடியால், கோச்செங்கட் சோழராஜனாகப்பிறந்து, அநேகதிருப்பணிகளைச்செய்து பின்பு முத்தியடைவாயென்று மனுக்கிரகிக்கப் பெற்ற தலம்.

உறையூரிலரசு செய்த சோழமகாராஜன்நீராடும்பொழுது, தம் தேவி கழுத்தில் விளங்கிக்கொண்டிருந்த ஆரம், சிவபிரானுக்காகுமென்று நினைத்த அளவில், அது காவிரியாற்றில் விழுந்துவிட, அதன் அருமையை நினைத்து அரசனுக்குண்டாகியமனவருத்தத்தை, காவிரி நீர் கொண்டுவந்த திருமஞ்சனக்குடத்தின்வழித்தாய், அவ்வாரத்தையே சிவபெருமான் திருமுடியிலணிந்தருளி நீக்கியருளியதலம்.

இத்தலத்தில் சிவபெருமான் சித்தவடிவங்கொண்டு திருநீற்றையே கூலியாகக்கொடுத்துக்கட்டுவித்த திருமதிலொன்றிருக்கின்றது. அதற்குத் திருநீறிட்டான் திருமதிலென்று வழங்குகின்றது.

ஐயடிகள் காடவர்கோன் "க்ஷேத்திர வெண்பா" பாடி யருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - எ. —இதற்கு வடமேற்கு கக - மைலில்,

சுக. * திருப்பைஞ்ஞீலி (லால்குடி.)
(மாற்றறிவரதேச்சுரர், நீலகண்டேச்சுரர், வாலசௌந்தரியம்மை, விசாலாட்சியம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

தேவர்கள் அரம்பைமாதர் முதலாயினோர் வாழைமரங்களாய்ச் சூழ்ந்துபூசித்ததலம். இதற்கடையாளமாக இன்றளவும் ஆலயத்துட்பிரகாரத்திலுள்ள பாறைமீதுவாழைவளர்ந்தோங்கி யிருக்கின்றது.

மார்க்கண்டரிஷி பொருட்டாய், யமனை யுதைத்தபின்னர், யமனிறந்துபோனமை யாலுலகுயிர்களை முடிப்பாரின்றிப்பல்க, பூமிமாது பாரந்தாங்கலாற்றாதவளாய், திருமாலிடத்து முறையிடத் திருமால், பிரமேந்திராதிகள், பூமிதேவியுடன்வந்து பூசித்துச்சிவபிரானருளால் யமனையெழுப்பியருளப் பெற்ற தலம்.

(இரத்தினசபை, நடேசருக்குரத்தினசபாபதியென்றுநாமகரணம்.)

திருநாவுக்கரசு சுவாமிக ளித்தலத்திற்கு வரும்வழியில், பசியிளைப்பு மேலிட்ட தறிந்த சிவபெருமான், ஓர் மறையவ வடிவங்கொண்டு சென்று, இதற்கொருமைலிலிருக்கும் ஓர்வாவிக் கரையிற் கட்டமுதுடனிருப்ப, எதிர்வந்த அரசுகளது பசி தாகத்தைப் பொதிசோறு தந்து தணித் தழைத்துவந்து, முதலாவது பிராகாரத்தில் விட்டுமறைந்து, "சோறிடுமீசனுர்" என்று பதிகம்பெற்றுள்ள தலம். சமயாசாரியர்மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ந.

—இதற்குத் தென்கிழக்கு - ச - மைலில்,

சுஉ. * திருப்பாச்சிலாச்சிராமம். (திருவாசி.)
(ஆரண்ணியவிடங்கர், நீலகண்டேச்சுரர், மாற்றுவரதீச்சுரர், விசாலாக்ஷியம்மை, வாலசவுந்தரியம்மை, அன்னமாம்பொய்கை, வன்னிவிருட்சம், ஆரண்யதீர்த்தம்.)

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனா ரெழுந்தருளி வருவதறிந்த கொல்லிமழவன் என்னுமரசன், எவ்வாற்றானுந் தீராத குமரகண்டவலியையுடைய தன்மகளை, ஆலயத்துட் கொண்டுவந்து போடுவித்திருக்க, நாயனாரெழுந்தருளிவந்து கண்ணுற்று, "இம்மங்கையை வாடமயல்செய்வதுமாண்போ" என்று பதிகமோதி அக்குமரகண்டவலியைத் தீர்த்தருளிய தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் வந்து பதிகமோதித் தொழுதும் பொருள்கொடுக்கத் தாழ்த்தமைபற்றி, "நச்சிலராகில் இவரல்லாற்பிரானில்லையோ" என்று பதிகம் பாடிப் பொன்பெற்ற தலம்.

ஐயடிகள் காடவர்கோன்நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு மேற்கு உ௰ - மைலில்,

சுங. * திருஈங்கோய்மலை. (திருவிங்கநாதமலை.)
(மரகதாசலேச்சுரர், மரகதவல்லியம்மை, அமுததீர்த்தம், அகத்தியதீர்த்தம்.)

அகத்தியரிஷி பூசித்தற்குச் சமயம்வாய்க்காமல், ஈ வடிவமாய்ச் சென்று பூசித்த தலம். மாணிக்கவாசகசுவாமிகள் "ஈங்கோய்மலையி லெழிலது காட்டியும்" என்றருளிச் செய்யப்பெற்ற தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

சுச. ¶ திருநாகேச்சுரம். (பாவனசம், சேலம்.)
(சுசவனேச்சுரர், சுவர்ணாம்பிகையம்மை, விசுவதீர்த்தம்.)

வச்சிரமுனி, குச்சரமுனி, நாகராசன், கிளி, இவர்கள்முறையே நான்கு யுகங்களிலும் பூசித்து அனுக்கிரகம் பெற்றதலம்.

சுரு. ¶ புவனகிரி.
(வேதபுரீச்சுரர், மீனாட்சியம்மை, சுவேதநதி.)

இஃது சிவாக்கினையினால் மேருகிரியிலிருந்து பூமிதேவியைக் காப்பாற்றவந்த பர்வதம். சோமகாசுரனெடுத்துக்கொண்டுபோன வேதங்களை வரவழைக்க தேவர்கள் பூசித்த தலம்.

சுசு. ¶ திருவழுவூர்.
(மாவுரிநாதேச்சுரர், வனமுலையம்மை, சிவதீர்த்தம்.)

கயாசுரனென்பவன், பிரமதேவனாற் பெற்ற வரப்பிரசாதத்தினாலே, சகல தேவர்களையும் வருத்துங்காலத்துத் தேவர்கள் வேண்டுகோளாற் சிவபெருமான் அநேக கோடி சூரியோதயம்போல ஒளிவிடும், உக்கிரவடிவங்கொண்டு, அக்கயாசுரனை வதைத்தபொழுது, எம்பிரானது ஒளியைக்காணக்கூசிய தேவர்கள்பொருட்டுத் தம்தேககாந்தியை அக்கயாசுரனாகிய யானையினது தோலையுரித்துப்போர்த்து மறைத்துத் தரிசனங் கட்டளையிட்டருளிய தலம்.

சுஎ. ¶ திருவேரகம். (சுவாமிமலை.)
(சுவாமிநாதக்கடவுள், பாலசுப்பிரமணியசுவாமி, திருக்குளதீர்த்தம்.)

இது முருகக்கடவுளாரது, ஆறுபடைவீடுகளிலொன்று, சிவதரிசனஞ்செய்துவந்த பிரமதேவர், முருகக்கடவுளி னிளமைப் பருவத்தைப்பற்றி வந்தனஞ்செய்யாதேக, அவரை முருகக்கடவுளழைத்துப் பிரணவத்திற்குப் பொருள் கேட்ப, அவர் விடைகூறாமைபற்றி, அப்பிரமதேவரைக் குட்டிச் சிறையிட்டுச் சிருட்டித்தொழிலை நடத்துங்கால், தேவர்கள்வேண்டுகோளின்படி சிவபெருமான்சிறைநீக்கச்சொல்லியும்விடாது, எம்பிரானேவந்துவிடுவிப்ப, விடுத்தருளியபின்னர், சிவப்பிரானுக்குப் பிரணவார்த்தத்தை யுபதேசித் தருளிய தலம்.

இதில் பதிகம் பெற்றதலம், சுங. புராதனதலம், ங.
சுப்பிரமணியர்தலம் - க. ஆக - சுஎ.
காவிரியின் வடகரை முற்றிற்று.

---

¶ இக்குறிப்பிட்டதலங்கள் பாடல்பெறாதீவைகள்.

சிவசுப்பிரமணியர் துணை.

# காவிரியின் தென்கரை.

க. திருவாட்போக்கி (இரத்னகிரி, மாணிக்கமலை)

(இரத்தினகிரீச்சுரர், சுரும்பார்குழலியம்மை, கௌரிதீர்த்தம், காவிரிநதி தீர்த்தம்.)

சயந்தன்முதலிய தேவர்கள் பூசித்த தலம். ஆரியதேசத்தையாண்ட அரசன், மாணிக்கவிருப்பாற் றலங்கள்தோறுந் திரிந்துங்கிடையாமலிங்குற்றுப் பிரார்த்திக்கச் சிவபெருமானோர் நீர்த்தொட்டியைக் காட்டி, யதைக் காவிரிஜலத்தினு லிறைத்தா லுனதெண்ண முடியுமென்று, திருவாக்கருள, அரசன் அவ்வாறே அத்தொட்டியில் எவ்வளவு நீர்வார்ப்பினும், நிறையாதொழிய, வெருட்சிகொண்டு உடைவாளை யுருவி, யோச்சநினைக்குங்கால், அவ்வாளைப் போக்கிவிட்டு, இரத்தினத்தைக் காண்பித்தருளியவுடன், அரசனுநந்தபரவசனாய் அரசனத்தை விரும்பாதுவிட்டுச் சிவ பணிவிடை ஒன்றையேவிரும்பிப்பணிபுரிந்து சிவகதியடைந்ததலம்.

கடம்பர்கோவிலையும், இத்தலத்தையும், திருவீங்கோய்மலையையும், ஓர் தினத்தில் முறையே காலை, உச்சி, மாலையென்ற காலங்களிற் சென்று தரிசிப்போர், கருதிய வரமியாவும், பெறுவ ரொன்றுலகம்பேசுகின்றது. திருநாவுக்கரசுசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு வடகிழக்கு ௰ - மைலில்,

உ. * திருக்கடம்பந்துறை. (கடம்பர் கோவில், குழித்தலை.)

(கடம்பவனநாதேச்சுரர், முற்றிலாமுலையம்மை, ஞானதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம்.)

கடம்பவிருக்ஷம். சிவபெருமானோர்காலத்திற், கண்ணுவமகாரிக்குந் தேவர்களுக்குங் கடம்பவிருக்ஷத்திற்றோன்றி காட்சிதந்ததலம். ஐயடிகள்காடவர்கோன்நாயனர் "க்ஷேத்திரவெண்பா" பாடி யருளியதலம். வடக்குப் பார்த்த சந்நிதி. காலைக்கடம்பர், மத்தியானச்சொக்கர், மாலைத்திருவிங்கநாதர். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குக் கிழக்கு ௰ - மைலில்,

௩. * திருப்பராய்த்துறை.

(பராய்த்துறைநாதேச்சுரர், பொன்மயிலாம்பிகையம்மை, அகண்டகாவிரிதீர்த்தம், பராய்விருட்சம்.)

தேவேந்திரன், சப்தரிஷிகள், குபேரன் பூசித்ததலம். மாணிக்கவாசகசுவாமிகளால் "தென்பராய்த்துறையாய் சிவலோகா" எனச்

சிறப்பிக்கப்பட்டுள்ள தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு ம - மைலில்,

சு. * திருக்கற்குடிமலை. (உய்யக்கொண்டான்பெருமலை.)

(முத்தீச்சுரர், உச்சிவரதநாயகர், அஞ்சனாட்சியம்மை, முத்திதீர்த்தம்.)

ஈழநாட்டரசன் முத்திபெறவிரும்பி பலபதிவணங்கியபின் இங்குற்றுப் பூசித்தபோது, உச்சிக்காலத்தில் வந்து பூசிக்குதி எனவெழுந்த அசரீரிகேட்டு, அவ்வாறே பூசித்துத் துதித்தற்கிரங்கிச் சிவபெருமான், நடன தரிசனங் காட்டி முத்தி கொடுத் தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ரு.

—இதற்கு வடகிழக்கு ச - மைலில்,

ரு. * திருமூக்கீச்சுரம். (உறையூர்.)

(பஞ்சவர்ணநாதேச்சுரர், காந்திமதியம்மை, பஞ்சவர்ணதீர்த்தம், குடமுருட்டிநதி தீர்த்தம்.)

பிரமாவந்து பூசிக்கும்போது, சிவபெருமான், காலத்துக்கொரு திருக்கோலமாக வீற்றிருக்கக்கண்டுமகிழ்ந்து, பஞ்சவர்ண நாதரெனக் காரணப்பேர் சாத்தி, நல்வரம் பெற்ற தலம்.

புகழ்ச்சோழநாயனார், திருவவதாரமான தலம். சோழராஜாது ராஜதானியாயிருந்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடகிழக்கு க - மைலில்,

சா. * திருச்சிராப்பள்ளி. (திரிசிரபுரம்.)

(செவ்வந்தீச்சுரர், மாதுர்பூதேச்சுரர், மட்டுவார்குழலியம்மை, காவிரித்தீர்த்தம், திருக்குளத்தீர்த்தம்.)

ஸ்ரீராமர், அனுமார், திரிசிரன், பூசித்த தலம். சாரமாமுனிவர் பாதலத்திலிருந்து கொண்டுவந்து பயிராக்கிய செவ்வந்திமலரை, பூவாணிபன்கரவிற் கொணர்ந்து, அரசனுக்களிப்ப, அவன்றன் தேவியாருக்குக் கொடுத்தான். இக்கரவையுணர்ந்த முனிவரரசனிடத்து முறையிட்டுங் கேளாமையால், சிவபெருமானிடத்து முறையிடச் சிவபெருமான் மேற்குமுகமாகி, அவ்வரசனது பதியாகிய உறையூரை மண்மாரிபெய்வித்து, அழித்த தலம்.

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழும், ரத்தினகுத்தன் என்பவன், புத்திரப்பேறுவேண்டித்தவஞ்செய்து, ஓர் கன்னியைப்பெற்று, இங்குவாழுந் தனகுத்தனுக்கு விவாகஞ்செய்துகொடுத்தான். அப்பெண் வெள்ளிக்கிழமைதோறும் மாதுர்பூதேச்சுரரை தரிசித்து வருங்கால், அவள் தகப்பன் காலஞ்சென்றபின், அப்பெண் கற்பவதியாயினாள். பிள்ளைப் பேற்றின்காலத்து, அவள்தாய், காயம்முதலியனகொணர்ந்

தும், காவிரியின் பெருக்காற் றடைப்பட்டாள். அப்பொழுது சிவ பெருமான், அப்பெண்ணினன்புக்காக இரங்கி, யவள் தாயைப்போல உருவங் கொண்டுவந்து, மருத்துவம்பார்த்து, மகப்பேறான பின்னர், காவிரிப்புனல் வற்ற, அப்பெண்ணின் தாயும் வந்து சேர்ந்தனள்; பின், பெண் இருதாயர்களிற் றன்றாயாவளென்று மருண்டகாலத்துச் சிவபெருமான்மறைந்தருளியநுக்கிரகித்ததலம். இதனால்சுவாமிக்குத் தாயுமானார் எனப் பெயர் பெற்ற தென்க.

ஐயடிகள் காடவர்கோன்நாயனார் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம்.

தாயுமானவரென்னும் பெரியவர், வசித்து அநேகபிரபந்தங்களருளிச்செய்து அற்புதங்கள் நடத்தியதலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள - உ. —இதற்குக் கிழக்கு ௬ - மைலில்,

எ. * திருஎறும்பியூர்.

(எறும்பீச்சுரர், நறுங்குழனாயகியம்மை, பிப்பலிகதீர்த்தம், அற்புததீர்த்தம்.)

கரதூஷணரும், எறும்புருவமெடுத்த தேவரும் பூசித் தவரவர்கள், விரும்பிய வரம் பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குக் கிழக்கு ரு- மைலில்,

அ. * திருநெடுங்களம்.

(நித்தியசுந்தரேச்சுரர், ஒப்பிலாநாயகியம்மை, சுந்தரதீர்த்தம்.)

சிவபத்தியிற் சிறந்த வங்கியசோழராசன், நாடோறும் வந்து தரிசிக்கும்பொழுது ஓர்நாட் சிவபெருமான், பேரழகோடு தரிசனங் கட்டளையிட, நித்திய சுந்தரரெனத் திருநாமஞ்சாத்தித் துதித்துப் பேறுபெற்ற தலம்.

ஐயடிகள் காடவர்கோன்நாயனார், "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு வடகிழக்கு ரு - மைலில்,

கூ. * மேலைத்திருக்காட்டுப்பள்ளி.

(தீயாடியப்பர், வார்கொண்டமுலையம்மை, சூரியதீர்த்தம், அக்கினிதீர்த்தம்.)

உறையூரில், சாரமாமுனிவரது, நந்தனவனத்திற்றிருடிய செவ்வந்திமலரை, அரசன் றன் மனைவியர்க் களிப்ப, அவர்களில் மூத்தாள் சிவபத்திவிசேடத்தால், மனையிலிருந்த சிவபிரானுக்கதனை அணிந்து வந்தமைபற்றி, அந்நகரில் பெய்த மண்மாரியில் அவள்மாத்திரம் தப்

பிப்பிழைத்து இத்தலத்தையடையவிங்கு, கானல்வருத்தம்பொழுது, தியாடியப்பரோ வென்றழைக்க, அவனுக்காகவிரங்கி, அவ்வெப்பந்தவிர்த்தநுக்கிரகித்தருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குக் கிழக்கு ய - மைலில்,

ய. * திருஆலம்பொழில்.

(ஆத்மநாதேச்சுரர், ஞானம்பிகையம்மை, திருப்பாற்குளம், காவிரிநதிதீர்த்தம்.)

அநந்தன் என்னும் நாகமும், அட்டவசுக்களும் பூசித்ததலம். சுந்தரமூர்த்திசுவாமிகள், இங்குற்றுத் துயிலுகையில் "மழபாடிக்குவர ம்றந்தனையோ" என உணர்த்தியருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குக் கிழக்கு உ - மைலில்,

கக. * திருப்பூந்துருத்தி.

(புட்பவனநாதேச்சுரர், அழகாலமர்ந்த நாயகியம்மை, காசிகங்கை, காவிரிநதிதீர்த்தம்.)

கந்தருவர்களாற் புட்பவனஞ்செய்து பூசிப்ப, மகிழ்ந்து வரமளித்த தலம்.

திருநாவுக்கரசுசுவாமிகள் இங்கெழுந்தருளி, அடியார்களுக்கு அமுதருந்திக்கொண்டிருந்த காலையில், திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள், மதுரையிற் சென்று அமண்காடழித்து இங்குவர, எதிர்சென்று பிள்ளையார் சிவிகையை அரசுகள்தாங்கிச்செல்லுழி, பிள்ளையார் ஓர்தோற்றத்தால், அப்பரெங்குற்றார்? என்று பரிசனரைவினவியருள, அப்பமூர்த்திகள், அடியேன், தேவரீர் சிவிகைதாங்கும்பெரும்பேறுபெற்றிங்குற்றேன் என்னும், வாசகம் முற்றுமுன், பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து அப்பரைவணங்க,அப்பமூர்த்திகளும் வணங்கித்தழுவிக்கொண்டு புட்பவனநாதேச்சுரரைத்தரிசித்ததலம்.திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு.

—இதற்குக் கிழக்கு க - மைலில்,

கஉ. * திருக்கண்டியூர்.

(வீரட்டானேச்சுரர், மங்கைநாயகியம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

மகாவிஷ்ணு பூசித்த தலம். ஓர் காலத்தில் பிரம விஷ்ணுக்கள், மகாமேருகிரியின்மீதிருக்கும்போது, சிலமுனிவர்கள்வந்து, யாவரும், வணங்கத்தக்க பரம்பொருள் யாரென்று வினவ, யான் பரம், யான் பரமென்று, அவ்விருவரு முரண்டு யுத்தஞ்செய்யப்புக்குழி, பிரணவ

மவர்கள்முன்றோன்றி, நீவிர் பரமல்லீர், சிவபெருமானே பரமென்று சொல்லவுங் கேளாது பூசலிட்டபொழுது, சிவபெருமான் றோன்றியருளினர். அவ்வாறு தோன்றியும் பிரமதேவர் முனிவுதணியாது இகழச் சிவபெருமான் வயிரக்கடவுளைப் புரிந்தருளி, அப்பிரமனடுச்சிரத்தைக் கொய்து அகந்தை தீர்த்தருளவும், மற்றத் தேவர் முனிவரிடத்துஞ் சென்று, அகந்தை திரும்பொருட்டு அவர்க ளுதிரத்தைப் பலியேற்று வரும்படியாகவும் ஆஞ்ஞாபித்தவண்ணம் வடுகக்கடவுள், பிரமன் சிரத்தைக் கொய்து, அகந்தை தீர்த்து உயிர் நல்கியும், விஷ்ணுவினது நெற்றியந்தலத்து நாடி கீண்டு, பத்தாயிரம் ஆண்டு உதிரம்வார்க்கப் பெற்றும், மற்றத் தேவர்களிடத்து மவ்வாறே பைக்கமேற்றும், அகந்தை தீர்த்தருளிய தலம். இது அட்டவீரட்டானத்திலொன்று, திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குக் கிழக்கு ச - மைலில்,

கங. * திருச்சோற்றுத்துறை.

(தொலையாச்செல்வேச்சுரர், ஒப்பிலாம்பிகையம்மை, சூரியதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம்.)

சிவபத்தியிற் சிறந்த அருளாளனெனுமறையவன், பசிநோயால் வருந்தும்போது, எடுக்கஎடுக்கக் குறையா திருக்கும்படியான, உலவா அமுதளித்தருளிய தலம். தேவேந்திரன் முதலியோர் பூசித்தருள்பெற்றதலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௬.

—இதிற்குத் தென்மேற்கு-க-மைலில்,

கச. * திருவேதிகுடி.

(வேதபுரேச்சுரர், மங்கையர்க்கரசியம்மை, காவிரிநதிதீர்த்தம், சுந்தரதீர்த்தம்.)

வேதங்கள், சைதன்னியமகாரிஷி, குபேரன், முதலியோர் பூசித்த தலம் திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தென்கிழக்கு ச - மைலில்;

கரு. * திருத்தென்குடித்திட்டை. (திட்டை,)

(பசுபதீச்சுரர், உலகநாயகியம்மை, சக்கரதீர்த்தம், பசுதீர்த்தம், சிவதீர்த்தம்.)

காமதேனு, கௌதமரிஷி, ஆதிசேடன், முதலியோர் பூசித்து அவரவர் விரும்பியவாறு பெற்றருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ச - மைலில்

கரு. * திருப்புள்ளமங்கை.

(திருவாலந்தரித்தஈச்சுரர், அல்லியங்கோதையம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

தேவர்கள் அமுதங்கடைந்தபோதெழுந்த விஷத்தை, யவர்களுய்யும்பொருட்டு, அலாலசுந்தரராற் கொணருவித்து, அருந்தித் திருமிடற்றடக்கினமையால், அக்காரணப்பெயருண்டாகிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்- க.

—இதற்கு கிழக்கு உ-மைலில்,

கஎ * திருச்சக்கரப்பள்ளி, (ஐயம்பேட்டை..)

(ஆலந்துறையீச்சுரர், பசுபதிநாயகேச்சுரர் அல்லியங்கோதையம்மை, பால்வளைநாயகியம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

இந்திரகுமாரனை சயந்தனும், தேவர்களும், பூசித்த தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்கிழக்கு ச - மைலில்,

கஅ. * திருக்கருகாவூர். (திருக்களாவூர்.)

(முல்லைவனேச்சுரர், கரும்பனையாளம்மை, அர்புததீர்த்தம்.)

சந்திரன்,இராசிகள்,பூசித்ததலம். திருநாவுக்கரசுசுவாமிகள்,திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ.

—இதற்கு வடக்கு ச-மைலில்,

கக. * திருப்பாலைத்துறை.

(பாலைவனநாதேச்சுரர், தவளவெண்ணகையம்மை, பிரமதீர்த்தம்,)

பிரமா, தேவர்கள் முதலாயினோர் பூசித்த தலம். தாருகாவனத்திருடிகள் அனுப்பிய, புலியை யுரித்துச் சிவபெருமான் தரித்தருளியதலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகம் - க. —இதற்குத் தென்கிழக்கு உ - மைலில்,

உ௰. * திருநல்லூர்.

(பெரியபாண்டவேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை, சுந்தரதீர்த்தம்.)

பஞ்சபாண்டவர்கள், கிருஷ்ணன், வசுதேவன், முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருச்சத்திமுற்றத்தி லெழுந்தருளியிருந்தபொழுது, திருவடிசூட்டவேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கு, சிவபெருமான், நல்லூரில், வருகவென்று ஆஞ்ஞாபித்தபிரகாரம் இத்தலமுற, "உன்னுடையநினைப்பதனைமுடிக்கின்றோம்" என்று திருவாக்கருளித் திருவடிமுடி சூட்டப்பெற்றுப் பதிகமோதியருளியதலம்.

(அமர்நீதிநாயனார்.) பழையாறையில் வைசியகுலத்தில், மார்கழிமாதச்சித்திரைநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவத்தொண்டு

செய்துவருங்கால், அவரன்பு சோதிக்கும்பொருட்டுச் சிவபெருமான், ஓர் துறவியாய் வடிவமெடுத்துவந்து நாயனரது திருமடத்துத்தங்கி, நாயனரிடத்து கௌபீனத்தை வைத்திருக்கும்படி கொடுத்துவிட்டுப் போய், மறுபடியும் வந்து கேட்ப, கௌபீனங் காணமற் போனமைபற்றி, அதற்குச் சரிநிறையான பொருள் கொடுக்க உடன்பட்டுத் துலையின்கண் தமதெல்லாப் பொருள்களையும், பண்டங்களையும், துறவியாரது மற்றொரு கோவணத்தட்டிற்கு நிறையாகப்பெய்தும், கோவணத்தட்டுத்தாழ்ந்தமைபற்றி, நாயனரும், அவர்மனைவிமக்களும் அவர்செய்துவந்த தருமத்துடன் துலையேறி, ஆனிமாதம் பூரநாளிற் சிவபுரமடைந்த தலம் திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு.

—இதற்குத் தென்கிழக்கு ௩ - மைலில்,

உ௧. * திருஆவூர்ப்பசுபதீச்சுரம். (திருஆவூர்.)

(பசுபதீச்சுரர், மங்களநாயகியம்மை, பசுத்தீர்த்தம்.)

பசுக்கள், சப்தரிஷிகள், தேவேந்திரன் முதலியோர்பூசித்ததலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧.

—இதற்கு வடக்கு ௪-மைலில்,

உஉ. * திருச்சத்திமுத்தம்.

(சிவக்கொழுந்தேச்சுரர், பெரியநாயகியம்மை, சத்திதீர்த்தம்.)

ஓர்காலத்தில் உமையவள், பூசித்து அநுக்கிரகம்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், "கோவாய் முடுகியடுதிறற் கூற்றங்குமைப்பதன்முன், பூவாரடிச்சுவடென்மேற் பொறித்துவை" என்னுந் திருப்பதிகமோதச் சிவபெருமான் நல்லூருக்கு வரும்படி ஆஞ்ஞாபித்த தலம் திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - ௧. —இதற்குத் தெற்கு ௧-மைலில்,

உ௩. * திருப்பட்டீச்சுரம்.

(பட்டீச்சுரர், பால்வளைநாயகியம்மை, ஞானதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம்.)

இங்கு ஆனிறைகளைக்காத்த காரணத்தால் பட்டீச்சுரமெனவழங்குகின்றது. திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள், திருவலஞ்சுழியிலெழுந்தருளி யிருக்கும்பொழுது, மிகுந்த வெப்பத்தைத்தராநின்ற வேனிற்காலம்வர, அவ்வெப்பத்தை நோக்காது, பிள்ளையார் பழையாறை, வடதளி, திருச்சத்தி முற்றம், முதலிய தலங்களைத் தரிசித்து, இங்கெழுந்தருளச் சிவபெருமான், அவ்வெப்பந் தணித்தற்பொருட்டு முத்துப்பந்தரைப் பூதங்களிடத்தனுப்ப, அப்பூதங்கள் சிவபெருமானருளிப்பாட்டை யறிவித்து, அடியார்கையிற்கொடுக்க, அப்ப

ந்து யேற்கொண்டருளிய பிள்ளையார் பதிகம்பாடப் பெற்றருளியதலம். ஞானதீர்த்தத்தில் மார்கழிமாத அமாவாசயில்கருடதரிசனம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் க.

—இதற்குத் தென்கிழக்கு க - மைலில்.

உச. * திருவடதளி.

(வடதளிநாயகேச்சுரர், கௌரியம்பிகையம்மை, விசுவதீர்த்தம்)

விசுவாமித்திரரிஷி பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளிங்கெழுந்தருளியபோது, சமணர்களால்மறைக்கப்பட்டுச் சிவபெருமான், காட்சிக்கு அரியராக, அவரைத் தரிசனஞ்செய்தன்றி உண்பதுவுமுடுப்பதுவுமில்லையென்றுவிடுத்து, இராமுழுதும் வைராகஞ்சாதித்திருப்புழி, சிவபெருமான் அந்நிலையை அரசனுக்கறிவிக்க, அரசன் மற்றைநாள் அமைச்சர்களோடீண்டி, அவ்வமணர்களையானையாற் றேய்ப்பித்து அவர்களால், மறைத்துவைத்த சிவபெருமானை வெளிப்படுத்தி,ஆலயமுதலியன செய்துதரத் திருநாவுக்கரசுசுவாமிகள் மகிழ்ந்து "அவுணர்கள் மறைத்தாலும் மறைக்கொண்ணுமோ" எனப் பதிகமோதிய தலம். திருப்பதிகம் - க.

—இதற்கு வடக்கு க - மைலில்.

உரு. * திருவலஞ்சுழி.

(சித்தீச்சுரர், கற்பகத்தீச்சுரர், நித்தியகாயகி, மங்களநாயகியம்மை, காவிரிநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

அமிர்தங்கடையுங்காலத்து முந்தியெழுந்தநுரை, அமிர்தமொத்திருந்தமையால் அந்நுரையைத் தேவேந்திரன் ஓர் கணபதியாகச் செய்து ஆத்மார்த்தமாகப் பூசித்து வருங்கால், நந்தனவனத்திற்காக வந்த காவிரிநதியானது, இவ்விடத்து வலஞ்சுழியாகச் சுழித்துப் பாதலத்திற் செல்லத் தொடங்கிற்று. அதைக்கேட்ட தேவேந்திரன், இங்குவந்து சிவபெருமானைப் பூசிக்கச் சென்றபொழுது, தனது ஆத்மார்த்தமாகிய அமிர்தகணேசரைப் பெட்டகத்துடன் சந்நிதி முகப்பில்வைத்துவிட்டுச்சென்று, சிவபெருமானைப் பூசித்து வந்தெடுக்கக் கணேசரை எடுக்ககூடாமற்போக, அக்காலத்து ஆங்கு வதிந்த வரகண்டமஹாமுனிவரோடு நண்புபூண்டு அமர்ந்திருக்கும்போது, ஓர் அசரீரி, இந்திரனே? காவிரிநதிசுழியிலாழ்ந்தது. அவ்வாறு ஆழாமற் பூமியின்மீது பிரவகிக்க வேண்டுமாகில், ஓர் மகுடமுடியேனும், ஓர் சடாமுடியேனும் பலிதரல்வேண்டுமெனக்கேட்டவரகண்டமுனிவர், இந்திரனைப்பார்த்து நீ எங்கட்கரசனுதலால், யானுயிர்துறந்தேனு, மிப்புனலை மீட்டுனக்குக் கொடுப்பேனென வாக்குத் தத்தஞ்செய்தபடி, அப்புனற்சுழியிலிறங்க, உடனேகாவிரிநதியானது பிரவகித்து

ஓட, இந்திரன் மகிழ்ந்து பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௫. —இதற்குக் கிழக்கு ௬ - மைலில்,

உ௬. * திருக்குடமூக்கு. (கும்பகோணம்.)

(கும்பேச்சுரர், மங்களநாயகியம்மை, ஏமபுஷ்கரணி, காவிரி-திதீர்த்தங்கள்.)

ஏமரிஷி, ஆதிசேடன் முதலியோர் பூசித்த தலம். பிரமதேவர் ஜகத்சிருஷ்டிசம்பந்தமான சர்வமூல திரவியங்களாலும் நிறைந்த சுத்தமாசத்தி சொரூபமாயிருக்கிற குடமொன்றைத் தமது சிருஷ்டிக்கு உதவியாயிருக்கும்பொருட்டு, மகமேருகிரியின் சிகரத்தில் ஸ்தாபித்தபொழுது, ஒரு பிரமப்பிரளய முண்டாக, அதில் அந்தக் கும்பமெடுபட்டு இந்த க்ஷேத்திரத்தின் ஹேமபுட்கரணிதீர்த்தத்தின்மேல்பக்கத்திற்றங்கிவிட, சிவபெருமான் பிரளய முடிந்தபின்பு, உலகத்தைச் சிருஷ்டிக்க கருதி வேடவடிவங்கொண்டெழுந்தருளி, அந்தக் கும்பத்தைப் பாணப்பிரயோகத்தினுற் சேதித்தருள, அதினின்றுஞ் சராசரங்களெல்லா முற்பத்தியானதுமல்லாமல் அமுதமும் ஐந்துகுரோசஎல்லே சூழப்பட்டது. இதுவே கும்பகோணம். இந்தக் கும்பமுடைந்த இடத்திலிருந்த அமிர்தங்களைத் திரட்டிச் சிவலிங்கமாக்கி வேடவடிவமாகிய சிவபெருமானே பூசித்தருளியகாரணத்தால் அவ்விலிங்கத்திற்குக் கும்பேஸ்வரரென நாமகரணஞ் சூட்டப்பட்டது. ஹேமபுஷ்கரணி என்னும் சுவர்னபுஷ்கரணிதீர்த்தமானது இப்பொழுது மாமகதீர்த்தமென வழங்கப்படுகின்றது. ௰௨-வருடத்துக்கொருதடவை சிங்கராசியில் குருவருங்கால் மாசிமாத மகநட்சத்தில் இதிற் காசிகங்கைவருகிறதென்றைதீகம். இது பிரமப்பிரளயத்திற்கு அநாதியேயுள்ளது. பாவணமகாமுனிவர் தமது தாயாரின் அங்கத்தைக்கொண்டு நல்ல தீர்த்தத்திற்போடக்கருதிப் பல தீர்த்தற்றுறை சென்றும், என்பாயே யிருந்த அவ்வங்கம் இத் தீர்த்தத்துறையில விழ்த்துப் பார்க்கப் பொற்றாமரைப் பூவாகமாறியது. இந்தக்காரணத்தினுலும் ஏமரிஷி பூசித்த காரணத்தாலும் ஏமபுட்கரணி யென வழங்குகின்றது. திருஞானசம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குக் கிழக்கு கால் மைலில்,

உஎ. * திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் (கும்பகோணம்.)

(மடந்தைபாகேச்சுரர், பெரியநாயகியம்மை, சிங்கக்கிணறு, சூரியபுட்கரணிதீர்த்தங்கள்.)

சூரியமூர்த்தியானவர், விசுவகர்ம்மாவின் மகளைக் கலியாணஞ்

செய்து அவருடன் சேர்ந்து வாழும்பொழுது அவள், அவரது வெப்பம் ஆற்ருதவளாய், தன்சாயையை ஒருபெண்ணாக வைத்துவிட்டு ஒளித்துக்கொண்ட சங்கதியைக் கேள்வியுற்ற விசுவகர்மா, சூரியனுக்குக் காந்தியில்லாமற் போகும்படி சபிக்க, சூரியமூர்த்தி, இங்குவந்து பூசித்து, அச்சாபவிமோசனம் பெற்ற தலம். ஐயடிகள் காடவர்கோன்நாயனுர் "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குக் கால் மைலில்,

உஅ. * திருக்குடந்தைக்காரோணம்.—(கும்பகோணம்.)

(சோமநாதேச்சுரர், தேனார்மொழியம்மை, சந்திரதீர்த்தம்.)

உமையவள் பூசித்துத் திருமணம் பெற்ற தலம். சந்திரன், மாந்தாதா, சத்தியகீர்த்தி, தேவசன்மாமுதலாயினோர் பூசித்த தலம். கங்கை, யமுனை, சிந்து, சரஸ்வதி, நர்மதை, கோதாவரி, காவிரி முதலிய எல்லாநதிகளும், தங்களிடத்து ஸ்நானஞ் செய்கிறவர்களுடைய பாபங்களைச் சுமக்கலாற்ருது: அது தீர்க்கும்பொருட்டு, இங்குவந்து ஏமபுட்கரணியில் ஸ்நானஞ்செய்து இத்தலத்தில் வந்தித்து, பாபம் போக்கிக்கொண்ட தலம். (இதனுல் அந்நதிகளெல்லா மிக்காலத்தும் பன்னிரண்டாண்டிற் கொருகால்வருகிற, மாமகமென்கிற புண்யகாலத்திற், கூடுவதாக ஐதிகம்.) திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குக் கிழக்கு ங - மைலில்,

உகூ. * திருநாகேச்சுரம்.

(செண்பகாரண்ணியேச்சுரர், குன்றுமுலைநாயகியம்மை, நாகதீர்த்தம், இந்திரதீர்த்தம்.)

தேவேந்திரன், நாகம் பூசித்ததலம். சேக்கிழார்நாயனுர்வழிபட்ட தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - சு. —இதற்கு வடகிழக்கு ங - மைலில்,

ஙய. * திருவிடைமருதூர்.—(மத்தியார்ச்சுனம்.)

(மருதப்பேச்சுரர், நன்முலைநாயகியம்மை, காவிரிநதி, பூசத்துறைதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

மருதவிருக்ஷம், உருத்திரர்கள், உமாமகேஸ்வரி, விநாயகர், முருகக்கடவுள், பிரமா, விஷ்ணு, சப்தகன்னிகையர், சரஸ்வதி, இந்திரன், அயிராவதம், துவாதசாதித்தர், சந்திரன், அஷ்டதிக்குப்பாலகர், வேதங்கள், அஷ்டநாகங்கள், வசிஷ்டர், கபிலர், அகத்தியர் முதலிய முப்பத்து முக்கோடி தேவர்களும், ரிஷிகளும் பூசித்துப்பேறுபெற்ற தலம். கயிலையின்கண்ணெழுந்தருளிய உமாதேவியார், சத்தியின்றிச்

சிவமியங்காதென்று எம்பெருமா னருளிய உண்மையை யுணராது, சத்தியாகியதாமே உயர்ந்தவரென்று தம்மைவியந்தபொழுது சிவபெருமான், உன்னிடத்தியாம் சேராதவழி, யுனக்கு முணர்வில்லையெனக் காட்டும் பொருட்டு, ஓர்கணம்,அசைவற்றிருந்தனர். எல்லா உலகங்களும், எழுவகைதோற்றங்களும், சடமாயினபின்னர், உலகத்தைப்பண்டைநிலைநிறுத்த உன்னி,முதலில்உருத்திரர்களுக்குஉணர்ச்சிநல்க, அவர்கள்உலகமுற்றும் இருளாயிருந்தமைபற்றி, நான்குசாமம் மருதப்பரைப்பூசித்துப் பிரமா, விஷ்ணு, இந்திராதித்தர் களையும், மற்ற உயிர்களையும், படைத்தருளியதலம். அக்காலத்திற்றான், உமாதேவியார், தாட்சாயணியானது. மாணிக்கவாசகசுவாமிகள், சிவவாக்கியர், இவர்கள்வந்துவணங்கி வரம்பெற்ற தலம்.

மதுரையில்,வரகுணதேவரைப்பற்றியகொலைப்பழிதீர்த்த தலம். இப்பழியினுருவ மிக்காலத்துங் கீழ்கோபுரவாயினினிற்கும். அவ்வரகுணதேவர், இத்தலத்து எழுந்தருளியிருக்கும்பொழுதுதாங்கண்டவையனைத்தும், சிவஞானப்பெருக்காற் சிவமாகத்தோற்றினமையின், ஒரு கள்ளனைக்கட்டிக் கொணர்ந்தபொழுது, அவன்மீது திருநீறுகண்டு விடுவித்தருளியும், நரிகளூளையிடுதலைக்கேட்டு, அவைகள் சம்போவென்று கூவினவாகக்கொண்டு,வஸ்திரங்களைக் கொடுப்பித்தும், ஜலங்களில் தவளைகூப்பிடுதலையேசிவநாமசங்கீர்த்தனமாகக்கொண்டு, காசும் பொன்னுந் தூவியும், ஓர் சோரன் திருமஞ்சனத்திற்காக உலர்த்திய விரை எள்ளைத் தின்பதைப்பார்த்து, அவனை அவ்வெச்சிலெள்ளுடன் பிடித்துவர, அவன் பிறப்பை நீக்கும்பொருட்டு, அத்தொழில்செய்ததாகக்கொண்டு, அவனதெச்சிலையுண்டருளியும், இந்நகர்ப்புறத்துக்கிடந்த ஓர் தலை யோட்டைக் கண்டு, வணங்கித் தலையே, உன்னைப்போல என்தலை இங்கு கிடக்க வேண்டுமென்று பிரார்த்தித்தருளியும், திருக்கோயில் முற்றத்திலே நாய்க்கட்டமிருத்தல்கண்டு, அதனை நமக்கு வாய்த்ததென்றெடுத்தருளியும், வேப்பம்பழங்களுதிர்ந்து கிடத்தலைக்கண்டு, அவைகள் சிவசொரூபமாயிருத்தல் பற்றி, வேப்பமரங்களுக்கெல்லாம் விதானங் கட்டுவித்தருளியும், தாம் கலியாணஞ்செய்துகொண்டபொழுது, தமது மனைவியாரைச் சயனக்கிரகத்தில் பார்த்தருளி, அவர்மனோரம்மியமானதிருவுருவோடிருத்தலை நோக்கி, மனோரம்மியமான பொருள்களியாவும், சிவபிரானுக்கே யாமெனக் கருதி அவரை ஆலயத்திற் கொண்டுபோய், மருதப்பாரிடத்துச்சமர்ப்பிக்க, மருதவாணர் அவரதுவலக்கைமணிக்கட்டளவும்நிற்ப, மற்றயவவயவங்களை இலிங்கத்துட்காந்தருள,மற்றைநாளருச்சகராற் பெண்ணினதுவலக்கரம்சிவலிங்கப்பெருமான்மீதிருக்

தலையுணர்ந்த வரகுணதேவர், " பாவியேன் தீண்டியகையென்றோ விடுத்தருளியது " என்று விண்ணப்பஞ்செய்து, அக் கையையும், இலிங்கத்துட்கரந்தருளும்படிசெய்வித்தும், இவ்வாறு அனேக அற்புதங்கள் நடத்தி முத்திபெற்றதலம். கருவூர்த் தேவரால் "திருவிசைப்பா" பாடியருளியதலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-கஉ. —இதற்குக் கிழக்கு ங - மைலில்,

ஙக. * தென்குரங்காடுதுறை.—(ஆடுதுறை.)

(ஆபத்சகாயேச்சுரர், பவளக்கொடியம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

சுக்கிரீவன், மிருகண்டமகாரிஷி முதலியோர் பூசித்து வரம்பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகள்,திருநாவுக்கரசுசுவாமிளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ. —இதற்கு தெற்கு க-மைலில்,

ஙஉ. * திருநீலக்குடி—(தென்னல்குடி.)

(நல்லநாயகேச்சுரர், அழகாம்பிகையம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

வருணன், தெய்வகன்னிகையர்கள் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

இதற்குத் தென்கிழக்கு ங - மைலில்,

ஙங. * திருவைகன்மாடக்கோவில்.

(வைகனுதேச்சுரர், கொம்பிளங்கோதைநாதர், வைகலாம்பிகையம்மை, கொம்பிளங்கோதைநாயகி, சூரியதீர்த்தம், அமரபுஷ்கரணிதீர்த்தம்.)

சூரியனும், தேவர்களும் பூசித்ததலம். வைகல்வேறுமாடக்கோயில்வேறு, இவ்விரண்டும்திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்கிழக்கு ரு - மைலில்,

ஙச. * திருநல்லம். (கோனேரிராயபுரம்.)

(உமாமகேச்சுரர், மங்களநாயகியம்மை, சத்திதீர்த்தம்.)

உமையவளும், தேவர்களும் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ. —இதற்கு வடமேற்கு ங-மைலில்,

ஙரு. * திருக்கோழம்பம்.

(கோகிலேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, மதுதீர்த்தம், கோகிலதீர்த்தம்.)

சந்தன் என்னும் வித்தியாதரன்,தேவேந்திரனுற்சாபம்பெற்றுக் குயிலாய்ப் பலகாலஞ் சென்றபின் இத்தலமுற்றுப் பூசிப்பச் சிவபெருமானருளாற் பண்டைஉருவம்பெற்றதலம். விஞ்சாஸ்திரிகளும்,தேவர்களும், பூசித்ததலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடகிழக்கு க - மைலில்,

ருசு. * திருவாவடுதுறை.—(திருஞானகோமுத்தி.)

(மாசிலாமணியீச்சுரர், ஒப்பிலாமுலையம்மை, செம்பொற்றியாகேசர், சிவகாமியம்மை, காவிரிநதிதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம், அரசவிருட்சம்.)

தேவேந்திரன் முதலியதேவர்களும் அனேகரிஷிகளும் பூசித்த தலம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளது தந்தையார், யாகஞ்செய்ய வேண்டுமென்கிற கருத்தை யறிவிக்கப் பிள்ளையார் பதிகம் பாடிச் சிவபெருமானிடத்து உலவாக்கிழி பெற்றருளிய தலம்.

(திருமூலநாயனர்) திருநந்திதேவர், மாணுக்கரு ளொருவராகிய சிவயோகியார், அகத்தியரிடத்துள்ள அன்பால், அவரைக் காணும் பொருட்டு, இத்தலத்தின்வழியாய்வர, இங்கு மூலனென்னும் ஓரிடையன் இறந்து கிடத்தலையும், அவன் மேய்க்கும் பசுக்கள் பலவாறு கதறுதலையுமுணர்ந்த அச்சிவயோகியர், வைகாசிமாத மூலநாளில், அம்மேய்ப்பனது காயத்துட்பிரவேசித்துப்பசுக்களையாற்றிப் பின்சென்று மீண்டுவந்தும் தம்சரீரம் காணுமற்போக, அது திருவருளென்றெண்ணி, அரசமரத்தடியில், (ருஅ) வருட மெழுந்தருளி யிருந்து வருடமொரு மந்திரமாக (ருஅ) திருமந்திரங்களை, திருவாய்மலர்ந்தருளி, ஐப்பசிமாத அசுவினிநாளில் முத்தியடைந்த தலம்.

சேந்தனுரால் "திருவிசைப்பா" பாடப்பெற்றதலம்.

கயிலாசபரம்பரையாகிய நமசிவாயமூர்த்திகள் ஆசாரியபரம்பரையோர் மடாலயங்கொண்டெழுந்தருளியிருக்குந் தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - அ.

—இதற்கு வடகிழக்கு ச - மைலில்,

ருஎ. * திருத்துருத்தி.—(குற்றாலம்.)

(வேதேச்சுரர், முத்தாவதேச்சுரர், அமிர்தமுகிளாம்பிகையம்மை, காவிரிநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம், குற்றால்விருட்சம்.)

திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியார்பொருட்டுச் செய்த சத்தியந்தவறித் திருவாரூருக்குச் செல்ல வெத்தனித்த சுந்தர மூர்த்திசுவாமிகளுக்கு, இருநேத்திரங்களுக்கு அபாவம் நேரிட்டதுமன்றித் தேகத்திலுங் கொடியவியாதியுமுண்டாக, அவ்வியாதி இத்தலத்து வடதிருக்குளத்தில் மூழ்கத் தீர்த்தருளிய தலம்.

ஐயடிகள் காடவர்கோன்நாயனர், "க்ஷேத்திரவெண்பா"பாடியருளிய தலம், சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு. —இதற்குத் தென்கிழக்கு உ-மைலில்,

௩அ. * திருவழுந்தூர்.—(தேரழுந்தூர்.)
(வேதபுரேச்சுரர், சௌந்தராம்பிகையம்மை, வேததீர்த்தம்.)

வேதங்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள், விண்ணவர்கள், பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு வடகிழக்கு அ - மைலில்,

௩௯. * மயிலாடுதுறை.—(கௌரிமாயூரம், மாயூரம்.)
(மாயூரநாதேச்சுரர், அஞ்சநாயகியம்மை, இடபதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம், மாவிருட்சம்.)

கௌரியம்மையார் பெண்மயிலாய்வர, இலக்குமியாதியோரும் அவ்வாறே சூழ்ந்து இத்தலத் தடைந்தபொழுது, சிவபெருமான் ஆண்மயிலாய்வந்து நடனஞ்செய்து மறைந்தருள, அதைமயிலாகவே யெண்ணி மோகித்த அம்மையார், பிரிவாற்றாது பூசித்தநுக்கிரகம் பெற்ற தலம். இதனாலே இத்தலத்திற்கு அக்காரணப்பெயராயிற்று. பிரமா, விஷ்ணு,விஷ்ணு அவதாரமூர்த்திகள், தருமன், காமன், அகத்தியர், கண்ணுவர், கவுடன்னியர், இலக்குமி, விசாலன், பார்க்கவி, கலைமகள் முதலியோர்பூசித்த தலம். திலீபன், யோகவித்தமன், சுசன்மன், சயதுங்கன், தீர்க்கசங்கை, நாதசன்மன், அனவித்தை, கங்கை முதலியோரும், யானை, குதிரைகள், கரம், கழுகு, பாம்பு, நரி, குரங்கு, பூனை, கிளி முதலியனவும் முத்திபெற்றதலம். (துலாமாதம் முக்கியவிசேடம்.) திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.
—இதற்கு வடகிழக்கு ௪-மைலில்,

௪0. * திருவிளநகர்.
(துறைகாட்டும் வள்ளலேச்சுரர், தாம்பன்னதோளியம்மை, மெஞ்ஞானதீர்த்தம்.)

அருள்வித்தனெனும் வேதியன், திருப்பள்ளித் தாமமெடுத்து நதியில்வருங்காற் பெருவெள்ளம்வந் தீர்த்துச்செல்லும் பொழுதும், அப்பூங்கூடையைவிடாது, சிவபெருமானையுன்னிய அன்புக்கிரங்கித் துறைகாட்டிக் கரையேறவிட்டு, ஞானநெறியை யுபதேசித் தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தெற்கு ௩-மைலில்,

௪க. * திருப்பறியலூர்வீரட்டானம்.—(திருப்பறியலூர், பரசலூர்.)
(வீரட்டானேச்சுரர், இளங்கொம்பன்னை, சிவகங்கைதீர்த்தம், சந்திரபுஷ்கரணி.)

தக்ஷப்பிரமாப்பெற்ற ஆண்பிள்ளைகள் துறவிகளாயபின், பெண்களைப்பெற்றுத் தேவர்களுக்குக் கொடுத்தும், ஒருகாரணத்தால்,உமா

மகேஸ்வரியாரைப் பெற்று, சிவபெருமானுக்குக் கொடுத்துமிருக்கையில், ஒருகாற் கயிலையில்வந்த அத்தக்ஷப்பிரமாவுக்கு, சிவபெருமான் மரியாதைசெய்யவில்லையென்னுங்காரணத்தால், யாகத்தில், சிவபெருமானுக்குள்ள முதலவியை விலக்கி, விஷ்ணுவுக்குக் கொடுக்க உன்னியாகஞ்செய்த, அத்தக்ஷப்பிரமாவின் சிரசை, வீரபத்திரமூர்த்திகளாற்கொய்து, அவ்வியாகத்திலிட்டு, தக்ஷப்பிரமாவுக்கு ஆட்டுத்தலை கொடுத்தருளிய தலம். இது அட்டவீரட்டானத்தொன்று, திருஞானசம்பந்த சுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடகிழக்கு ரு - மைலில்,

சஉ. *திருச்செம்பொன்பள்ளி.—செம்பொனார்கோயில்.)

(சொர்னபுரேச்சுரர், சுகந்தவனநாயகியம்மை, காவிரிநதி,
இந்திரதீர்த்தம்.)

இந்திரன், சூரனுதியரைச் செயிக்கும்படியாகப் பூசித்த தலம். குபேரன் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு.

—இதற்கு வடகிழக்கு உ - மைலில்,

சரு. * திருநனிபள்ளி.

(நற்றுணையப்பேச்சுரர், பருவதராஜபுத்திரி, காவிரிநதிதீர்த்தம்.)

அஷ்டவசுக்கள் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்தமூர்த்திகள், குழந்தைப்பருவத்தில், தேவாரம் திருவாய்மலர்ந்தருளுதலைக்கேட்டு, ஆநந்தபரவசமடைந்த, அவரது தாயின் க்ஷேத்திரமாகிய இந்நகரவாசிகள் திருஞானசம்பந்தசுவாமிகளையிங்கழைத்துவர திருப்பதிக மோதுவித்தருளிய தலம். சமயாசாரியர்கள் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு.

—இதற்குக் கிழக்கு ரு - மைலில்,

சச. * திருவலம்புரம்.

(வலம்புரிநாதேச்சுரர், வடுவகிற்கண்ணம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

திருமால்பூசித்து வலம்புரிச்சங்கு பெற்ற தலம். சங்குகன்னன் முதலிய பூதகணங்களும், தேவர்களும், பூசித்தருள்பெற்ற தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ச.

—இதற்குத் தென்மேற்கு க-மைலில்,

சடு. * திருத்தலைச்சங்காடு.

(சங்கநாயகேச்சுரர், செங்குருநாதேச்சுரர், சௌந்தரியம்மை,
காவிரிதீர்த்தம், திருக்குளதீர்த்தம், வில்வவிருட்சம்.)

மகாவிஷ்ணு, அஷ்டகெஜங்கள், திக்குப்பாலகர் முதலியோர் பூசித்த தலம். விஷ்ணுவுக்கு பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கத்தைச் சிவபெருமானளித்த தலம்.

திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தெற்கு உ- மைலில்,

௪௧. ✻ திருவாக்கூர்த்தான்றோன்றிமாடம்.—(திருவாக்கூர்.)

(சுயம்பு நாதேச்சுரர், கட்கநேத்திரதேவியம்மை,
அருட்டீர்த்தம், ஆநந்த புட்கரணி.)

இந்திரன் முதலியதேவர்கள் பூசித்தலம்.

(சிறப்புலிநாயனர்,) புரட்டாசிமாத அவிட்டநாளில் வைதிகப் பிராமண மரபிற்றிருவவதாரம் செய்தருளிச் சிவத்தொண்டு சிவனடியார் தொண்டுமுதலியனசெய்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யன்பினோடு ஜெபித்தலுஞ்செய்திருந்து, கார்த்திகை மாதப் பூராடநாளில்முத்தியடைந்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்குத் தென்கிழக்கு ந-மைலில்,

௪௬. ✻ திருக்கடவூர் வீரட்டானம்.—(திருக்கடவூர்.)

(அமுதகடேச்சுரர், வீரட்டானேச்சுரர், அபிராமித்தாயம்மை,
சிவகங்கை தீர்த்தம், வில்வவிருட்சம்.)

மிருகண்டுயேமகாரிஷியின் புதல்வராகிய மார்க்கண்டேயருக்குப் பதினறு வயது செல்லுங்காலத்து, அவர் தந்தை, தாயார்கள், அவருக்கு இறுதி நாள் வந்தமையுணர்ந்து வருந்தியதை மார்க்கண்டேயர் நோக்கிச் சிவபிரானிடத்துத்தவஞ்செய்து, விதியைக்கடந்து வருவதாகச்சொல்லி இங்கு வந்து தவஞ்செய்து பூசித்துக்கொண்டிருக்குங் காலே, விதித்தநாள் சேர்ந்தமையால், இயமன் தூதுவரை விடுப்ப, அவர்கள் தவாக்கினியால், அணுகக்கூடாமையை அறிவிக்கக்கேட்ட இயமன்வெகுண்டு, தானே நேரில் வந்து அழைப்பவும், மார்க்கண்டேயர் மறுத்தமை பற்றிக்கையிலிருந்த பாசத்தை வீச, மார்க்கண்டேயர்தாம்பூசிக்கும் சிவபெருமானது திருமேனியைத் தழுவிக்கட்டிக்கொள்ள, இயமன் அவ்விருவரையும் பாசத்தில் வலித்திழுக்கும் பொழுது, சிவபெருமானிலிங்கத்தினின்றும் தோன்றி, இயமனே உதைத்து மார்க்கண்டேயரை இரட்சித்ததலம். இது அட்டவீரட்டானத்திலொன்று.

(காரிநாயனர்,) வைகாசிமாத அத்தநாளிற்றிருவவதாரஞ் செய்தருளியியற்றமிழுணர்ந்து, சேர, சோழ, பாண்டியராசாக்களிடத்துச் சொல்விளங்கிப்பொருண்மறைந்துள்ளகோவைபாடிப் பொன்பெற்று அப்பொன்னாற்றிருக்கோயில் முதலியனவும், அடியவர் பூசையுஞ் செய்து, ஆடிமாதம் பூராடநாளிற் சிவபெருமான் றிருவடியடைந்த தலம்.

(குங்கிலியக்கலயநாயனர்,) பிராமணகுலத்தில், ஆடிமாத அசுவினி நாளிற்றிருவவதாரஞ்செய்தருளி, சிவாலயத்திற்குக் குங்கிலியத் தூபப் பணிவிடைசெய்து வந்தகாலையில், வறுமைவந்தமையால் மனைவி மக்கண்முதலாயினோர், பலநாளுணவின்றிவருந்திய வருத்தஞ் சகியாது, மனைவியார் உண்பண்டம் வாங்கக்கொடுத்த மங்கிலியத்தை, எதிரேகண்ட குங்கிலியத்திற்கு மாறி, குங்கிலியங்கொண்டு, கோவிலில்மகிழ்ந்திருக்கும் பொழுது, சிவபெருமான் அவரது மனையைப் பொருண் முதலிய செல்வத்தாணிரப்பியருளப்பெற்றும், திருப்பனந்தாளிற்றலைவளைந்த சிவபெருமானை நேர்காணப்பெற்றும் விளங்கிய வந்நாயனர், திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அமுதருத்தியுபசரித்து, ஆவணிமாத மூல நாளிற் சிவபதமடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ரு. —இதற்குக் கிழக்கு அரை மைலில்,

## சஎ. * திருக்கடவூர்மயானம்.—(திருக்கடவூர்.)

(பிரமபுரேச்சுரர், தயாளமலர்க்குழன் மின்னம்மை, பிரமதீர்த்தம், காசிதீர்த்தம்.)

பங்குனிமாதம் அசுவனி நட்சத்திரம்வரும்போதுகூபத்திற்காசிகங்கை வருகின்றது, அப்பொழுது ஸ்நானவிசேஷம்; அக்கங்கை காசிக்கங்கையையொத்த சோதனையுள்ளதாக விருக்கும். பிரமதேவர் ஓர் பிரளயத்துச்சிருட்டித் தொழில் மறந்து சிவபெருமானைப்பூசிக்க, அவர் எதிர்வந்தருளி, அப்பிரமதேவனை எரிவிழித்து நீருக்கி, அந்நீற்றையுடம்பிலணிந்து மற்று முயிர்ப்பித்துச் சிருஷ்டியைக்கொடுத்தருளப் பிரமதேவர் இந்தானத்தையே என்றும் வுத்திர தானமாகக் கொண்டருள வேண்டுமென்று வேண்டியபடி, திருக்கோயில் கொண்டருளிய தலம்.

ஐயடிகள் காடவர்கோன்நாயனர் "க்ஷேத்திர வெண்பா" பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ரு. —இதற்குத் தென்கிழக்கு எ-மைலில்,

## சஅ. * திருவேட்டக்குடி.

(திருமேனியழகேச்சுரர், சுகந்தவனநாயகியம்மை, அழகுதீர்த்தம்.)

அருச்சுனன், தவசு செய்யும்பொழுது சிவபெருமான் வேட ரூபமாக வந்து வேட்டஞ்செய்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு கூ-மைலில்,

௫௬. * திருத்தெளிச்சேரி.—(காரைக்கால் கோவிற்பத்து.)

(பார்வதீச்சுரர், சத்தியம்பாளம்மை, அருந்தோளம்மை, பார்வதி தீர்த்தம், வன்னிவிருக்ஷம்.)

பார்வதிதேவியார், தமது பேர்முன்னிற்பச் சிவபெருமானுக்கு நாமஞ் சூட்டப்பெறவேண்டுமென்று தவஞ்செய்து, அவ்வரம்பெற்ற தலம். அருச்சுனனோடு வேடராக அமர்புரிந்து வில்லடிபட்டனுக்கிரகித்தருளியதலம்.

இத்தலத்தினின்றுந் திருஞானசம்பந்தசுவாமிகள், அடியார் குழாத்துடன், எழுந்தருளிப் போதி மங்கையென்னு மிடத்திற்குப் போகும்பொழுது, திருச்சின்ன ஓசை கெட்கப் பொறாத புத்தர்கள், திருச் சின்னத்தைத்தடுப்பப் பிள்ளையாரதுநல்லம்மானாகிய சம்பந்த சரணாலயர், அஸ்திரவாக்கினால், அப்புத்தர்களிற் றலைவனான, புத்த நந்திதலையில் இடிவிழும்படிசெய்தருளியபின்னர், புத்தர்களிற்சாரிப் புத்தன்வந்து வாதம்பேசுவதாய்சொல்லியனுப்பியதற்கிணங்கி, ஓரிடத்துத்தங்கி அவர்களை வாதத்தில் வென்றருளியபின், அப்புத்தர்களையுஞ் சைவர்களாக்கி யருளியதலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு ௩-மைலில்,

௫௭. * திருத்தருமபுரம்.

(யாழ்மூறிநாதேச்சுரர், சதாமதுராம்பிகையம்மை, கதலிதீர்த்தம், தருமதீர்த்தம், கதலிவன க்ஷேத்திரம்.)

பிரமா, தருமராசன், அரம்பாஸ்திரிகள் பூசித்ததலம். திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளருளிய, திருப்பதிகங்களை யாழில்வைத்து வாசித்துவரும், திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரது, தாயர்ஜனன பூமியாகிய இத்தலத்து இருந்த அவர்சுற்றத்தார், திருப்பதிகங்கள்நாடெங்கும் பரவிவழங்குவதற்குக்காரணம் யாழ்ப்பாணரது யாழ் வலியென்று புகழ்ந்தமைகேட்ட யாழ்ப்பாணர்மனம் பொறாராய்ப் பிள்ளையாரையடைந்து, யாழில் அமையாவண்ணமோர் பதிகம் அருளிச்செய்யும்படிவேண்ட, அங்ஙனமே "மாதர்மடப்பிடி" யென்னும் யாழ்மூறித் திருப்பதிகத்தையருளிச் செய்ய, அதனையாழ்ப்பாணர், யாழிலமைக்க நோக்கியும் அமையாமையால், அங்ஙனம் பரீக்ஷித்தபிழைக்காகத் தம்யாழைநிலத்தில் மோதச்செல்லுழி, பிள்ளையார் தடுத்தருளி, திருப்பதிகம் சிவாஞ்ஞையால்வருவதாதலின், யாழிலியன்றளவுவாசிக்கும்படி கட்டளையிட்டருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.—இதற்கு வடமேற்கு ௨-மைலில்,

## ருக. * திருநாள்ளாறு.

(தெர்ப்பாரண்ணியேச்சுரர், போகமார்த்த பூண்முலையம்மை, நளதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம், தெர்ப்பாரண்ணிய க்ஷேத்திரம்.)

நளச்சக்கரவர்த்தி பூசித்துக்கலி நீங்கப் பெற்ற தலம்.

இதுசத்த விடங்கத் தலத்திலொன்று. நகரவிடங்கர், உன்மத நடனம்.

திருஞானசம்பந்தசுவாமிகள் மதுரையிற் சமணர்களோடு வாது செய்யும் பொழுது, அக்கினிவாதம் செய்தகாலையில் தமதுதிருமுறையிற் கயிறு சாத்தியருள "போகமார்த்தபூண்முலையாள்" என்னுமித் தலத்திருப்பதிகம் உதையமானதை எடுத்துநெருப்பிலிட, அப்பதிகம் வேவாதிருந்தமைபற்றி இன்றளவும் அப்பதிகத்திற்குப் பச்சைப்பதிகமெனும்பெயர் வழங்கப்படுகின்றது. இதனாலே திருமுறைமுதலிய நூல்களுக்குக் கயிறுசாத்தும் வழக்கம். அக்காலத்துமுள்ளனவென்று வெளியாகிறது. சமயாசாரியர் மூவராலும்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - எ. —இதற்கு வடமேற்கு சு-மைலில்,

## ருஉ. * திருக்கோட்டாறு.

(ஐராவதேச்சுரர், வண்டமர்பூங்குழலம்மை, சூரியதீர்த்தம், ஐராவததீர்த்தம்.)

வெள்ளையானையுந் தேவர்கள்முதலாயினோரும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ. —இதற்குத் தென்மேற்கு சு-மைலில்,

## ருங. * திரு அம்பர் பெருந்திருக்கோயில்.

(பிரமபுரநாதேச்சுரர், பவழவண்ணப் பூங்குழலம்மை, பிரம தீர்த்தம்.)

பிரமா பூசித்த தலம்.

(சோமாசிமாறநாயனர்,) பிராமணகுலத்தில் மாசிமாதமகநாளிற் திருவவதாரஞ்செய்தருளி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி ஜெபிப்பவராய், யாகமுதலியனசெய்து, திருவாரூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகளது நண்புபெற்று, அவரது உபதேச அருளால் வைகாசிமாத ஆயிலியநாளிற் சிவபுரஞ்சேர்ந்ததலம்.

கோச்செங்கட் சோழதேவராற் செய்யப்பட்ட ஆலயத்திருப்பணியுள்ளது ; சிலந்திச்சோழமகாராஜாவுக்குபாணக்கோலமாகக்காட்சிகொடுத்ததலம். மேல்கண்டசோழராஜா திருவானைக்காமுதல் அம்பர்பெருந்திருக்கோயில்வரையில் கூ௰௪ - மாடக்கோயில் திருப்பணி செய்வித்தார். மாடக்கோயிலென்பது கட்டுமலையும் யானைகள்செல்லக் கூடாதிருக்கும் சந்நிதியுமுடையதாகக் கட்டப்படுவது. திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு மேற்கு க-மைலில்,

ருச. * திருஅம்பர்மாகாளம்.

(காளகண்டேச்சுரர், பச்சைநாயகியம்மை, மாதேவியம்மை, மாகாளதீர்த்தம்.)

அரிஹரபுத்திரரது சேனைத்தலைவராகிய மகாளர் பூசித்து, அவர் காவலி லொப்புவித்திருக்கு மிந்திராணியை யிழுத்துச் சென்ற அஜமுகியைக் கரங் குறைத்த தலம். சோமாசிமாறநாயனார் பிறந்து முத்தியடைந்த தலம். இப்போது ஆலயத்தில் மேல்கண்ட நாயனார் யாகஞ்செய்தவிடத்தில் தியாகேசரும் அம்மையும் நீசத் திருமேனியுடன் சகடையும், மதுக்குடமுங் கொண்டுவந்தபடியே திருவுருக்கொண்டிருக்கின்றனர். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩.

—இதற்குத் தென்மேற்கு ச - மைலில்,

ருரு. * திருமீயச்சூர்.—(பேராளம்.)

(திருமுயற்சி நாதேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, அற்புததீர்த்தம்.)

வருணன், மேகங்கள் முதலாயினோரும், தேவர்களும் பூசித்துத் திருநந்திதேவராற் றங்களுக்குற்ற சாபத்தை நீக்கப்பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இக்கோயில் வடக்குப் பிராகாரத்தில்,

ருசு. * திருமீயச்சூரிளங்கோயில்.—(பேராளம்)

(சகலபுவனேச்சுரர், மேகலாம்பாளம்மை, சரஸ்வதிதீர்த்தம்.)

பிரமா, சரஸ்வதி பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளால் இத்தலத்துள்ள ஆலயங்கள் யாவும் பதிகம்பெற்றுள்ளன. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு க-மைலில்,

ருஎ. * திருத்திலதைப்பதி.—(மதிமுத்தம்.)

(மதிமுத்தநாதேச்சுரர், பொற்கொடியம்மை, சோமதீர்த்தம்.)

சந்திரன், நக்ஷத்திரங்கள்பூசித்ததலம். தசரத சக்கரவர்த்திக்கு ராம, லட்சுமணர்கள், திலதற்பணஞ் செய்த தலம். காசிபட்டணத்தரசர்களிற் சித்தோசி மகாராஜா தற்பணஞ் செய்த தலம். அவ்வரசமுகூர்த்தமும் ஆலயத்திலிருக்கின்றது. திருஞான சம்பந்தசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு ச - மைலில்,

ருஅ. * திருப்பாம்புரம்-

(பாம்புரேச்சுரர், வண்டமர்பூங்குழநாயகியம்மை, ஆதிசேஷதீர்த்தம்.)

ஆதிசேஷனும், நாகலோகத்தரும் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு மேற்கு க - மைலில்,

## ருசு. * திருச்சிறுகுடி.

(மங்களேச்சுரர், மங்களநாயகியம்மை, மங்களதீர்த்தம்.)

செவ்வாயும், கருடனும், கந்தருவர்களும் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு உ - மைலில்,

## சுய * திருவீழிமிழலை.

(வீழியழகேச்சுரர், சுந்தரகுசாம்பிகையம்மை, அரிதீர்த்தம், மாதவதீர்த்தம், விண்ணிழிவிமானக்கோவில், வீழிவிருக்ஷம்.)

கார்த்தியாயன மகாரிஷியின் மகத்தில் தோன்றிய உமாதேவியாரைத் திருமணம்புரிந்து மணவாளக்கோலத்துடன் என்றும் எழுந்தருளியிருக்கின்ற தலம். இதனல் பார்வதியாருக்கு கார்த்தியாயனியென்றொரு நாமமிருக்கின்றது. மகாவிஷ்ணுவானவர், சிவபெருமானுற் சலந்தராசூரனைக் கொன்ற சக்கரத்தைப் பெறும்பொருட்டு, நாடோறும் ஆயிரம் தாமரைமலர்கொண்டு பூசிப்ப, ஓர் நாள் பூஜாகாலத்திலோர் மலர்குறையக்கண்டு, எழுந்து செல்லின், பூசைக்குத்தவறுண்டாவதுநோக்கித் தமது கண்ணையிடந்து அருச்சிப்ப, மகிழ்ந்து சிவபெருமான் சக்கரமருளிய தலம். இதனாலே விஷ்ணுவுக்குக் கமலக்கண்ணனெனும் பேராயிற்று.

திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், இத்தலத்தி லெழுந்தருளியிருக்கும்பொழுது, கருப்புக்காலஞ்சம்பவிப்ப, அடியார் திருக்கூட்டத்திற் கமுது செய்விக்கும்பொருட்டு, அவ்விருசுவாமிகளுக்கும், மேலப்பீடத்துங்கீழப்பீடத்தும், படிக்காசுவைத்தருளியும் அக்காசினல், அவ்வுபயமூர்த்திகளுந் திருவமுது படைத்துவருங்கால், திருஞானசம்பந்தசுவாமிகள் பெற்றகாசு, வாசியோடு செலவாதலை நோக்கி, "வாசிதீரவேகாசுநல்குவீர்" என்று பதிகம் பாடியபொழுது,சிவபெருமான் திருநாவுக்கரசுசுவாமிகளதுகைத்தொண்டு மெய்த்தொண்டு முதலியவைகளுக்கிரங்கி, அங்ஙனம் வாசியின்றிக் காசருளியதாக அருளிப் பின்னர், பிள்ளையாருக்கும் வாசிதீரும்படி காசருளியும் சீர்காழியிலிருக்குந் திருக்கோலத்தை இவ்விண்ணிழிவிமானத்திற்காணச்செய்தும், அனுக்கிரகித்தருளிய தலம். சம்பந்தசுவாமி ஆலயமும் அப்பர்சுவாமிஆலயமும்வடக்குவீதி யிலிருக்கின்றன. சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப் பதிகங்கள் - உச.

—இதற்கு வடமேற்கு க - மைலில்,

## சுக. * திருவன்னியூர்.

(அக்கினியேச்சுரர், பார்வதியம்மை, அக்கினிதீர்த்தம்.)

அக்கினி பூசித்து, அகோர வீரபத்திரரா லடைந்த சாபம் நீங்

கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்மேற்கு ௩-மைலில்,

௬௨. * திருக்கருவிலி.—(கொட்டிடை.)

(சற்குணேச்சுரர், சர்வாங்கநாயகியம்மை, சற்குணதீர்த்தம்.)

சற்குணனெனும் அரசன், பூசித்துப் பிறவி சாகரத்தைக்கடந்த தலம். தேவர்களும், இந்திரனும் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு ௪ - மைலில்,

௬௩. * திருப்பேணுபெருந்துறை—(திருப்பந்துறை.)

(சிவாநந்தேச்சுரர், மலையரசியம்மை, ஆநந்ததீர்த்தம்.)

சிவசத்தி, பிரமா, கிரகங்கள் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்- க.

—இதற்கு மேற்கு ௩-மைலில்,

௬௪. * திருநறையூர்ச்சித்தீச்சுரம்—(திருநறையூர்.)

(சௌந்தரேச்சுரர், சித்தநாதேச்சுரர், அழகாம்பிகை, திரிபுரசுந்தரியம்மை, தேன்சித்திதீர்த்தம்.)

குபேரன், தேவர்கள், கந்தருவர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௪. —இதற்கு வடமேற்கு க-மைலில்,

௬௫. * அரிசிற்கரைப்புத்தூர்.—(அழகார்புத்தூர்.)

(படிக்காசளித்தஈச்சுரர், அழகாம்பிகையம்மை, காவிரி, அரிசில் நதிதீர்த்தம்.)

உண்மையாநந்தரிஷி பூசித்த தலம். (புகழ்த்துணைநாயனர்) ஆதிசைவகுலத்தில், சித்திரமாதச் சதையநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிச் சிவபூசைசெய்துவருங்கால், பஞ்சமேலிட்டுப் பசிநோயாற் றேகமெலிந்துந் திருப்பணி தவிராது செய்துவருபவர், ஒருநாள், திருமஞ்சனமாட்டும்பொழுது, அயர்ந்து மஞ்சனக்குடத்தைச் சுவாமிமீது விழவிட்டு உணர்ச்சிவந்து, பின்வருத்தமுறுவதைச்சிவபிரான் திருவுளங்கொண்டு, பஞ்சந் தீருமளவும் பீடத்தின்கீழ் ஒவ்வொரு காசு தந்தருளப்பெற்றுப் பின்னுமவ்வாறே சிவபூசைநடத்திவந்து, ஆவணிமாத ஆயிலியநாளிற் சிவபதமடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩,

—இதற்கு வடமேற்கு ௨-மைலில்,

௬௬. * திருச்சிவபுரம்.

(பிரமபுரிநாயகேச்சுரர், பெரியநாயகியம்மை, பிரமதீர்த்தம்.)

பிரமா பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள் திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௪.

—இதற்குத் தென்மேற்கு ௨ - மைலில்,

சுஎ. * திருக்கலய நல்லூர்.—(சாக்கோட்டை.)

(அமிர்தகலேயீச்சுரர், அமிர்தவல்லியம்மை, அமிர்ததீர்த்தம்.)

தேவர்கள், அமிர்தம்பெற்ற சந்தோஷத்தாற் பூசித்த தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு க - மைலில்,

சுஅ. * திருக்கருக்குடி.—(வலங்கிமான்.)

(சற்குணலிங்கேச்சுரர், சர்வாலங்கிர்தமின்னம்மை, ஏமதீர்த்தம், சற்குணதீர்த்தம்.)

விசுவாமித்திரரிஷி பூசித்த தலம். சற்குணனெனும் அரசன்பூசித்து அருள்பெற்ற தலம். மார்க்கண்டரும், தேவேந்திரனும்பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தென்கிழக்கு ൰ச - மைலில்,

சுகூ. * திருவாஞ்சயம்.

(வாஞ்சலிங்கேச்சுரர், வாழவந்தநாயகியம்மை, சுகவாஞ்சதீர்த்தம்.)

ஓர் நாககன்னிகை மிகு வாஞ்சையோடு பூசித்துச் சிவபெருமானைத் தழுவித் திருவுருவிற் கலந்த தலம். அயிராணியும் தேவர்களும் பூசித்த தலம். ஈஸ்வரநாம முதலியவைகளும் வாஞ்சியென்றேயிருக்கவேண்டும். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩. —இதற்குக் கிழக்கு ச - மைலில்,

எ൰. * திருநன்னிலத்துப்பெருங்கோயில்.—(நன்னிலம்)

(பிரகாசேச்சுரர், பிரகாசேஸ்வரியம்மை, சூரியகாந்ததீர்த்தம்.)

சூரியன் பூசித்துத் தன்னொளி மழுங்கலைப் பிரகாசஞ் செய்யப்பெற்ற தலம். கோச்செங்கட் சோழத்தேவராற் றிருப்பணி செய்யப்பெற்ற தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குக் கிழக்கு க-மைலில்,

எக. * திருக்கொண்டீச்சுரம்.

(பசுபதீச்சுரர், சாந்தநாயகியம்மை, பசுதீர்த்தம்.)

காமதேனுபூசித்துத் தன்னால் யாவருக்கும் பலபண்டங்களும் பரோபகாரமாய்க் கொடுத்துவரும்படி வரம்பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ.

—இதற்குத் தென்கிழக்கு உ - மைலில்,

எஉ. * திருப்பனையூர்.

[தியாகராஜர், சௌந்தரேச்சுரர், பெரியநாயகியம்மை, மகாலட்சுமிதீர்த்தம்.]

மகாலட்சுமியு முசுகுந்த சக்கரவர்த்தியும் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ. —இதற்குத் தெற்கு உ-மைலில்,

## ௭௩. * திருவிற்குடி வீரட்டானம்—(திருவிற்குடி)

(வீரட்டானேச்சுரர், மைவார்குழலியம்மை, சக்கரதீர்த்தம்.)

இந்திரன்பொருட்டுக் கிருத்தம வடிவெடுத்துவந்த சிவபெருமானதுசீற்றம் மேலக்கடலில் விழுந்து ஓர் பிள்ளையானதைச் சமுத்திரராசன் வளர்க்குங்கால், அங்குவந்த பிரமதேவன், அக் குழந்தையையெடுத்துப் பார்க்கும்பொழுது, அவரது நான்கு தாடிகளையும் பற்றியிழுத்து, பிரமா அழுதும் விடாமைபற்றி, அவராற் சலந்தரனெனப் பேர் தரிக்கப்பெற்றுப் பருவமடைந்தபின் மகாவிஷ்ணுவோடு நெடுநாள்யுத்தம்செய்து அவராற் புகழப்பெற்றும் பின், தேவர்களை வருத்த, இந்திரன் பயந்து, திருக்கயிலையிலடைக்கலம் புகுத, சலந்தராசுரன் தன் மனைவிவார்த்தையையுந் தள்ளிக் கயிலைக்குஞ் சென்றபொழுது, சிவபெருமானோர் வேதியவடிவங்கொண்டு முன் தோன்றி சலந்தராசுரனைப் பரிகசிப்பவர்போல ஓர் சக்கரங்கீறி, அதனை எடுக்கும் ஆற்றல் உண்டாயின் சிவபெருமானை வெல்லலாமென்றருளிச்செய்யச் சலந்தரன் அச்சக்கரத்தை யெடுத்துச் சிரசின்மேல் வைத்தவுடன் அது அவன் தேகத்தையிருபிளவாக்கி உயிரைக்கொள்ளைகொள்ளச்செய்தருளியதலம். சந்திரசேகராலயத்தில்சக்கரமிருக்கின்றது. அட்டவீரட்டானத்தொன்று. திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடகிழக்கு ச - மைலில்,

## ௭ச. * திருப்புகலூர்.

(அக்கினியீச்சுரர், கொந்தார்குழலியம்மை, அக்கினிதீர்த்தம்.)

அக்கினிதேவனாற் பூசிக்கப் பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகள் இத்தலத்தே அநேகநாளெழுந்தருளியிருந்து,பலபதிகங்களைப் பாடியருளியதுமன்றி உழைவாரத் திருப்பணிசெய்யும்பொழுது, எம்பிரான் சோதனையாற் பொன்னும் நவரத்தினமு மெதிர்ப்பட, வதனை பருக்கைகற்களோடொப்ப நினைத்துத்திருக்குளத்திலெறிந்தும், சித்தநிலைசோதிக்கும்பொருட்டு, அரம்பைமாதர் முதலியவர்களை விடுத்தருள " உங்களாலாட்டுணேன் " என்னும் பதிகமோதியவர்களைப்புறங்கண்டும், " சிவனடிக்கீழிருத்திடும்" என்றும் "திருவடிக்கேபோதுகின்றேன் " என்றும் பதிகம்பாடிச் சித்திரைமாதச்சதையநட்சத்திரத்தில் திருவடியடைந்த தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் பங்குனி உத்திரத்திருநாட்செலவுக்குப் பொன்வேண்டிப் பதிகம்பாடிக் கோயிற்றிருமுன்றி லெழுந்தருளியிருக்கும்பொழுது, திருவருளால் நித்திரைவர, செங்கற்களைத் தலையணையாகவைத்து நித்திரைசெய்து விழித்தபொழுது, அச்செங்கற்கள்யாவும்,பொன்கற்களாகச் செய்துகொடுத்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - அ.

இந்த ஆலயவடபுறம்,

௭௫. * திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்.

(வர்த்தமானேச்சுரர், கருர்தார் குழலியம்மை, திருக்குளதீர்த்தம்.)

மேகங்கள் பூசித்ததலம் (முருகநாயனார்) பிராமணகுலத்தில் கார்த்திகைமாதக் கிருத்திகைநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிப் பலவிதப் பூக்களை நானாவிதமாலைகளாகக் கட்டிச் சிவபெருமானுக்குச் சாத்திப் பஞ்சாட்சர ஜெபஞ்செய்துவந்து, திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகளோடு சிநேகஞ் செய்யப்பெற்று, அச்சுவாமிகள், திருமணத்தில் வைகாசிமாத மூலநாளிற் றிருவடியடையச் செய்தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு உ - மைலில்,

௭௬. * திருஇராமனதீச்சுரம்.

(இராமநாதேச்சுரர், சருவார்குழலியம்மை, மணிகங்கைதீர்த்தம், இராமதீர்த்தம்.)

இராமர், மிருகண்டரிஷி, மார்க்கண்டேயர், தேவர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தெற்கு உ-மைலில்,

௭௭. * திருப்பயற்றூர்.

(திருப்பயற்றீச்சுரர், காவியங்கண்ணியம்மை, கருணைதீர்த்தம்.)

பைரவரிஷி பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடக்கு ௪- மைலில்,

௭௮. *திருச்செங்காட்டங்குடிக்கணபதீச்சுரம்.—

(திருச்செங்காட்டங்குடி.)

[கணபதீச்சுரர், திருக்குழலுமையம்மை, கணபதிதீர்த்தம்.]

கயமுகாசுரனாற்றுன்பமடைந்த தேவர்கள் சகிக்கலாற்றாது, சிவபெருமானிடத்து முறையிட, அவர் விநாயகமூர்த்தியைத் தந்தருளிய பொழுது, விநாயகமூர்த்தியார், பூதப்படைகள் சூழ எழுந்தருளிவந்து அக்கயமுகாசுரனைத் தாம் ஒடித்தருளிய குறைக்கொம்பால் வென்றருளிய தலம். அவ்வவுணனது இரத்தம்பெருகியகாடு செங்காடாயிருந்தமைபற்றியே இதற்குச் செங்காடெனப் பெயராயிற்று. அக்கயமுகாசுரனைக் கொன்றருளியபோது, அவனாற் றேவர்களடைந்திருந்ததுன்பமொழிய, அவன்முன்னர்ச் செய்துவந்தவண்ணம், குட்டிக்கொள்ளுதலையும், தோப்பணம் போடுதலையுந் தேவர்கள் செய்யப்பெற்ற விநாயகமூர்த்தியாரே, கயமுகாசுரனைக் கொன்றபழி நீங்கும் பொருட்டுப் பூசித்த தலமாகையா லிவ்வாலயத்திற்கு கணபதீச்சுரமெனப் பேராயிற்று.

(சிறுத்தொண்டநாயனார்) மாமாத்தியர்குலத்திலே பரஞ்சோதியாரெனும் பெயருடையவராய்த் தைமாசத் தசுவினி நாளிற் றிருவவ

தாரஞ்செய்தருளிச் சிவபணிவிடையும், அரசன்பால் உத்தியோகமு ஞ்செய்து வருகையில், அரசன் இவரது சிவானுபூதியை யுணர்ந்து, தான் ஏவல்கொள்ளாது சிவபணியில் நிறுத்திவிட, தினந்தோறும் அடியார்க்கமுதருத்தியன்றி, உண்ணுகியமம்பூண்டொழுகுங்காலோர் நாள் அடியவரகப்படாதொழியத் தேடிவருந்துகையில், சிவபெரு மான் பைரவச்சைவராய்த் திருக்கோவிலாத்திமரத்தின்கீழிருத்தலையு ணர்ந்து போயழைக்க, அப்பைரவர் நற்குடியில் ஓரேபேறாய் ஐந்து வயதினையுடைய, பழுதில்லாத சிறுவனைப்பெற்றோரே மகிழ்ச்சியுட னறுத்துச் சமைத்துப்படைத்தாலன்றி உண்பதில்லையென்று திருவா ய்மலர்ந்தருள, இவர் அதற்கிசைத்து, அவ்வரியதொழிலுக் குடன்ப டுவார் பிறரின்மையாற் றாமுந் தம்மனைவியாரும் மனமொத்துத் தம தருமைக் குமாரனாகிய சீராளனையே அறுத்துச் சமைத்துப் பைரவ ரை அமுதுசெய்யவேண்ட, அப்பைரவர் அடியாரோடன்றித் தனித் துண்ணேமென்று கூறியபொழுது, அடியார்கிடைப்ப தருமையாத லாற் றம்மையும் ஒரு அடியாநாகக்கொண்டு அமுதுசெய்யவேண்டிய இவரது வேண்டுகோளுக்கிசைந்த அப்பைரவர் அமுதுசெய்ய உட ன்பட்டபொழுது அவர் திருவமுது செய்யவேண்டி முன்னுண்ணப் புகும் நாயனாரை, அப்பரைவர் தடுத்தருளி யுமக்குச் சிறுவருண்டோ வென்ன? உண்டென்ற இவர் அவன் இப்போது உதவானென்றுகூறி யதையும்மறுத்துச் சிறுவன் வந்தன்றி யுண்ணேனென்ற பைரவருக் காக மனங்கசிந்து, புறத்தேபோய்ச் சிறுவனையழைப்ப, இறந்த சிறு வன் உயிர்பெற்றுவர, இவ்வாறு திருவருள்புரிந்தபைரவர் மறைந்த ருளி இந்நாயனாரைச் சககுடும்பத்தோடு சித்திரைமாதப்பரணிநாளிற் றிருவடி சேர்த்தியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், திரு நாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்- ௩.

—இதற்கு வடகிழக்கு உ - மைலில்,

## ௮௰. * திருமருகல்.

(மாணிக்கவண்ணேச்சுரர், வண்டுவார்குழலியம்மை,
மாணிக்கதீர்த்தம், வன்னிவிருட்சம்.)

மார்க்கண்டேயரிஷி பூசித்த தலம். ஓர்வணிகன் தன் தங்கைகு மாரனுக்குப் பெண்கொடுக்கு முரிமையிருந்தும், தனக்குள்ள ஏழு பெண்களில் ஆறுபேரை அன்னியர்களுக்கு விவாகஞ்செய்து கொடு

* இதில் ௬௫-வது பக்கம் முதல் ௯௪-வது பக்கம் வரையிலுள்ள தலங்களின் தலைப்பு எண்கள் பிசகாய் அச்சிட்டிருப்பதால் அவற்றைத் "திருவாக்கூர்தான் றோன்றிமாடம்" தொடங்கி "திருச்செங்காட்டங்குடி" வரையில் ௪௬-வது எண் முதல் ௭௬-வது எண்வரை வரிசைக்கிரமமாகவைத்துக்கொள்ளவும்.

த்ததுபோலவே, மற்றொருகன்னிகையையும் மணம்பேச, அக்கன்னி கை இது நியாயமல்லவென்று தன் மாதுலன்மகனைப்பின்பற்றி மது ரைக்குச் செல்லுங்கால், இத்தலத்தோர் திருமடத்திலிறங்கியிருக் கையில், அவ்வணிகனை அரவந்தீண்டிமாய்ந்தமையாற்கன்னிகை புலம் புதலை அங்கெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தசுவாமிகள் கேட்டு ச்சென்று "மருகலுடையாயிவளுண்மெலிவுதகுமா" என்று பதிக ம்பாடி, அவ்வணிகனை எழுப்பியருளி, அவ்விருவருக்கும் கலியாணம் நடத்தி, மதுரைக்கனுப்பிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞா னசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-௩.

—இதற்கு வடக்கு ௨-மைலில்,

அக. *திருசாத்தமங்கை அயவந்தி.—(சாத்தமங்கை.)

(அயவந்தீச்சுரர், இருமலர்க்கண்ணம்மை, அற்புதசிவகங்கைதீர்த்தம்.)

அஷ்டாவக்கிரரிஷிபூசித்த தலம். (திருநீலநக்கநாயனர்,) பிராம ணகுலத்தில் ஆடிமாதம் பூரநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவ பூசைசெய்தொழுகுவோர், ஓர்நாள் சிவபூசைசெய்கையில் சிவபெரு மான்மீது சிலந்தியூர்ந்ததை யுணர்ந்த அவர் பத்தினியார் வாயாலூதி யகற்ற, வாயாலூதல் அநுசிதமென்றுகொண்டநாயனர், மனைவியைத் தள்ளிவைப்பச் சிவபெருமான் கனவிற்றோன்றித் தம் திருமேனி யைக் காட்டியருளி, அம்மாதுசிரோமணி யூதியகற்றுதவிடங் கொப் புளங்கொண்டதையும், ஊதியவிடங்கொப்புளங்கொள்ளாமையையுங் காண்பித்து மனைவியாரோடு உறவாக்கிவைப்ப, நாயனர் சிவத்தொ ண்டு முதலிய செய்துவந்து திருஞானசம்பந்த சுவாமிகள் திருமணத் தில் வைகாசிமாத மூல நாளிற்சோதியிலொடுங்கசெய் தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧.

—இதற்குத் தென்கிழக்கு ௧௬-மைலில்,

அ௨. * திருநாகைக்காரோணம்.—(நாகபட்டினம்.)

(ஆதிபுராணேசுரர், காயாரோகணேச்சுரர், நீலாயத்தாட்சியம்மை, நித்தியதீர்த்தம், வாரிதீர்த்தம், தேவதீர்த்தம், முனிவர்தீர்த்தம், சர்வதீர்த்தம் முதலியன, மாவிருட்சம்.)

இது சப்தவிடங்கங்களிலொன்று. சுந்தரவிடங்கத்தியாகர். புண் டரீகமகாரிஷியானவர்காயகோடிபீடமாகிய காஞ்சீபுரத்திலும், கும்ப கோணத்திலும், மூன்றுகாரோணப் பிரதிட்டைசெய்து பூசையாற்றி ௬௰௪ - ஆயிரவருடமுஞ்சென்று தானினைத்தது மூடிவுறாது மயங் குங்காலையில் கண்ணுவமுனிவர்தோன்றி அருள்செய்தபிரகாரம்வந்து தேவதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, மேலக்காரோணம் பிரதிட்டை செய்து பூசித்து, ஆதிபுராணேசுரரைத் தரிசித்துவருங்காலையில்,

இரண்டுதடவையில் காட்சிகொடுத்தும், மூன்றுந்தடவையில் அவ்வாதிபுராண இலிங்கத்தில்காயத்துடன்புண்டரீகமகாரிஷியை ஆரோகணஞ்செய்துகொண்ட தலம். அதுமுதல் ஆதிபுராணேசுரர்க்கு காயாரோகணேசுரரென்ற திருநாமமுடையது.

அகத்தீசர், பிரமா, இயமன், விஷ்ணு, வாசுகி முதலியநாகங்கள் அதன் கன்னிகைகள், சத்தரிஷிகள், விசுவாமித்திரரிஷிமுதலாயினோர் பூசித்த தலம்.

முசுகுந்தசக்கரவர்த்தி பிரமஹத்தியும், பாண்டியராசன் கயரோயும், விகுர்தன், இந்திரன், தருமன் இவர்களைப்பற்றிய சாபங்களுந்தீர்த்த தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் "பத்தூர்புக்கிரந்துண்டு" என்னும்பதிகத்திற்கேட்டுக்கொண்ட எல்லாவற்றையும் அநுக்கிரகித்ததலம். அதில், "காற்றனையகடும்பரிமாவேறுதலும்வேண்டும்" என்றதற்குச்சாட்சியாக இக்காலத்தும் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக் குதிரைவாகனம் நடத்தப்பட்டுவருகின்றது.

(அதிபத்தநாயனுர்,) ஐப்பசிமாத இரேவதிநாளிற் பரதவர்குலத்திற் றிருவவதாரஞ்செய்தருளி, மீன்பிடித்துவாழ்பவர், தாம் பிடித்த மீனுள்ளொன்றைச் சிவபிரானுக்கென்று சலதியில் விடுத்துவருவது அவரது நியமம், சிலநாளொருமீனன்றி வேறுமீனகப்படாதொழிய, வேறொருநாட் சொர்ணரத்தினகசிதமான ஒருமீன்அகப்பட அதனையுஞ் சிவபெருமானுக்கென்று விடுத்து மகிழ்ந்த அந்நாயனுரை ஆவணிமாதஆயிலியநாளில் சிவபதஞ்சேர்த்தருளிய தலம்: சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - எ.

—இதற்கு மேற்கு உ-மைலில்,

அரு. ✻ திருச்சிக்கல்.

(நவநீதநாதேச்சுரர், வேனெடுங்கண்ணியம்மை, நவநீததீர்த்தம்,)
குடைசம்மல்லிகைவிருட்சம்.)

கிருஷ்ணன் வெண்ணெய் திருடியுண்ட பாவம்போக்கப்பூசித்த தலம். வசிஷ்டர், காமதேனு முதலியோர் பூசித்த தலம். சிங்காரவேலர் சூரனை விரட்டிவந்து சம்மாரஞ் செய்தவிடமென்றுஞ் சொல்லுவார்கள். இப்போதும் கந்தர் சஷ்டிஉற்சவம் வெகுமேம்பாட்டுடன் நடக்கின்றது. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு மேற்கு ரு-மைலில்,

அ௪. * திருக்கீழ்வேளூர்.—(கீவளூர்.)
(அட்சயலிங்கேச்சுரர், வனமுலைநாயகியம்மை, சிவஞானதீர்த்தம், அட்சயதீர்த்தம், இலந்தைவிருட்சம்.)

அட்சயதேவர் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨. —இதற்குத் தெற்கு ௩-மைலில்;

அ௫. * திருத்தேவூர்
(தேவகுருநாதேச்சுரர், மதுரபாஷிணியம்மை, பிரகஸ்பதிதீர்த்தம், வாழைவிருட்சம்.)

பிரகஸ்பதிமுதலியோர் பூசித்த தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்கு வடமேற்கு அ-மைலில்,

அ௬. * திருப்பள்ளியின் முக்கூடல்.—(அரியான்பள்ளி.)
(முக்கோணேச்சுரர், மைமேவுகண்ணியம்மை, முக்கூடல்தீர்த்தம்.)

மூர்க்கரிஷி முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு ௩ - மைலில்;

அ௭. * திருவாரூர், மூலட்டானம்.
(புற்றிடங்கொண்டார், அல்லியங்கோதையம்மை, வீதிவிடங்கப்பெருமான், கமலவதியம்மை, கமலாலயமுதலியபலதீர்த்தங்கள்.)

இலக்குமிபூசித்து மங்கிலியம் பெற்ற தலம். திருமால் மார்பகமே ஊஞ்சலாக அமர்ந்த, சோமஸ்கந்தமூர்த்தியாகிய தியாகப்பெருமானே, முசுகுந்தச்சக்கரவர்த்தி இந்திரனாற்பெற்று ஸ்தாபித்த தலம். இது சப்தவிடங்கத்துள் மிக்கது. வீதிவிடங்கர் அசபாநடனம். வசிஷ்டர், கௌதமர், பிரமா, விஷ்ணு, தேவேந்திரன் முதலியோர் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம்.

(நமிநந்தியடிகள்நாயனார்) ஏமப்பேரூரில், பிராமணகுலத்தில் ஐப்பசிமாத உத்திரநாளிற் றிருவவதாரஞ் செய்தருளித் திருவிளக்கிடும்பணிபுரிந்துவருங்கால், ஓர்நாள் தீபநெய் முட்டுதலடையச் சைநனென்றறியாத ஒருவன் மனையில் நெய்கேட்புழி, அவன் நுங்கடவுள் அக்கினியை கையிலுடையவராயிருத்தல்பற்றி, விளக்கி யாதுக்கு? அப்படி விளக்கெரிக்கவேண்டுமோனால் நீரைவார்த்தெரியும் பார்ப்போமென்று பரிகாசஞ்செய்தபடி நாயனார் தண்ணீரால் விளக்கெரித்த தலம். உற்சவகாலத்தில் பல சாதியார் கூடி நெருக்கியதைத் தீண்டலாகநினைத்த அந்நாயனாருக்கு, எத்திறத்தோரும், சிவகணங்களாமெனக்காட்டி வைகாசிமாதப் பூசநாளிற் றிருவடி யருளிய தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள், திருக்கயிலையில் நந்தனவனத்திற் கண்ட அம்மன்சேடியர்களிலொருவராகியகமலினியார், உருத்திரகணிகையர் மரபிற்றிருவவதாரஞ் செய்தருளிப் பரவையாரென்னுந்திருநாமத்தோடு சிவபணிவிடைசெய்துவந்து சிவாஞ்ஞைப்படி, சுந்தரமூர்த்திசுவாமிகளைத்திருமணஞ் செய்யப்பெற்ற தலம். சுந்தரமூர்த்திசுவாமிகள் சங்கிலிநாச்சியாரையு மணந்துகொண்டமைபற்றிப் புலவியடைந்த பரவையார்மனைக்கு, எம்பெருமான் திருக்கால்கள் நோவ, ஒருகாலிருகால் தூது நடந்து அவ்வூடல் நீக்கியருளியதலம். சுந்தரமூர்த்திநாயனுருக்குத்திருவொற்றியூரை நீங்கியபொழுது, அபாவமானகண்களிரண்டில், முன்னமே காஞ்சியிற்பெற்ற ஒருகண்ணுடன் மற்றொரு கண்ணுந்தந்தருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளை மணக்கோலத்துடன் வரப்பண்ணியசிவபெருமான், அவருள்ளத்திற்செய்த அடியார் வணக்கத்தை வெளிப்படுத்தும் பொருட்டு, உலகமறியத் "தில்லைவாழந்தணர்தம்மடியார்க்குமடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டத்தொகை பாடுவித்து, அதில் "திருவாரூர்ப் பிறந்தார்களெல்லார்க்குமடியேன்" என்று துதிக்கப்பெற்ற தலம்.

(விறன்மிண்டநாயனுர்)திருச்செங்குன்றூரில்வேளாண்மரபில் ஆவணிமாத மூலநாளிற் றிருவவதாரஞ்செய்தருளித் தலயாத்திரை செய்பவர், இத்தலத்துத் தேவாசிரியனிலமர்ந்திருக்குங்கால், சுந்தரமூர்த்திசுவாமிகள், அடியாரை வணங்காதுசென்றதற்காக அவரையும் அவரைவலிந்தாண்டதற்காகச் சிவபெருமானையும் புறகென்றுரைத்து, அவ்வன்றொண்டர் திருத்தொண்டத் தொகை பாடி யருளியபின்னர்க் கேண்மை கொண்டு சித்திரைமாதத் திருவாதிரை நாளில் சிவகணங்களுக்குத் தலைவராக்கிய தலம்.

(தண்டியடிகள்நாயனுர்) புரட்டாசிமாத வைசாகநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிப் பிறவியந்தகராயிருந்தும், திருக்குளப்பணிசெய்துவரும்போது, அவர்கட்டிக் கரையேறும் அடையாளக்கயிற்றையறுத்துவிட்ட சமணர்கள், முகநகைக்காற்றுதவராய், சிவபிரானிடத்துக்கண்பெற்றும், தம்மை நகைத்த அச்சமணரைக் கண்ணிழக்கச் செய்தும், பங்குனிமாதச் சதயநாளிற் றிருவடி யடைந்த தலம்.

(கழற்சிங்கநாயனுர்) காடவர்குலத்தில் தைமாத அசுவனிநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, அரசுபுரிந்து தலயாத்திரை செய்துவருங்கால் இத்தலத்தடைய, அவரது மனைவியார் கோயிலிற் சிந்தியிருந்த ஓர் மலரை யெடுத்து மோப்ப, அதனைத் தஞ்சாவூரில் வேளாண்மரபில் தைமாத உத்திரட்டாதிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளியவ

ரும், சிவாபராதஞ் செய்பவர்களைத் தண்டித்து நேர்ப்படுத்து வோருமாகிய, (செருத்துணைநாயனார்) கண்டு அரசன்மனைவியின்நாசியைக் குறைக்க, அரசன் அம்மலரையெடுத்து நாசிக்கீந்தது கையாதலால் அதனையுஞ்சேதித்தல் வேண்டுமென்று சேதிப்ப, இவ்வரிய சிவபணி புரிந்தகழற்சிங்கநாயனாரை வைகாசிமாதப் பரணிநாளிலும் செருத்துணைநாயனாரை, ஆவணிமாதப்பூசநாளிலும், சிவபதமடைவித்ததலம்.

(மநுநீதிச்சோழமகாராஜாவை) நீதிசோதிப்பான்பொருட்டு, வீதிவிடங்கப்பெருமானே பசுவும், இயமனே கன்றுமாகவந்து, கன்றை அவ்வரசகுமாரனது தேர்க்காலி லகப்படச்செய்து, ஆராய்ச்சிமணியை யசைத்ததின்பொருட்டு, அரசனால் அவரது குமாரனைத் தேர்க்காலிலிடறச்செய்வித்துப் பின்னர் அநுக்கிரகித் தருளிய தலம். பூந்துருத்திநம்பிகாட நம்பியால் "திருவிசைப்பா" பாடியருளப்பெற்ற தலம்.

ஐயடிகள்காடவர்கோன்நாயனார், "க்ஷேத்திரவெண்பா" பாடியருளிய தலம்.

மாணிக்கவாசகசுவாமிகளுக்குத் தரிசனங் கட்டளையிட்டருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகளால், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்கு, "அத்தன் ஆரூர் ஆதிரைநாளாலது வண்ணம்" என்றும் "ஒருவனயுலகேத்தநின்றநாளோ" என, இத்தலத்தினது பழமையைப்புகழ்ந்தும்திருப்பதிகமருளிச்செய்து, புகழ்பெற்றதலம்.

சேரமான்பெருமாணாயனார் "மும்மணிக்கோவை"பாடியருளியதலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩௪. —இவ்வாலய தென்கிழக்கில்,

அஅ. * திருவாரூர் அறநெறி.—(திருவாரூர்.)

(அகிலேச்சுரர், அல்லியங்கோதையம்மை, அற்புதக்கூவமுதலியதீர்த்தங்கள்.)

அத்திரிஷி, மார்க்கண்டேயரிஷி முதலாயினோர் பூசித்த தலம். நமிநந்தியடிகள் நாயனார் நீராலேவிளக்கேத்தி யெரிப்பச்செய்தருளிய தலம். திருமூலட்டானத்து இரண்டாம்பிரகாரத்தில் மேற்குமுகமாய் எழுந்தருளியதலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ. —இதற்கருகில்,

அகூ. * திருவாரூர், பரவையுண்மண்டளி.—(திருவாரூர்.)

(பரவையுண்மண்டளீச்சுரர், பஞ்சின்மெல்லடியம்மை, வருணபுட்கரணிமுதலியதீர்த்தங்கள்.)

தூருவாசமாமுனி பூசித்த தலம். இந்நகரமீது வருணன் விட்

டகடலை வறப்பச்செய்தமைபற்றி வருணன் பூசித்த தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்மேற்கு உ - மைலில்,

௬௰. * திருவிளமர்.

(பதஞ்சலிமனோகரேச்சுரர், யாழினுமென்மொழியம்மை, முத்திதீர்த்தம்.)

பதஞ்சலிமகாமுனிவர், முசுகுந்தச்சக்கரவர்த்தி முதலியோர்பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு வடமேற்கு ச - மைலில்,

௬௧. * திருக்கரவீரம்.

(கரவீரேச்சுரர், பிரத்தியட்சமின்னம்மை, அனவரததீர்த்தம்.)

கௌதமரிஷி முதலியோர்பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடமேற்கு க - மைலில்,

௬௨. * திருப்பெருவேளூர்.—(காட்டூரையன்பேட்டை)

(பிரியாதநாயகேச்சுரர், மின்னனையாளம்மை, சத்திதீர்த்தம்.)

சிவசத்திபூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ.

—இதற்கு மேற்கு ௩ - மைலில்,

௬௩. * திருத்தலையாலங்காடு.

(ஆடவல்லவேச்சுரர், திருமடந்தையம்மை, சொர்ணதீர்த்தம்.)

கபிலரிஷி முதலியோர் பூசித்த தலம். தாருகாவனரிஷிகளாலனுப்பப்பட்ட முயலகனது முதுகின்மீது சிவபெருமான் நடித்தருளிய தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு மேற்கு ⑥ - மைலில்,

௬௪. * திருக்குடவாயில்.

(கோணேச்சுரர், பெரியநாயகியம்மை, திருக்குடதீர்த்தம்.)

திரணபிந்துவென்னுமுனிவர், பூசிப்பச் சிவபெருமான் திருக்குடத்தினின்றும் பிரசன்னராய் அவரது குட்டநோயை நீக்கியருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ. —இதற்கு வடமேற்கு உ - மைலில்,

௬௫. * திருச்சேறை.—(உடையார்கோயில்)

(செந்நெறியப்பேச்சுரர், ஞானவல்லியம்மை, மனோகரதீர்த்தம்.)

தௌமியரிஷி முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩. —இதற்குத் தென்கிழக்கு உ - மைலில்,

கூசு. * திருநாலூர் மயானம் —(நாத்தூர்.)

(பலாசவனேச்சுரர், பெரியநாயகியம்மை, பலாவடித்தீர்த்தம்.)

ஆபத்தம்பரிஷி முதலியோர் பூசித்த தலம். நாலூர் வேறு மயானம் வேறு, இவ்விரண்டும் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் க.—இதற்குத்தென்மேற்கு சு-மைலில்,

கூஎ. * திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்—(ஆண்டாங்கோவில்,)

(சொர்ணபுரேச்சுரர், சிவாம்பிகையம்மை, சொர்ணதீர்த்தம்.)

காசிபரிஷி முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு ௩ - மைலில்,

கூஅ. * திருஇரும்பூளை.—(ஆலங்குடி.)

(காசியாரண்ணியேச்சுரர், ஏலவார்குழலியம்மை, காசிதீர்த்தம்.)

விசுவாமித்திரரிஷி முதலியோர் பூசித்த தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு மேற்கு ச-மைலில்,

கூகூ. *திருஅரதைப்பெரும்பாழில்—(அரித்துவாரமங்கலம்.)

(பாதாளேச்சுரர், அலங்காரநாயகியம்மை, பாதாளதீர்த்தம்.)

பொன்கண்ணனெனும் அசுரனைக் கொன்று பூமியை மீட்ட விஷ்ணுவுக் குன்மத்தங்கொண்டு, பூமியை அழிக்கப்புகும்பொழுது, சிவபெருமான் அப்பன்றியின் கோட்டை முறித்துத் தமது மார்பில் அணிந்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு மேற்கு உ-மைலில்,

ர. * திருஅவளிவணல்லூர்.

(சாட்சிநாயகேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, பிரசன்னதீர்த்தம்.)

வராகஅவதாரத்திற் கொம்பு பறிகொடுத்த விஷ்ணு பூசித்துக் காட்சிபெற்ற தலம். குருக்கள் பெண்ணுக்கு சாட்சிசொன்ன இடபாரூடமுகூர்தமிருக்கின்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ.

—இதற்குத் தென்மேற்கு ௰-மைலில்,

ரக.*திருப்பருதிநியமம்.(பழம்பஞ்சுரம் பருத்தியப்பார்கோயில்)

(பருதியப்பேச்சுரர், மங்களநாயகியம்மை, பாஸ்கரதீர்த்தம்.)

சூரியன் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடகிழக்கு ௰க-மைலில்,

௩௨. * திருவெண்ணியூர்.—(கோவில்வெண்ணி)

(வெண்ணிநாயகேச்சுரர், அழகியநாயகியம்மை, அழகுசிவகங்கைதீர்த்தம்-)

தெத்தாத்திரேயரிஷி, முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௩. —இதற்குத் தென்கிழக்கு ௪ - மைலில்,

௩௩. * திருப்பூவனூர்.

(புட்பவனேச்சுரர், கற்பகவல்லியம்மை, கற்பகதீர்த்தம்.)

சுகமுனிவர், கற்கரிஷி, இவர்களும் சுபுத்தி, சராசந்தனென்னும் மறையவர்களுஞ் சேர்ந்து புஷ்பவனஞ்செய்து அர்ச்சித்துவந்து, கதிபெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தென்கிழக்கு ௫-மைலில்,

௩௪. * திருப்பாதாளேச்சுரம்.—(பாமணி)

(சர்ப்பபுரேச்சுரர், அமிர்தநாயகியம்மை, நாகதீர்த்தம்.)

ஆதிசேஷனும், நாகலோகத்தாரும், பூசித்த தலம். இஃது மன்னார்கோயிலுக்கு ௨ - மைலிலிருக்கின்றது. இத்தலத்தினது பெயரினால்தான் அவ்வாற்றுக்கும் பாமணியென்று பெயராயினது. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்கிழக்கு ௰௪-மைலில்,

௩௫. * திருக்களர்.

(களரிளமுளையேச்சுரர், அழகேஸ்வரியம்மை, திருக்குளதீர்த்தம்.)

பராசமுனி, காளவமுனி பூசித்த தலம். துருவாசருக்கு நடனதரிசனங் கொடுத்த நடேசமூகூர்த்தமும், அவ்விருஷிமுகூர்த்தமும், அவ்வாலயத்திருக்கின்றன. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.—இதற்குத்தென்கிழக்கு ௩-மைலில்,

௩௬. * திருச்சிற்றேமம்.—(சிற்றூம்பூர், எழிலூர்.)

(பொன்வைத்தநாதேச்சுரர், அகிலாண்டேஸ்வரியம்மை, அகிலாண்டதீர்த்தம்.)

வியாசரிஷி, அத்திரிமகாரிஷி பூசித்த தலம். ஆகாரமின்றிவருந்தும் விபுதனென்னும் அடியவருக்கு, படியின்கீழ் நாடோறும் ஒருபொற்காசு வைத்து அவருக்குக் கனவிற் கூறியருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்மேற்கு ௰௪-மைலில்,

௩௭. * திருவுசாத்தானம்.—(கோயிலூர்.)

(மந்திரபுரேச்சுரர், பெரியநாயகியம்மை, சுக்கிரீவதீர்த்தம்.)

ஸ்ரீராமர், லட்சுமணர், சாம்புவன், சுக்கிரீபன், அநுமான்முதலியோர் பூசித்த தலம். இஃது முத்துப்பேட்டைக்கு வடக்கு ௨-மை

விலிருக்கின்றது. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்குத் தென்கிழக்கு ௰-மைலில்,

௱அ. * திருஇடும்பாவனம்.

(சற்குணநாதேச்சுரர், மங்களநாயகியம்மை, சுமுகபுட்கரணிதீர்த்தம்.)

இடும்பனென்னுமசுரன் பூசித்து வலிமைபெற்ற இக்குன்றில், புகலகர் முதலியரிஷிகள் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு க-மைலில்,

௱சூ. * திருக்கடிக்குளம்—(கைப்பனுகுளம்.)

(கற்பகேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, விநாயகர்கண்டதீர்த்தம்.)

கற்பகப்பிள்ளையார் பூசித்துச் சிவபெருமானிடம் மாம்பழம்பெற்ற தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு வடகிழக்கு ௰ச-மைலில்,

௱௰. * திருத்தண்டலைநீணெறி.

(நீணெறிநாதேச்சுரர், ஞானநாயகியம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

கூர்மாவதாரங்கொண்ட விஷ்ணுமுதுகில் மந்தரகிரியை நாட்டித் தேவர்கள் அமுதம் கடைந்தபோது, அக்கூர்மம் அகங்கரித்துக் கடலைக் கலக்குவதுபார்த்து, முறையிட்ட தேவர்களுக்காகச் சிவபெருமான் இரங்கி, அக்கூர்மத்தின் அகந்தையை ஒழித்து, அவ்வாமையோட்டை யணிந்தருளிய தலம். இத்தலத்துக்கு ஒருமைலிலிருக்குங் கணமங்கலத்தில் பிறந்து அரிவாட்டாயநாயனர் சிவபெருமானுக்குச் செந்நெல் அரிசி, மாவடு, செங்கீரை முதலான பலவகை நிவேதித்துப் பணிவிடைசெய்து, முத்தியடைந்த தலம். இப்போதவ்விடம் பாழாயிருக்கிறது. இத்தலத்தில் மாவடுநிவேதனம் முக்கிய விசேடம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. —இதற்கு மேற்கு எ-மைலில்,

௱௰க. * திருக்கோட்டூர்.

(கொழுந்தேச்சுரர், மதுரவசனியம்மை, அமிர்ததீர்த்தம்.)

தேவர்களும், குச்சரரிஷியும் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு மேற்கு ௰-மைலில்,

௱௰உ. * திருவெண்டுறை.

(வெண்டுறைநாதேச்சுரர், வேனெடுங்கண்ணியம்மை, தாளதீர்த்தம்.)

வித்தியாதரர் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடகிழக்கு அரை மைலில்,

௱௰௩. * திருக்கொள்ளம்பூதூர்.
(வில்வவனநாதேச்சுரர், சௌந்தரவதியம்மை, குடமுருட்டிநதிதீர்த்தம், வில்வவிருக்ஷம்.)

சாண்டில்லியரிஷி முதலியோர் பூசித்த தலம். காவிரிநதியிலோடத்தாலுங் கடப்பதற்கரிய பெருவெள்ளம் வரும்போது, திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்தோடு மோரோடத்தி லேறிநின்று, "கோட்டமேகமழும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிஅதினாலேயே, ஓடத்தை அக்கரை சேர்த்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு ௰௪-மைலில்,

௱௰௪. * திருப்பேரியில்.—(பேரையூர்.)
(சகலபுவனேச்சுரர், மேகலாம்பாளம்மை, வருணதீர்த்தம்)

வருணன் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு - ௪-மைலில்,

௱௰௫. * திருக்கொள்ளிக்காடு.
(அக்கினியீச்சுரர், பஞ்சினுமெல்லடியம்மை, திருக்கொள்ளிதீர்த்தம்.)

சுதீட்சணரிஷி, சுமந்துரிஷி, பூசித்த தலம். தக்கராசன் மதிக்காது யாகஞ்செய்ததனால் சிவபெருமானுக்குண்டாகிய கோபத்திற்பிறந்த வீரபத்திரர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு அரை மைலில்,

௱௰௬. * திருத்தெங்கூர்.
(வெள்ளிமலைநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, கருணாகரதீர்த்தம்.)

ஹரிஹரபுத்திரர் பூசித்து வரம்பெற்றதலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க

—இதற்கு வடகிழக்கு அரை மைலில்,

௱௰௭. * திருநெல்லிக்கா.
(நெல்லிவனநாதேச்சுரர், மங்களநாயகியம்மை, அற்புததீர்த்தம்.)

தாருகாவனரிஷிகள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடக்கு ௪ - மைலில்,

௱௰௮. * திருநாட்டியத்தான்குடி.
(கரிநாதேச்சுரர், மலர்மங்கையம்மை, மகாதீர்த்தம்.)

யானை, புகல்கரிஷி, மிபகண்டகரிஷி, முதலியோர் பூசித்த தலம். (கோட்புலிநாயனார்) வேளாளமரபில் ஆனிமாதத் திருவாதிரைநாளிற்

திருவவதாரஞ்செய்தருளிச் சேனைக்காவலராய், அரசனது வினைமேற்கொண்டுசெல்பவர், சிவாலயநைவேதனத்திற்காக வைத்துப்போன நெற்கோட்டைகளை, அவர்வரத்தாழ்த்தமையால், அப்போது நேரிட்ட கருப்புக்காற்றாத சுற்றத்தார், பின்னர்க் கொடுத்துவிடலாமென்றுகருதி எடுத்துப்புசிக்கப் போர்வினைமுடித்துவந்த நாயனார், நைவேத்தியத்திற்குவைத்த நெல்லைக்காணாது, அதனையருந்திய சுற்றத்தாரை வாட்கிரையாக்கிய தன்றியும், ஓர் பசுங்குழவியையும், வாளாலேற்கத்தொடங்குகையில் அயனின்றான்விலக்க, அக்குழவி அவ்வமுதுபடி யுண்டியாலூறிய பாலைப் பருகினமைபற்றி அதனையுந் துணித்தல் வேண்டுமென்று துணித்தருள, அந்நாயனாரை ஆடிமாதக்கேட்டைநாளிற் சுற்றத்தாரோடு சிவலோகத்தையடைவித்ததலம். இந்நாயனார் தமது பெண்களிருவரைச் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக் காட்டி மணஞ் செய்யவேண்டியபொழுது, அவர்களை மகண்மைகொண்டு சிங்கடியப்பன், வனப்பகையப்பன், எனத் தமக்கு நாமஞ்சூட்டிப் பதிகம்பாடி யருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்கிழக்கு ரு-மைலில்,

௱௧௯. * திருக்காராயில்

(கண்ணாயிரநாதேச்சுரர், கயிலாயநாயகியம்மை, இந்திரதீர்த்தம்.)

தேவேந்திரன், முசுகுந்தச்சக்கரவர்த்தி முதலியோர் பூசித்த தலம். சப்தவிடங்கத்தலத்து ளொன்று. ஆதிவிடங்கர், குக்குடாநடனம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குக் கிழக்கு ௩-மைலில்,

௱௨௰. * திருக்கன்றாப்பூர்.

(நடுத்தறியப்பேச்சுரர், மாதுநாயகியம்மை, பிரசன்னதீர்த்தம்.)

இடும்பனென்னும் அசுரன் பூசித்து வரம்பெற்ற தலம்.

ஓர்மாதின் பொருட்டுக் கன்றுக்குட்டிக்கு நட்டதறியிலிருந்து ஆயுற்பவித்தவராகையால், இத்தலநாயகருக்குந் தலத்திற்கும் அக்காரணப்பெயருண்டாயிற்று. திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தெற்கு உ-மைலில்,

௱௨௧. * திருவலிவலம்.

(மனத்துணைநாதேச்சுரர், வாளன்னகண்ணியம்மை, காரணகங்கைதீர்த்தம்.)

காரணரெனும்ரிஷியும், கரிக்குருவியும், பூசித்ததலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ச.

—இதற்குத் தென்மேற்கு ௩-மையில்,

## ளஉஉ. * திருக்கைச்சின்னம்.

(கைச்சினநாதேச்சுரர், வெள்ளையம்மை, திருக்குளதீர்த்தம்.)

இரணவிந்துவென்னு முனிவர் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குக் கிழக்கு ச - மைலில்,

## ளஉங. * திருக்கோளிலி.—(திருக்குவளை, கொன்றையூர்.)

(கோளிலிநாதேச்சுரர், வண்டமர்பூங்குழலம்மை, திருக்குவளைதீர்த்தம்.)

சப்தவிடங்கத்தலத்திலொன்று. அவனிவிடங்கத்தியாகர், வண்டுநடனம். கின்னரர்கள், முசுகுந்தச்சக்கரவர்த்திமுதலாயினோர் பூசித்ததலம். சுந்தரமூர்த்திசுவாமிகள் பரவையாரோடுமெழுந்தருளியிருக்கும்போது, திருவமுதுக்காக நென் முதலியனதரும் வேளாளகுலக் குண்டையூர்க் கிழவர் கருப்புக்காலத்தில் நெல்வேண்டுமென்று சிவபெருமானைத்துதிக்க, அவர் நெல்மலையைத் தந்தருள, அதைக் குண்டையூர்க்கிழவர் சுந்தரமூர்த்திசுவாமிகளுக் கறிவிப்பச் சுவாமிகளிங்குவந்து அதனை யெடுப்பிக்கும்பொருட்டு "ஆளிலையெம்பெருமானவையட்டித்தரப்பணியே" என்று பதிகமோதி இரவில் பூதகணங்களால் அந்நென்மலையைத் திருவாரூர் மனைகடோறும் நிரம்பும்படி செய்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ச. —இதற்குத் தென்கிழக்கு ரு-மைலில்,

## ளஉச. * திருவாய்மூர்.

(வாய்மூரநாதேச்சுரர், பாலினுநன்மொழியம்மை, சண்டமாருததீர்த்தம், வன்னிவிருட்சம்.)

வாய்வுதேவன், முசுகுந்தசக்கரவர்த்திமுதலியோர் பூசித்ததலம். சப்தவிடங்கத்தலத்து ளொன்று. நீலவிடங்கர், கமலநடனம். திருமறைக்காட்டில் அப்பர்சுவாமிகள் பதிகம் நிரம்பியபின், கதவுதிறந்த அருமையையும், கௌணியர்கோன் முதற்கவியிற்றானே கதவடைக்கப்பெற்ற எளிமையையும் சிந்தித்து இது என்னையென்று இரவில்கவன்ற அப்பர்சுவாமிகளுக்கு, கனவின்கண்ணே சிவபெருமான், சிவனடியார்போற்றோன்றி வாய்மூருக்குவாவென்றழைத்தபடி இங்குவர, முன்னாக வழிகாட்டி வந்த சிவபெருமான் அப்பர்சுவாமிகளுக் கணித்தாகாமற் செல்லும்பொழுது, அங்குத் திருஞானசம்பந்த சுவாமிகளும்வர, அரசுகள் ஓர்கவியால் கதவடைக்கப்பெற்றவர் வந்தும் சுவாமிகள் தாழ்த்தல் சரியா? என்றபொழுது அவ்விரு நாயன்மாருக்கும், சிவபெருமான்தரிசனங் கட்டளையிட்டருளி அவ்விருசுவாமிகளாலும், பதிகம்பெற்றுள்ள தலம். திருப்பதிகங்கள்-ந.

—இதற்குத் தென்கிழக்கு ௰-மைலில்,

௱௨௫. * திருமறைக்காடு.—(வேதாரணியம்.)

(மறைக்காட்டீச்சுரர், யாழைப்பழித்தமொழியம்மை, வேததீர்த்தம், அலைவாய்த்தீர்த்தமுதலியதீர்த்தங்கள், வன்னிவிருக்ஷம்.)

வேதங்களாலும், முசுகுந்தச் சக்கரவர்த்தியாலும் பூசிக்கப்பெற்ற தலம். சப்தவிடங்கத்தலத்துளொன்று. புவனிவிடங்கர், அமிர்தநடனம். இத்தலத்தில் வேதம் பூசித்து, சாத்திய திருக்கதவம் உலகோர் திறக்கலாற்றாது வேறுவழியிற் சென்று சுவாமிதரிசனஞ் செய்துவருவதை யுணர்ந்த பிள்ளையாரும், அரசுகளும், ஆங்குச்சென்று அரசுகளாற் பதிகமோதித் திருக்கதவந் திறப்பித்துச் சுவாமிதரிசனஞ்செய்து மீண்டபொழுது, பிள்ளையார் பதிகம்பாடிக் கதவை யடைப்பித்து, அன்றுமுத லேனையோருக்கும், அக்கதவம் அடைத்தல், திறத்தல், வழங்குவதாகச் செய்தருளிய தலம். இதனாலே தேவாரப்பதிகங்கள் தமிழ்வேதமேயாமென்பது பிரசித்தம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-௰.

—இதற்குத் தெற்கு உ-மைலில்,

௱௨௬. * திருஅகத்தியான்பள்ளி.

(அகத்தியேச்சுரர், மங்கைநாயகியம்மை, அகஸ்தியதீர்த்தம்.)

அகஸ்தியமுனிவர் முதலிய ரிஷிகளும், தேவர்களும் பூசித்ததலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தெற்கு எ-மைலில்,

௱௨௭. * திருக்கோடிக்குழகர்.

(அமிர்தகடேச்சுரர், மையார்தடங்கண்ணியம்மை, அமிர்ததீர்த்தம், அலைவாய்தீர்த்தம்.)

வாய்வுதேவன் இன்றும் பூசிக்கின்ற ஐதிகமாகக் கடிய காற்றெழும்புந் தலம். பலதேவர்களும், இருடிகளும் பூசித் தநுக்கிரகம்பெற்ற தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

௱௨அ. ¶ திருப்பெருந்துறை —(ஆவுடையார்கோவில்.)

(ஆத்மநாதேச்சுரர், உமாதேவியம்மை, சிவகங்கைதீர்த்தம், குருந்தவிருட்சம்.)

பராசரிஷி, பிருகுரிஷி, பூசித்த தலம். சமயாசாரியர்களிலொருவராகிய ஸ்ரீமன் மாணிக்கவாசகசுவாமிகள், அரிமர்த்தனபாண்டியனிடத்து மந்திரியாயிருந்தபொழுது, அரசனது ஏவலாற் பரிமாக் கொள்ளும்பொருட்டு, மிகுந்த பொற்குவையுட னித்தலத்திற்குவரச் சிவபெருமான் குருவடிவங்கொண்டு சிவகணநாதர்களே மாணு

¶ இக்குறி இட்டதலம் பாடல்பெறவில்லை.

க்கர்களாகத் தற்சூழக் குருந்தின்கீழெழுந்தருளியிருந்து, மாணிக்க வாசகசுவாமிகளை யடிமைகொண்டு, அவர் மனோசந்தேகங்களை நீக்கித் தீட்சைசெய்தருளி, அவரான் மாணிக்கம்போன்ற திருவாசகம்பாடக்கேட்டு, மாணிக்கவாசகரெனத் தீட்சாநாமஞ்சூட்டியருளி, அவர் கொண்டுவந்த திரவியமனைத்தையும் திருப்பணிமுதலிய சிவபணிவிடைக்கே ஆக்கியருளி, அவருக்கு வனநரிகளை வாம்பரியாகத் தந்தருளிய தலம். இன்றும் சகலஉபசாரங்களும் மாணிக்கவாசகசுவாமிகளுக்கே நடந்துவருகின்றதலம். இங்குள்ள திருப்பணிகள் விசேடவிசித்திரமுள்ளவை ; இவற்றைப்போல்வன எங்குங் கிடையாது.

௩௨௯. ¶ திருத்தக்களூர்.

(திருலோகநாதர், தர்மசமர்த்தனி.)

இஃது திருப்பதிகவைப்பில் இருக்கின்றதலம்.

௩௩௰. ¶ நெடுங்காடு.—(தீர்க்காரணியம்)

(தான்றோன்றியீச்சுரர், நெடுந்தவனர்தீர்த்தாள், அன்பிலும்பிரியாள், நெடுந்தவனர்தீர்த்தவுரி.)

சுயம்புக்ஷேத்திரம். அகத்தியர் பூசித்த தலம். இதில் இவர் அஷ்டலிங்கப் பிரதிஷ்டை செய்தனர்.

௩௩௧. ¶ எட்டுகுடி.

(ஆறுமுகப்பெருமாள், தெய்வயானையம்மை, வள்ளியம்மை, சரவணப்பொய்கை.)

தேவர்களும்,முனிவர்களும் பூசித்த தலம். கலியுகத்தில் பிரத்தியட்சமூர்த்திகரமுள்ள தலம். இப்போதும் அனேக இடங்களினின்றும் பலவிதகாவடிமுதலியபிரார்த்தனைகள்செலுத்தி உலகோர் இஷ்டசித்தி யடையுந்தலம். (இத்தலத்தின்பெருமையைக் கண்குளிரக் கண்டாலொழிய யாவற்றும் புலப்படாதென்றறிக.)

௩௩௨. ¶ திருத்தஞ்சைநகர்.—(தஞ்சாவூர்.)

(பிரகதேச்சுரர், உமாமகேஸ்வரியம்மை, கிருபாதீர்த்தம், சிவகங்கை, காவிரிநதிதீர்த்தம்.)

தேவேந்திரன், அகத்தியரிஷி, சோழராசன், முதலிய அநேகபத்தர்களுக்கு நல்வரம்கொடுத்தருளியதலம் கருவூர்த்தேவரால் "திருவிசைப்பா" பாடி மருந்துசாத்தி அட்டபந்தனஞ்செய்தருயளிதலம். இதின்கோபுரசிகரநிழல் எக்காலத்திலும் பூமியில்படுகிறதில்லை. இந்நகரில் இதன்றி யின்னும் அனேகசிவாலயங்க ளுளன. செருத்துணைநாயனர் திருவவதாரமான தலம்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

௱௩௩. ¶ திருப்பழையாறை.

(சோமேச்சுரர், சோமகலாநாயகியம்மை, சந்திரபுட்கரணிதீர்த்தம்.)

தக்கன் பெண்களில் இருபத்தெழுவரைமணந்த சந்திரன், ரோகிணியிடத்து, விசேஷ மகிழ்ச்சிவைத்திருத்தலைக் கேட்ட தக்கனால் தேய்ந்துபோகும்படி சபாம்பெற்று இங்குவந்து பூசிப்ப,எஞ்சிநின்ற, ஒருகலையையும் சிவபெருமான் தம்முடிமிசைச் சாத்தியருளிச் சந்திரனைநோக்கி யிக்கலை நம்பாலிருக்குங்காறும், உனக்கியாதொருகுறைவுமின்றி நின்கலைகள் வளர்தலும் தேய்தலுமாயிருக்குமென்று வாக்களித்தருளிய தலம். தனிப்பதிக மில்லை. வைப்புத் தலம்.

௱௩௪. ¶ திரிபுவனம்.

(கம்பஹரேச்சுரர், தர்மசம்வர்த்தனியம்மை, சிவகங்கைதீர்த்தம், காவிரிநதிதீர்த்தம்.)

தேவேந்திரன், ஏகாதசருத்திரர்கள், சப்தகன்னிகைகள் முதலியோர் பூசித்த தலம். வரகுணதேவரது பழிநீங்கியும் அப்பழியின் பயத்தால் உண்டாகிய நடுக்கத்தை தீர்த்தருளிய தலம்.

௱௩௫. ¶ காரைக்கால்.

(கயிலாயநாதேச்சுரர், சுந்தராம்பிகையம்மை, சிவகங்கைத்தீர்த்தம்.)

பிருகுமுனி, சௌமியர் முதலியோர் பூசித்தலம்.

(காரைக்காலம்மையார்) ஆவணிமாதக் கிருத்திகை நாளில், வணிக குலத்திற்றிருவவதாரஞ் செய்தருளிப் புனிதவதியாரெனும் நாமத்தோடு, பரமதத்தரென்பவருக்கு மனைவியாராய்ச் சிவனடியார்க்கமுதருத்தலே பெரும்பணியாகக்கொண்டு நடத்திவருங்கால், பரமதத்தராலனுப்பப்பட்ட இரண்டுமாங்கனிகளிலொன்றை, ஓர்பெரியவரமுது செய்தகலப் பரமதத்தர் போசனஞ் செய்யும்பொழுது, ஒருகனி அம்மையார்படைப்ப, அது அதிக சுவையா யிருந்தமைபற்றி, மற்றொன்றையும் விரும்பியபொழுது, பெரியவருண் டகன்றதைச் சொல்லலாற்றாதவராய்த் திருவருளைமுன்னித்தாம் முன்பு கனிவைத்திருந்தவிடத்திற் கைநீட்ட, மற்றொருகனி கிடைத்ததைக் கொணர்ந்து, பரமதத்[illegible]னையுண்டு, முன்னையதிலும் அதிக சுவையையு[illegible] இதேது விசேஷித்திருக்கின்றதே? யெனக்கேட்ப, அம்மையார் பொய் கூறல் கூடாதென்றுன்னி, உண்மையைச்சொன்னதற்கு கணவனார், அற்றேல், மற்றொரு கனி கொடுவரும்படிவேண்ட, எம்பிரானருளால் மற்றொரு கனியும் பெற்றுவந்து அம்மையாரளிப்ப, அது கரத்தினின்றும் மறைந்தமைநோக்கிப் பரமதத்தர், அம்மையாரைக் குலதெய்வமாகப்

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறுதவை.

பாவித்து மெல்ல அகன்று பாண்டி நாட்டிற்போய், வேறூர் விவாகஞ்செய்திருந்துவிட்டதை யுணர்ந்த அம்மையாரங்குச்சென்ற விடத்து, அவரைத்தெய்வமாக எண்ணியபரமதத்தரும், அவரது மனைவியும், குழந்தையுடன்வந்து நமஸ்காரஞ்செய்ய, அம்மையார் அவருக்கென்று தாங்கிய உடற்சுமைதாங்கலாற்றாதவராய், உதறிப் பேய் வடிவம்பெற்றுப்பங்குனிமாதச் சுவாதிநாளிற் றிருக்கயிலையிற் றலையாலடந்துசென்று, "அம்மைமூத்ததிருப்பதிகம்", "திருவிரட்டைமணிமாலை", முதலியவைகளாற் றுதித்து எம்பிரான், "அம்மையே"? வாவென்றழைக்கப்பெற்று, அங்கிருந்தும் திருவாலங்காட்டையடைந்து, ஊர்த்ததாண்டவேச்சுரர் திருநடனத்தை நீங்காது தரிசித்திருக்கும் பெருவாழ்வு பெறச் செய்ததலம்.

௩௬சு. ¶ திருவண்டாம்பாலை.

(கோகரணேச்சுரர், உமாதேவியம்மை, கூவதீர்த்தம்.)

காமதேனுபூசித்த தலம். விறன்மிண்டநாயனர், சுந்தரமூர்த்திசுவாமிகளால் தியாகேசரோடு மனஸ்தாபமாய், இத்தலஞ்சென்று திருவாரூர் என்போரை வெறுத்து மற்றைய அடியவர்களை உபசரித்துமிருப்பவர், தியாகராசரே வலிதில் எழுந்தருளிவந்து செல்வத்திருவாரூரென மொழியத் துரத்திச்சென்ற அந்நாயனரைத் தியாகேசர் "எம்மெல்லைமிதித்தனையே"? எனக்கூறக்கேட்டுத் தமது காலைக் கண்டிக்கமுயன்ற நாயனரதுபத்தியை வியந்து, தரிசனங்கொடுத்துத் திருவாரூருக்கு அழைத்துச்சென்று சுந்தரமூர்த்திசுவாமிகளோடுநட்புச்செய்தருளிய தலம்.

காவிரியின் தென்கரை முற்றியது.

---

☞ காவிரியின் வடகரை, தென்கரை என்று பகுக்கப்பட்ட சோணாட்டில் சிலதலங்கள், அறுபத்துமூன்று நாயன்மார்களில் சில அடியவர்கள் எழுந்தருளியிருந்து சிவபதமடைந்ததாகத்தெரியவந்தபோதிலும், அத்தலங்கள் இப்பொழுது இன்னதிக்கில் இன்னபெயருடனிருக்கிறதென்பதும், அதின்சுவாமிபேர் முதலியவைகளும் சரியாய்ப் புலப்படாமையாலும், அந்நாயன்மாரது சரித்திரச் சுருக்கத்தை மட்டுமிதனடியில் விவரிக்கின்றனம்.

க. ¶ திருஇளையான்குடி.

(இளையான்குடிமாறநாயனர்) வேளாளமரபில் ஆடிமாதச் சதையநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவனடியாருக்குத் திருவமுது

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

படைத்தலாகிய திருத்தொண்டே மேற்கொண்டொழுகும்பொழுது; இவரது பேரன்பை உலகத்தாருக்குணர்த்தியருளும்பொருட்டு, சிவபெருமான் வறுமையைக்கொடுப்பவும், அவ்வறுமையிலுந் தளராத அவ்வன்பர்மனைக்கு மழைபெய்யும் நள்ளிருளில், அதிதியாய்வந்த அடியார்பொருட்டுப் பசியினால்வருந்தும் நாயனார், நென்னல்விதைத்தநென்முளையை வயலிற்றடவி வாரிக்கொடுவந்து, அமுதாக்கிப்படைப்பச் சிவபெருமான் அவரன்புக்கிரங்கி, ஆவணிமாத மகநாளிற் சிவபதவி யளித்தருளிய தலம்.

௨. ¶ திருஎயினனூர்.

(ஏனாதிநாயனார்) சான்றார்மரபிற் பங்குனிமாதப் பூசநாளிற்றிருவவதாரஞ்செய்தருளி, வாட்படைபயிற்றிவரு மூதியத்தாற் சிவனடியார்களைப் பூசித்துவருங்கால், அதிசூரனென்னு மிவரதுபங்காளி, நாயனார்மீதுபொறாமைகொண்டும், இவரை வெல்வதரிதாயிருந்தமைபற்றிச் சிவவேடம்பூண்டு, அவ்வேடத்தைக் கேடகத்தால்மறைத்து, அறைகூவி யுத்தந்தொடங்கியபொழுது, கேடகத்தின் மறைப்பைநீக்கித் தன்முகத்தைக்காட்ட, முகத்திற் சிவசின்னமாகிய திருநீறிருத்தலையுணர்ந்த நாயனார், அவனோடு யுத்தஞ்செய்யாமல் வாளா நின்றுவிட, அவன் நாயனாரை வாளாற் கொன்றுவிடச் சிவபெருமான் அந்நாயனாருக்கு எதிராகத் தோன்றிப் புரட்டாசிமாத உத்திராடநாளிற் சிவபதவியளித்தருளிய தலம்.

௩. ¶ திருக்கணமங்கலம்.

(அரிவாட்டாயநாயனார்) வேளாளமரபில் ஆனிமாதக் கேட்டைநாளிற் றிருவவதாரஞ்செய்தருளித் தினந்தோறும் மாவடுவும், செங்கீரையும், செந்நெல்லரிசியுந் திருவமுதாக்கிச் சிவபெருமானுக்கு நிவேதித்துவருங்கால், வறுமைமேலிடக் கூலிக்காகச்சென்று கொணர்ந்த செந்நெல்லாற் றிருப்பணிமுட்டாது நடத்திவருபவர், சிலநாள் பசியால்வருந்தி, அவ்வருத்தத்துடன் அரிதிற்றேடிப்பெற்றதிருவமுதுகளை, சிவாலயத்திற்குக்கொண்டுசெல்லும்பொழுது, பசிமயக்கத்தாற் கால்தளர்ந்துவிழ, அருகிலிருந்த மனைவியார் கைதாங்கியும், திருவமுதுகள், கமரிற்கவிழ்ந்ததுணர்ந்த நாயனார், அரிவாளால் தம்மூட்டியினையரிய, சிவபெருமான் "விடேல்விடேல்", என்னுமோசையோடு, அக்கமரினின்றுந் திருக்கரத்தை நீட்டித் தொண்டரைத்தடுத்தருளி, அந்நாயனாருக்கும் அவரதுநீங்காதவாத பத்தினியாருக்கும், தைமாதத் திருவாதிரைநாளிற் சிவபதமளித்தருளிய தலம்.

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

௪. ¶ திருத்தலையூர்.

(உருத்திரபசுபதிநாயனார்) பிராம்மணகுலத்தில் புரட்டாசிமாதச் சுவாதிநாளிற் றிருவவதாரஞ்செய்தருளித் தினந்தோறுந் தவறாதுநீரினின்றும்,உருத்திரஜெபஞ்செய்துவந்து, புரட்டாசிமாத அசுவினிநாளில் முத்திபெற்ற தலம்.

௫. ¶ திருக்கொடும்பாளூர்.

(இடங்கழிநாயனார்) மன்னவர்மரபில் ஆவணிமாதச் சுவாதியிற் றிருவவதாரஞ் செய்தருளி, சிவநேசத்தோடு அரசு செலுத்திவருங் காலத்தில், அவரது நெற்பண்டாரத்தில் நெல்லைத் திருடிய ஒருவரை, அவர் முன்கொணர, அவர் விசாரித்தபொழுது, சிவனடியார்க் கருத்துவதற்காகத் திருடினேனென்று நெல்லைக் கவர்ந்தவர் கூறக்கேட்டு, எம்பொருள்க ளனைத்தினுக்கும் சிவனடியார்களே உடையோராதலின், "இச்சையானவளாயிலெடுத்துக்கொள்ளுக" வென்று, நெற்பண்டாரத்தைத் திறந்துவிட்டுச் சிவநேசராய்வாழ்ந்து ஐப்பசிமாதக் கிருத்திகையிற் றிருக்கயிலை சேர்ந்தருளிய தலம்.

௬. ¶ திருக்காம்பீலி.

(நேசநாயனார்) சாலியர்குலத்தில் ஆனிமாதக் கிருத்திகைநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, சிவனடியாருக்கு வஸ்திரங் கோவணமுதலியன கொடுத்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதிவந்து, பங்குனிமாத ரோகிணிநாளில் முத்தியடைந்தருளிய தலம்.

௭. ¶ திருமங்கலநகர்.

(ஆனாயநாயனார்) ஆயர்குலத்தில் ஐப்பசிமாதச் சுவாதிநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, ஆனிரைக்காப்பவராய், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைவேய்ங்குழலில்வாசித்துச்சிவத்தொண்டுசெய்துவருபவர், ஓர்கார் காலத்தில் புட்பித்திருந்த சரக்கொன்றை மரத்தைப் பார்த்துச் சிவபிரானைப்போலப்பாவித்து, வேய்ங்குழலால், கல்லுமுருக இசை பாடியதைக்கேட்டுச் சிவபெருமான் கார்த்திகைமாத அத்தநாளில் அவ்விசையோடுந் திருக்கயிலையிற் றமது சந்நிதியில் வைத்தருளிய தலம்.

௮. ¶ திருப்பெருமிழலையூர்.

(பெருமிழலைக்குறும்பநாயனார்) மாசிமாதச் சுவாதியிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவநேசராய்ச் சிவயோகஞ் செய்திருந்தவர், தம் யோகக் காட்சியாற் சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பரமசிவ யோகியென்றுணர்ந்து அவருக்குத் தொண்டு பூண்டொழுகு நாளில்,

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு வெள்ளையானை வருந்திறத்தை யோக த்தாலறிந்து, அதற்கு முந்திச்செல்ல நினைத்து, ஆடியாதச் சித்தி னாநாளில் யோகமுயற்சியாற் பிரமரந்திரந் திறந்து திருக்கயிலாயமடைந்தருளிய தலம்.

௬. ¶ திருவரிஞ்சையூர்.

(சத்திநாயனார்,) வேளாள மரபில் மாசிமாத இரேவதிநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிச் சிவபெருமானுடைய திருவடிகளை மறவாதநெறியைக்கைக்கொண்டு சிவனையும், சிவனடியார்களையுமிகழ்ந்துபேசுமவர்களுடைய நாவைத் தண்டாயுதத்தா லிடுக்கிக் கத்தியினலரிதலாகிய திருத்தொண்டைச்செய்துவந்து, ஐப்பசிமாதப் பூசநாளிற் றிருக்கயிலாயமடைந்தருளிய தலம்.

சோழநாடு முற்றிற்று.

---

ஆகச் சோழநாடு, பதிகம்பெற்ற தலங்கள் ௱௯௰. சுப்பிரமணியர்தலம்-உ. புராதனத்தலம்-௰க. நாயன்மார் திருவவதாரஞ்செய்தருளிய தலம்-௬. ஆகத் தலங்கள் உ௱௰உ அறுபத்துமூன்று நாயன்மார்களில் அந்நாட்டில் முத்தியடைந்தவர்கள் நாற்பத்து மூவர்.

---

உ

சிவசுப்பிரமணியர்துணை.

# ஈழநாடு.

---

க. * திருக்கோணமலை.—(திருக்கணமலை)

(திருக்கோணேச்சுரர், மாதுமையாளம்மை, மகாசுனைதீர்த்தம்.)

சகத்திரிஷி, போதாயனரிஷி முதலியோரும், தேவர்களும், அசுரர்களும், பூசித்த தலம்.

விராதனென்னும் அரசன் பூசித்துத் தேவேந்திரனாற் றனக்குற்ற சாபத்தை நீக்கப்பெற்ற தலம். வரைமீது எழுந்தருளியிருக்கின்றதலம், இது கயிலாயத்தின் கொடுமுடிகளிலொன்று. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்குத் தென்கிழக்கு உ௱-மைலில்,

உ. * திருக்கேதீச்சுரம்.

(கேதீச்சுரர், கௌரியம்பிகையம்மை, குளிர் பூஞ்சோலைதீர்த்தம்.)

பிருகுரிஷி, பருப்பதரிஷி, முதலியோர் பூசித்த தலம். மாலிய

---

¶ இக்குறி இட்ட தலம் பாடல் பெறவில்லை.

வான் எனும் அசுரன் பூசித்து நற்கதியடைந்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

௩. ¶ கதிர்காமம்.—(முருகப்பிரானது குன்றுதோருடல்களிலொன்று.)

சிவ சுப்பிரமணியக்கடவுள், பிரணவசொரூபமாக இருந்து, அநேக திருவிளையாடல்கள் நடத்திக்கொண் டெழுந்தருளி யிருக்குந் தலம். தேவர்கள் பூசித்துவருகின்ற தலம்.

சற்புத்திரன் என்னும் ஓர் வணிகன் இத்தலத்துக்குச் செல்லும்போது, வழியிலோர் யானைவந்து அவனைப்பிடிக்க, அவன் "கதிர்காமவேலோனே"! என்றுகூவ, ஓர் வேடர்போல வேலோடும் வந்து அவ்வானையைத் துணித்து, வணிகனை விடுதலை செய்தருளிய தலம்.

அயிராவசு வெனுமொருகாந்தருவன், தேவகுருவின் வார்த்தைக்கடந்ததனால் யானையாகும்படி சாபம்பெற்று, இத்தல முற்றுப் பூசித்துத் தேவ வுருப்பெற்றபோது, அவனது வேண்டுகோளுக்காக ஒப்புக்கொண்டபடி, இக்காலத்தும் உற்சவகாலங்களில், ஒருயானைவாகனம் எழுந்தருளச்செய்யுந்தலம். இதன் மகிமையை யுரைக்கில் விரியுமாதலின் விடுத்தனம்.

ஈழநாடு முற்றிற்று.

---

இதில் திருப்பதிகம் பெற்றதலங்கள் - ௨. சுப்பிரமணியர்தலம் - ௧. ஆக - ௩.

இந்நாடு, தென்கீழ் சமுத்திரத்தின் மத்தியிலிருக்கிறது. சமயாசாரியார்களு மிக்கரையினின்றே தரிசித்ததாக விளங்குகின்றது.

---

௨

சிவசுப்பிரமணியர் துணை.

# பாண்டி நாடு.

---

௧. * திருவாலவாய்.—(மதுரை)

(சொக்கநாதசுவாமி, மீனாக்ஷியம்மை, வையைநதி, எழுகடல், புறத்தொட்டி, பொற்றாமரை முதலியதீர்த்தங்கள், கடம்பவிருக்ஷம்.)

சமட்டி விச்சாபுரம், நான்மாடக்கூடல், கடம்பவனம், துவாதசாந்தஸ்தலம், எனப்பலபெயருளவாம்.

இவருக்கே கற்பூரசுந்தரர், கலியாணசுந்தரர், மீனாட்சிசுந்தரர், சண்பகச்சுந்தரர், கடம்பவனச்சுந்தரர், பழிக்கஞ்சியசுந்தரர், ஆலவா

---

¶ இக்குறி இட்டதலம் பாடல் பெறவில்லை.

ய்ச்சுந்தரர், சோமசுந்தரர், சுந்தரேச்சுரர் எனப்பலநாமங்களுளவாம். பாண்டிநாட்டில் இராசதானியாயிருந்து அநேகந்திருநாமம்பெற்ற தலம். ௬௪-திருவிளையாடல்கள் நடந்த தலம்.

அவையாவன :—

௧.—தேவேந்திரனைப்பற்றியபழி தவிர்த்தருளியது.

௨.—வெள்ளையானைக்குச் சாபந்தீர்த்தருளியது.

௩.—கடம்பவனத்தை (மதுரை) நகரமாக்கியருளியது.

௪.—உமாதேவியாரே பாண்டியற்குக் குமாரத்தியாகிய தடாதகைப் பிராட்டியாராக அவதரித்தருளியது.

௫.—அவரை சோமசுந்தரர் பாண்டியராகவந்து மணம்புரிந்து நாடாண்டருளியது.

௬.—பதஞ்சலி வியாக்கிரபாதரிஷிகளுக்காக, வெள்ளியம்பலத்திற்றிருநடனங்காண்பித்தருளியது.

௭.—தடாதகைப்பிராட்டியார்பொருட்டுக் குண்டோதரனுக்கு அன்னமிட்டருளியது.

௮.—அக்குண்டோதரனுக்கு அன்னக்குழியும் வைகையுமழைத்தருத்தியருளியது.

௯.—தடாதகைப்பிராட்டியாரின் தாயாராகிய காஞ்சனமாலையம்மையாட, எழுகடலையும் அழைத்தருளியது.

௰.—அக்காஞ்சனமாலையின்கணவராகிய மலையத்துவசபாண்டியரிறந்து சுவர்க்கத்திருந்தவரை, வரவழைத்தருளியது.

௰௧.—தடாதகைப்பிராட்டியாரிடத்து உக்கிரகுமாரனைத் திருவவதாரஞ்செய்வித்தருளியது.

௰௨.—அவ்வுக்கிர குமாரபாண்டியனுக்குப் பின்வரும்பகைகளைவெல்ல, வேலும், வளையும், செண்டுங்கொடுத்தருளியது.

௰௩.—அவ்வுக்கிர குமாரனுல் இந்நகரமீது வந்த கடல் சுவறவேல் விடுக்கச்செய்தருளியது.

௰௪.—அவ்வுக்கிரகுமாரனோடெதிர்ந்த தேவேந்திரன் முடிசிதைய வளை யெறியும்படிசெய்தருளியது.

௰௫.—வைப்பெடுக்கச் சென்ற அவ்வுக்கிரகுமாரனுக்கு, வணங்கிவராத மேருவைச் செண்டாலடிக்கச்செய்தருளியது.

௰௬.—வேதத்துக்குப் பொருளறியாதுமயங்கும், வேதியருக்குப் பொருளருளிச் செய்தது.

௰௭.—அரசகுமாரன் மகுடத்துக்கு மாணிக்கம் விற்றருளியது.

௰௮.—வருணன் இந்நகரின்மீதேவிய கடலை வற்றச்செய்தருளியது.

௰௯.—அவ்வருணனேவிய மழையைத்தடுத்து, இந்நகரத்தை (நான்மாடக்கூடல்) ஆக்கியருளியது.

௨௰.—எல்லாம்வல்லசித்தராயெழுந்தருளிச்சித்துவிளையாடியருளியது.

௨௧.—அதைப் பரிட்சித்த அரசனுக்காகக் கல்லானைக்குக் கரும்பருத்தியருளியது.

௨௨.—சமணர்களேவ இந்நகரழிக்கவந்தயானையை யெய்தருளியது.

௨௩.—கௌரியம்மை யெனும் பார்ப்பனமாதுக்கிரங்கி விருத்தராயும், குமாரராயும், பாலராயுமிருந்து அனுக்கிரகஞ்செய்தருளியது.

௨௪.—நிருத்த வருத்தமுணர்ந்த பாண்டியன் வேண்டக் கால் மாறியாடியருளியது.

௨௫.—கொலைக் குற்றஞ்சுமத்தப்பட்டவேடனது பழிக்கஞ்சி, வணிகன் மணத்திற் சாட்சி பகர்ந்தருளியது.

௨௬.—தாயைப்புணர்ந்து, தந்தையைக் கொன்ற வேதியன், மாபாதகந் தீர்த்தருளியது.

௨௭.—வாளாசிரியன் மனைவியை வலுமைசெய்த மாணுக்கனது அங்கங்களை வெட்டியருளியது.

௨௮.—சமணரால் நகரழிக்க வேவியநாகத்தை யெய்தருளியது.

௨௯.—மற்றுமவர்களேவிய மாயைப்பசுவையும் வதைத்தருளியது.

௩௰.—சவுந்தர சாமந்தனெனுஞ் சேனுதிபதியின்பொருட்டுப் போர்ச்சேவகராய் மெய்க்காட்டுத் தந்தருளியது.

௩௧.—பஞ்சம்வந்தகாலத்துப் பாண்டியனை உலவாக்கிழிகொடுத்து ரட்சித்தருளியது.

௩௨.—தாருகாவனத்துஇருடிபத்தினிகள், வணிகமாதராய்வர, அவர்களுக்கு வளையல் விற்றருளியது.

௩௩.—இயக்கஸ்திரிகளுக்கு அட்டமாசித்தி யுபதேசித்தருளியது.

௩௪.—சோழராஜன்பொருட்டுக் கதவுதிறந்ததினுலழிந்த மீனக்குறிக்குப்பதில், இடபக்குறிவைத்தருளியது.

௩௫.—பாண்டியன் படைக்குதவியாகத் தண்ணீர்ப்பந்தல் வைத்தருளியது.

௩௬—பொன்னனையாளென்னும் விலைமாதின்பொருட்டு, ரசவாதஞ்செய்தருளியது.

௩எ.—இந்நகரமீதுவந்தசோழராசனைமடுவிலாழ்த்தியருளியது.

௩அ.—அடியவனுகிய ஒருவேளாளன்பொருட்டு, உலவாதகோட்டையருளியது.

௩கூ.—தாயத்தார்கள் வழக்கிற் சிக்கிய மருமகனுக்காக மாமனுகவந்து அவ்வழக்குத் தீர்த்தருளியது.

௪௰.—வரகுணதேவருக்காகச் சிவலோகத்தை இத்தலத்திற்காட்டியருளியது.

௪க.—பாணபத்திரனுகிய இசைவல்லோன்பகையைத் துறக்கும்பொருட்டு, விறகுசுமந்தருளியது.

௪உ.—அப்பாணபத்திரனுக்காகச் சேரமான்பெருமாணுயனுருக்குத் திருமுகங்கொடுத்தருளியது.

௪௩.—அப்பாணபத்திரன், மழையினின்றுபாடப் பலகைகொடுத்தருளியது.

௪௪.—அப்பாணபத்திரன்மனைவி, ஈழதேசத்துவிறலியை,இசைவாதுவெல்லச்செய்தருளியது.

௪ரு.—தாயிழந்து தவித்த பன்றிகுட்டிகளுக்குப் பால்கொடுத்தருளியது.

௪கூ.—அப்பன்றிக்குட்டிகளை, மானிடராக்கிப் பாண்டியனுக்கு மந்திரிகளாக்கியருளியது.

௪எ.—கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்தருளியது.

௪அ.—நாரைக்கு முத்திகொடுத்தருளியது.

௪கூ.—பிரளயத்தில்மறைந்த இந்நகரஎல்லையை அரவகங்கணத்தாற்காட்டித் திருவாலவாய்ஆகச் செய்தருளியது.

ரு௰.—பாண்டியன் படைத்துணைவராய்ச்சென்று "சுந்தரம்" என்று பெயர்தீட்டி அம்பெய்தருளியது.

ருக.—நற்கீரதேவர், கபிலதேவர், கல்லாடனுர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், முதலிய பொய்யடிமையில்லாதபுலவர்களுக்கு அளவுகோலாகிய சங்கப்பலகைதந்தருளியது. அவர்களுள் நற்கீரதேவர், "கயிலைபாதி காளத்திபாதியந்தாதி", "ஈங்கோய்மலைஎழுபது", "திருவலஞ்சுழி மும்மணிக்கோவை", "திருவெழுகூற்றிருக்கை", "பெருந்தேவபாணி", "கோபப்பிரசாதம்", "காரெட்டு", "போற்றித்திருக்கலிவெண்பா", "திருமுருகாற்றுப்படை" "கண்ணப்பதேவர்திருமறம்", முதலிய பிரபந்தங்களையும்; கல்லாடனுர், கண்ணப்பதேவர், "திருமறமென்னும்", பிரபந்தத்தையும்; கபிலதேவர், மூத்

தநாயனர் "திருவிரட்டைமணிமாலை", "சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை", "திருவந்தாதி"யெனும் பிரபந்தங்களையும்; பரணதேவர், "சிவபெருமான் றிருவந்தாதியும்"; இளம்பெருமானடிகள், "சிவபெருமான்றிருமும்மணிக்கோவையும்"; அதிராவடிகள், "மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவையும்"; திருவாய்மலர்ந்தருளி, மெய்யன்போடு சிவபணிவிடைசெய்து, சிவானந்தப்பெரும் பேறுபெற்றனர்.

ருஉ.—பாண்டியன், ஆசங்கை நீங்கக் கவிபாடித் தருமியெனும், ஆதிசைவனுக்குக் கிழியறுத்துக்கொடுத்தருளியது.

ருங.—அக்கவிக்கு குற்றங்கூறிய நக்கீரனைப் பொற்றாமரைக்குளத்திலாழ்த்தி,பின் கரையேற்றியருளியது.

ருச.—அந்நக்கீரனுக்கு அகஸ்தியர்பால் இலக்கணமுபதேசித் தருளியது.

ருரு. சங்கத்தார்கலகத்தைஊமைப்பிள்ளையாற்றீர்த்தருளியது

ருசு.—தமிழை யவமதித்த பாண்டியனோடு பிணங்கிய இடைக்காடன் பிணக்குத் தீர்த்தருளியது.

ருஎ.—மீன்வலைச்சியாகவந்த மீனலோசனையை வலைவீசி மணந் தருளியது.

ருஅ.—மாணிக்கவாசகசுவாமிகளாகிய வாதவூரடிகள், அரசனுத்தாரப்படி குதிரைவாங்கக் கொண்டுபோன பொருளையெல்லாம் சிவபணிவிடைக்குதவும்படிசெய்து, அவருக்கு, ஞானோபதேசஞ்செய்தருளியது.

ருகூ.—அப்பொருளை யருவிடும்பொருட்டு, அரசன் வாதவூரடிகளைச்செய்த வன்செய்கைக்கிரங்கி வனநரிகளை வாம்பரிகளாக்கித் தந்தருளியது.

சூ0.—அப்பரிகளையேமீட்டும் நரிகளாகச்செய்தருளியது.

சூக.—பின்னும் வாதவூரடிகளை அரசன்வருத்தியதற்கிரங்கி,வைகைநதியைப்பெருகச்செய்தும், நகரத்தார் கடையடைக்கத்தொடங்க, வந்தியெனும் அடியவள்பொருட்டுக்கூலியாளராய்ச் சென்று, பிட்டுண்டு மண்சுமந்துங் கரையடைக்காதிருந்மையால், அரசனடித்த பிரம்படியைப்பெற்று, அவ்வடியை அகிலசராசரங்களையும் பெறுவித்து, தாமேயெல்லாவற்றுள்ளும் அந்தரியாமியென்றறிவித்தருளியது.

சூஉ.—திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகளும் திருமறைக்காட்டி லெழுந்தருளியிருக்கும்

கள

பொழுது அமண்சமையமிகச் சிவசமயந் தாழ்ந்ததைக் குறித்துக் கூன் பாண்டியனதுமனைவி மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறையாரும் அறிவிப்ப, அவ்வமண் களையும்பொருட்டு இங்கு எழுந்தருளிய பிள்ளையாரை, அரசுகள்தடுப்பவும் கேளாதுவந்து இத்தலத்தோர் மடத்திலெழுந்தருளியிருப்ப, அம்மடத்தி லமணர்தீக்கொளுவ அத்தீயைப் "பையச்சென்று பாண்டியனுக்காக" என்று பதிகமோத அது அரசனைச் சுடுசுரமாய்பற்றிய அளவில், அதனைப்பிள்ளையார் திருநீற்றுப்பதிகமோதித் தீர்த்தருளியது.

௩௩.—அச்சமணர் பிள்ளையாரோடு வாதுபுரிந்து நெருப்பில் இட்ட ஏடுகரியவும், பிள்ளையாரிட்டவேடு பச்சையாய் வேவாதிருப்பவும், பின் அமணர்கள் ஆற்றில் ஏடெதிர் செலுத்தும் வாதத்தை மேற்கொள்ள, அதனையும், "வாழ்கஅந்தணர்" என்னும் பதிகத்தால் பிள்ளையாரேவென்றருளியும் இவ்வாறு தோற்ற அச்சமணர்களையவர்கள் ஒப்புதலின்படி கழுவேற்றியருளியது.

௩௪.—திருஞானசம்பந்த சுவாமிகளால் திருப்புறம்பியத்தில் வன்னியுங் கிணறுமிலிங்கமுஞ் சாட்சியாக மணஞ்செய்யப்பெற்ற வணிகப்பெண்ணுக்கும், அவள்சககளத்திக்கும்வந்த பூசலில் அவ்வணிகப்பெண்பொருட்டு, அக்கரிகள்மூன்று, மிங்குவரவழைத்தருளியது.

இவைமுதலியனவும், பிறவுமாகிய அநேகந்திருவிளையாடல்கள் செய்தருளிய தலம். துன்முகன்முதலாகிய அனேகவேடர் முத்தி பெற்றருளிய தலம்.

(மூர்த்திநாயனர்) வைசியகுலத்தில் தைமாத அசுவினிநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிச் சிவபெருமானுக்குத் தினந்தோறுஞ் சந்தனமுறைத்துக் கொடுத்தலாகியபணிவிடை செய்துவருங்கால், பாண்டியனைச் சயித்து அவரசைக் கைக்கொண்ட கருனடமன்னவன் ஆருகதமதத்தோனய், நாயனர் பணிமுட்டும்படி தீங்குசெய்ய, அவர் இரவில் தன்கையைச் சந்தனச்சாணையி லென்புதேய உரைத்தபொழுது சிவபெருமான் உத்தாரப்படி யவ்வூறுநீங்கியது. அற்றை நாளிரவே அம்மன்னனிறப்ப, நாயனர் பட்டத்தியானையால் அரசாகூஷிபெற்றும் மணிமுடி தாங்காது விபூதி, ருத்திராட்சம், சடாமுடி, ஆகிய சிவசின்னங்களாற் சிவநெறிவழாது அந்நாட்டை யாண்டமை

யால் "மும்மையாலுலகாண்டமூர்த்தி" யெனப்பேர்படைத்து ஆடிமாதக் கிருத்திகைநாளிற் சிவபதமடைந்த தலம்.

(குலச்சிறைநாயனர்) மணமேற்குடியில் கார்த்திகைமாத மூலநாளிற் றிருவவதாரஞ்செய்தருளிப் பாண்டியராசனிடத்து முதன்மந்திரியாய்ச் சிவானுபவச்செல்வராய், இத்தலத்தில் மூடிய சமண்காட்டைத் திருஞானசம்பந்தசுவாமிகளது அநுக்கிரகமாகிய வாளாற்கடிந்து, சைவப் பயிரேற்றிச் சுந்தரமூர்த்திசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாலுந் திருப்பதிகங்களிற் புகழப்பெற்று, ஐப்பசிமாதப் பரணிநாளில் முத்திபெற்ற தலம்.

(மங்கையர்க்கரசியார்) சோழராசனதுபுதல்வியராகத் தைமாத அநுஷநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, நின்றசீர் நெடுமாறநாயனருக்கு மனைவியராய்த் திருஞானசம்பந்தசுவாமிகளது திருவருள்பெற்று, அவரது பதிகத்திலும் புகழப்பெற்றுச் சைவசமயத்தை, வளர்த்துச் சித்திரைமாத உரோகணிநாளிற் சிவபதமடைந்த தலம்.

(நின்றசீர் நெடுமாறநாயனர்) திருநெல்வேலியில் பங்குனிமாத அசுவினிநாளில் மன்னவர்மரபிற் றிருவவதாரஞ்செய்தருளிக் கூன்பாண்டியனென்னுங் காரணப்பேருடன், மதுரையிலரசாட்சிசெய்துவரும்பொழுது, உடற்கோட்டம்போல மனக்கோட்டமுற்று, ஆருகதமதத்தராய் ஒழுகுகையில் சைவசிகாமணிகளாகியமனைவியாரும், மந்திரியாரும், திருஞானசம்பந்த சுவாமிகளது திருக்கரந்தீண்டித் திருநீறுபூசி யுபதேசிக்கும்வண்ணந் துணைசெய்யப்பெற்று, அவ்விருகோட்டமுநீங்கி, நெடுமாறரெனும் பேர்சூடி, வட புலத்து மன்னனைத் திருநெல்வேலியில் வென்று வாகைபுனைந்து, அரசாட்சிசெய்துவந்து ஐப்பசிமாதப் பரணிநாளில் முத்தியடைந்த தலம்.

திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௧௧.

—இதற்கு வடக்கு - ௧ - மைலில்,

௨. * திருப்புத்தூர்.

(திருப்புத்தூரீச்சுரர், சிவகாமித்தாயம்மை, அற்புதகங்கைதீர்த்தம்)

உமாதேவியார், தேவேந்திரன், தேவகன்னிகைமுதலியோர்பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்குத் தென்கிழக்கு ௪௧-மைலில்,

௩. * திருக்கொடுங்குன்றம்.—(பிரான்மலை)

(கொடுங்குன்றேச்சுரர், குயிலமுதநாயகியம்மை, சிவகங்கைத்தீர்த்தம், பேர்மதிக்காமல் நிற்கும் விருட்சம்.)

மங்கைநாயகர் மணவாளக்கோலங்கொண்ட தலம்.

மகோதரரிஷி, நாகராசன், தேவேந்திரன் முதலியோர் பூசித்த

தலம். கார்த்திகைநட்சத்திரத்தில் பருவத வுச்சியில் தீபதரிசனம் திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு தென்கிழக்கு உ௰-மைலில்,

ச. * திருவேடகம்.

(ஏடகநாதேச்சுரர், மாதேவியம்பாளம்மை, வைகைநதிதீர்த்தம்.)

மகாவிஷ்ணு, கருடன், நாகராசன், நின்றசீர் நெடுமாறநாயனரிவர்கள், முறையே நான்கு யுகங்களிலும், பூசித்த தலம்.

பாசுபதம் பெறும்பொருட்டுப் பாண்டவரில், விஜயன் செய்ததவத்திற்கிரங்கிச் சிவபெருமான், வேடவடிவாய் வெளிப்பட்டபொழுது, மல்லுயுத்தத்திலடியுண்ட விற்றழும்பைத் திருமேனியிலடையாளமாகக் கொண்டருளிய தலம்.

சமணர்கள் வாதின்பொருட்டுத் திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள், வைகையாற்றிலிட்ட வேடானது, எதிரேற, அதனைக் குலச்சிறைநாயனர் பரிமேற்கொண்டு தொடர்ந்தும், அஃது இங்கு நீர்மடுவிற்புகுந்து தங்கியபொழுது, அதனையகப்படுத்தியகாரணத்தால், இத்தலத்திற்குத் திருவேடகமெனப் பேராயிற்று. திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க.

—இதற்கு வடகிழக்கு ச௰-மைலில்,

ரு. * திருப்பரங்கிரி.—(திருப்பரங்குன்றம், முருகப்பிரானது படைவீடுகளிலுமொன்று.)

(பரங்குன்றேச்சுரர், ஆவுடைநாயகியம்மை, பிரமகூவம், சத்தியகூவம், சரவணதீர்த்தம்.)

சிபிராசன்பூதானஞ்செய்யும்பொழுது, சங்கற்பித்தவர்களிலொருவரில்லா தொழிய, அரசன் வருத்தமுறுவதுணர்ந்த சிவபெருமான் ஓர் வேதியராய் வந்து தானமேற்றருளியதலம். முருகப்பிரான் பராசரர் புத்திரர்களை காத்தருளியதலம். முருகப்பிரான் சூராதியர்களை வென்று, தேவஉலகங்குடியேற்றியபொழுது, தேவேந்திரன்முருகக்கடவுளுக்குத்தெய்வயானையம்மையை விவாகஞ்செய்துகொடுத்ததலம். அரிச்சந்திரன் பூசித்துப்பொய்யாவிரதியாய்ப் புகழ் படைத்ததலம்.

முருகாவென்று மொழிந்துவரும் ஒருபெண்ணின் கணவன் அதையொழித்துத் தன் பெயர் கூறக் கற்பித்தும், அவள் கேளாமைக்காக அவள் கரத்தைச்சேதிப்ப, அக்கரம் முருகப்பிரானருளால்வளரப்பெற்ற தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

—இதற்கு வடமேற்கு ௰க-மைலில்,

௬. * திருவாப்பனூர்.—(திருவாப்புடையார்கோயில்.)

(ஆப்பனூர்க் காரணர், அம்பிகையம்மை, இடபதீர்த்தம்.)

திருநந்திதேவர், குபேரன், அரிச்சந்திரன், பாட்களன், சித்திரசேனன் முதலியவர்கள் பூசித்த தலம்.

ஓர்காலத்தில் வேட்டைக்குச்சென்ற, பாண்டியராசன் சிவதரிசனஞ் செய்யாது, அன்னமருந்தா திருந்ததற்காகக் குதிரைகட்டிய ஆப்பினின்றும் பிரசன்னமாய்த் தரிசனங்கொடுத்தருளியதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்குத் தென்மேற்கு ௬-மைலில்,

௭. * திருப்பூவணம்.

(திருப்பூவணநாதேச்சுரர், மின்னும்பிகையம்மை, வைகைநதிதீர்த்தம்.)

பப்புருவ மகாரிஷி பூசித்ததலம்.

பொன்னனையாளென்னும் உருத்திரகணிகையாரொருவர், சுவாமியின், திருவுருவத்தைச் சமைக்கக் கருதிப் பொருள் சேர்ப்புழி, வரும்பொன், அடியவர்பூசைக்கன்றி யெஞ்சாமையா லுடன் மெலிந்துவருந்துவதை, யெம்பிரான் றிருவுளங்கொண்டு, சித்தராயெழுந்தருளி, ரசவாதஞ்செய்து கொடுப்ப, பொன்னூற் றிருவுருவுசமைத்த அப்பொன்னனையார், சிவபிரானது, அழகிய திருவுருவத்தைக்கண்டு "அச்சோ! என்னழகிய பிரானே" என்று வலது கபோலத்தைக்கிள்ளி முத்தமிட அக்குறியைச் சிவபெருமான் இக்காலத்துங்காட்டும்படி அடையாளமாக வணிந்தருளிய தலம். அதனால் அம்மூகூர்த்தத்துக்கு "அச்சோ! அழகு" என்று திருநாமமுண்டு.

திருநாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருக்கயிலாயத்தின் றிருக்கோலங்காட்டியருளிய தலம்.

திருஞானசம்பந்தசுவாமிகள் திருப்பதிகத்திற் சேர்க்கும்படியானபெருவாழ்வைப்பெற்றசேரன், சோழன், பாண்டியனெனு மூவரசர்கள், தொழுதருள்பெற்ற தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருக்கோலங் காட்டியருளியதலம்.

கருவூர்த்தேவரால் "திருவிசைப்பா" பாடியருளப்பெற்ற தலம்.

சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ச.

—இதற்குத் தென்மேற்கு உ௰-மைலில்,

௮. * திருக்கானப்பேர்.—(காளையார்கோவில்.)

(கானக்காளையீச்சுரர், மகமாயியம்மை, பொன்பதுமை அரசனுக்கும்படியநுக்கிரகித்த இடபதீர்த்தம், யானைமடு, புட்பவனதீர்த்தம்.)

கௌண்டினியமகாரிஷி, நாகராஜன், தேவர்கள், முதலியோர்பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காளைவடிவத்தோடு தோன்றிக் கையிற்பொற்செண்டும், முடியிற்சூழியமுமுடையவராய்,

நாமிருப்பது கானப்பேரெனச்சொல்லியழைத்துவந்து தரிசனங்கட்டளையிட்டருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகள், திருஞானசம்பந்தமூர்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-௨.

—இதற்கு மேற்கு ௨௫-மைலில்,

௬௰. * திருவாடானை.

(ஆதிரத்நாயகேச்சுரர், ஆடானைநாதர், அம்பாயிரவல்லியம்மை, இரத்நதீர்த்தம்.)

வசுவெனுமுனிவரும், நாககன்னிகையும், சப்தகன்னியர்களும், சுக்கிரனும், ஆடும் பூசித்த தலம். திருஞான சம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧.

—இதற்கு வடக்கு ௨௭-மைலில்,

௱. * திருப்புனவாயில்.

(திருப்புன வாயிலீச்சுரர், பழம்பதிநாதர், பரங்கருணைநாயகியம்மை, கங்காதீர்த்தம்.)

சதுர் வேதங்களும், தேவர்களும், பூசித்து அநுக்கிரகம்பெற்றதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - ௨.

—இதற்குத் தென்கிழக்கு ௬௰-மைலில்,

௱௧. * திருவிராமீச்சுரம் —(இராமேஸ்வரம்.)

(இராமநாதேச்சுரர், பருப்பதவர்த்தனியம்மை, அகஸ்தியதீர்த்தம், அமுரதீர்த்தம், தனுஷ்கோடிதீர்த்த முதலிய அநேகதீர்த்தங்கள்.)

அகத்தியர், அக்கினி, அசுவத்தாம, அனுமன், இராமர், இலட்சுமணர், இலட்சுமி, கவிசம்பு, வானரர்கள், காசிபரிஷி, சரசுவதி, சங்கரபாண்டியன், தருமகுத்தன், முதலியோர் பூசித்து அநுக்கிரகம் பெற்றதலம்.

தசரதச்சக்கரவர்த்தியின் திருமகனாகிய இராமமூர்த்தியானவர், இலங்கையிற்சென்று இராவணாதி இராக்ஷதர்களைச் சம்ஹாரஞ்செய்து, சீதையை மீட்டுத் திரும்பும்பொழுது, ராவண, கும்பகர்ணாதிய, பிரமபீசமாயிருந்தமையால், அவர்களை வதைத்த பிரமஹத்திசூழ ஆங்குவந்தரிஷிகளா லித்தலமேன்மையையுணர்ந்து, இங்குச் சிவலிங்கந்தாபித்துப் பூசிக்கக் கருதி, வடகயிலையினின்றுஞ் சிவலிங்கங்கொண்டுவரும்படி யனுமானையேவ, அனுமன்வருமுன்னர் முகூர்த்தகாலஞ் சமீபித்தமைநோக்கிச் சீதையம்மையால் மணலாற்செய்யப்பட்ட இலிங்கத்தைத் தாபித்து, முனிவரனுமதிகொண்டுபூசிப்பச் சிவபிரான் பிரசன்னராய்க் கொலைப்பழியைப்போக்கியதுமன்றி, இத்தலங் காணப் பெற்றோருக்கு வேண்டியவரங்களுந் தருவோமென்று அரு

ஞையுஞ்செய்து மறைந்தருளப் பின்னர்க் கயிலையினின்று மிலிங்கங் கொணர்ந்த அனுமான், இதனை நோக்கித் தன்னாற் கொணரப்பட்ட இலிங்கந் தாபிக்கப் பெறாமற் போனதை நினைத்துக்கவல, அதனை வேறிடத்துவைத்துப் பூசிப்பதாக இராமமூர்த்திசொல்லியுங் கேளாது, முன்னர்த்தாபித்த இராமநாதமூர்த்தியை அகழ்ந்தெறிந்து தான் கொணர்ந்த இலிங்கத்தைவைத்துவிடலாமென்னுந்துணிவால், இராமநாதனை வாலாற்சுற்றிவலிந்திழுக்க, அவ்வாலறுப்புண்டு அதன்விசையால் அதிதூரஞ்சென்றுவிழுந்து, மூர்ச்சையையடைந்தமையைக் கண்ட இராமரும், சீதையும் பெரிதும்வருந்திச் சிவத்தியானத்தால் அனுமானைப் பிழைப்பித்து, அவன்கொணர்ந்த இலிங்கத்தை இராமநாதருக்கு அயலாக வடபாகத்திற் றாபித்துப் பூசித்துப் பேறுபெற்றதலம். இக்காரணத்தாலே இத்தலத்திற்கு இராமீச்சுரமென்றும் தலநாயகருக்கு இராமநாதரென்றும் பெர் வழங்கப்படுகிறது. அனுமார் வாலின் மூன்றுசுற்றுரேகைகளும் இக்காலத்தும் இராமநாதர் மீதுகாணலாம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-௩.

(சேதுமாதவர்) மதுரையிலிருந்து தீர்த்தயாத்திரைக்கு வந்த குணநிதியென்னும் பாண்டியன் முன்செய்தவத்தாற், றிருப்பாற்கடலினின்றும், மகாவிஷ்ணுவோடு ஊடிப்பிரிந்த இலக்குமிதேவியார், எட்டுப் பருவமுள்ள பெண்மகளாக வந்து, அவனிடத்துவளர்ந்து கொண்டிருப்புழி, விஷ்ணுமூர்த்தியானவர்சிவவேடந்தரித்த ஓர்மறையவராகவந்து பூங்காவனத்தில் வலிதிற் கைப்பற்ற, இலக்குமிதேவியாரிட்ட ஓலத்தை அரசன்கேட்டு, சைனியங்களுடன்சென்று அவ்வேதியனைப் பற்றி, இராமநாதராலயத்திற் கொடுபோய்க் கட்டியடித்து, அதற்குப் புறத்தே யொருமண்டபத்தில் கால்விலங்குபூட்டிச் சிறைப்படுத்திய அன்றிரவு, அவ்விருவரும் அரசனது கனவின்கண்ணே சேவைசாதித்தருள, அரசன், நனவிலுமதனையுணர்ந்து தான் செய்த அபராதத்தை மன்னிக்கும்படி பிரார்த்தித்தபடி, சேதுமாதவராகி எழுந்தருளிச் சித்தி முத்திகளை யுதவுந் தலம்.

—இதற்குவடமேற்கு ௬௰-மைலில்,

௰௨. * திருச்சுழியல்.

(திருமேனிநாதேச்சுரர், துணைமாலையம்மை, நற்றுணைதீர்த்தம், பிரளயதீர்த்தம்.)

சதாநந்தரிஷி, சௌனகரிஷி, தேவர்கள், அசுரர்கள், முதலியோர் பூசித்ததலம். சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருவுருவதரிசனைகட்டளையிட்டருளியதலம். பார்ப்பதிபூசித்துத் திருமணஞ்செய்ய அருள்

பெற்ற தலம், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. —இதற்கு மேற்கு ௩-மைலில்,

௰௩. * திருநெல்வேலி.

(வேணுவனேச்சுரர், நெல்லுக்குவேலிகட்டும்நெல்வேலிநாதர், சாலிவாடீச்சுரர், காந்திமதியம்மை, வடிவம்மை, தாம்பிரவர்ணிநதி, சிந்துபூந்துறைதீர்த்தம், துர்காதீர்த்தம், கருமாறித்தீர்த்தம், பொற்றாமரைத் தீர்த்தமுதலியன வேய்விருக்ஷம், தாம்பிரசபை.)

பஞ்சகாலத்தில் நைவேத்தியத்திற்கு அருமையாயிரந்து கொணர்ந்து உலர்த்தியநெல்லைப் பெருமழையில் வெள்ளமடித்துப்போகாவண்ணம் வேதசருமாவின்பொருட்டு வேலிகட்டிக் காத்தருளிய தலம். இதனாலே இதற்கு நெல்வேலியென்று பெயராயிற்று.

தக்கன்யாகத்தடைந்து தேகம்விட்ட பார்ப்பதியார் இமயமலையினின்றும்போந்து அறம்வளர்த்துத்தவஞ்செய்தபொழுது, சிவபிரான் ஐப்பசிமாத உத்திரநாளிற்றிருமணஞ்செய்து நகர் காத்தருளியதலம்.

முழுதுகண்ட ராமபாண்டியன் அரசு செலுத்தும்போது அவருக்குக் குடப்பால் கொண்டுவரும் ஆயனை வேய்வனத்திற் பலகாலுந் தடுக்கிப் பால்கவிழ்க்கப்பெற்று வளர்ந்த எம்பெருமான், அவ்வாயன் கோடரியால் வெட்டிய வடுவைத்தாங்கி யரசனுக்குப் பிரசன்னராய ரசன் வேண்ட வளர்ந்தும், குருகியும், காட்சிகொடுத்தருளிய தலம்.

அகஸ்தியர், சுவேதமுனிவர், பிரமா, விஷ்ணு, நாரதர், அநந்தனாதிநாகங்கள், வங்கியசேகரபாண்டியன், உருத்திரகோடியர், யானை, கச்சவமுதலாயினோர், பூசித்துப் பேறுபெற்ற தலம். ஸ்ரீராமர் பூசித்துப் பாசுபதமும், ஸ்ரீகிருஷ்ணன், பூசித்துப் புத்திரப்பேறும் பெற்றதலம்.

பொற்றாமரையில் மூழ்கிய பெண்கள் கரையில்வைத்த ஆடையைக்காற்றடித்துச் செல்ல, அப்பெண்கள் கரையேறவருந்தியபொழுது, சிவபெருமானெதிர்தோன்றி அவர்களுக்குப் புடவைகள் கொடுத்தருளிய தலம்.

கோவிற்றிருவிளக்குப்பார்க்குமொருபிராமணன், காமவேட்கையால் விலைமாதுக்களிக்கப் பொருள்வேண்ட, அவனது காமக்கிழத்தியிடம் ஒரு பதக்கம் கொடுத்து அவனுடன் சேர்ந்திருக்கும்படிசெய்தருளிய தலம்.

பிராமணப்பிள்ளைகளுக்கு வேதமோதுவித்துப் பிராமணவீடுதோறும் ஒவ்வொருநாள் அமுதருந்திவந்து, ஒருதரித்திரன்வீட்டிலிருந்த யாவற்றையுமொருங்கேயுண்பதைநோக்கி வீட்டிற்குடையவள் முறையிட, மறைந்தருளி அம்மனையவர் தரித்திரங்களைந்து வேதியப்பிள்ளைகளை விற்பன்னராகச் செய்தருளிய தலம்.

இந்நகரில் வசித்த பாடுவான்பிள்ளை காமுகனாய் வீட்டுப்பொருளெல்லா மழித்ததுமன்றி, ஓர் வணிகன்மனையினுந்திருடி ஓர் மாதுக்களிப்ப, அவள் அதை விற்கையில் அவ்வணிகன் கண்டு அரசனுக்கறிவித்து அப்பிள்ளையைத் தண்டிக்க, அதற்காக முறைப்பட்ட பாடுவான்பொருட்டு, வணிகன்கேட்டது கொடுத்தருளி அப்பிள்ளையைச் சிறைவிடுத்தருளிய தலம்.

காமவெறியினாற் றெறியாது கள் குடித்த ஓர் வேதியன் பிராயச்சித்தம்வினவ, நெய்யைக்காய்ச்சி வாயில் வார்க்கவிதித்த பிராயச்சித்தத்தைச் சாண்டல்லியரிஷியானவர் விலக்கிப் பொற்றாமரையில் மூழ்குவித்து அப்பாவம் நீக்கியருளிய தலம்.

திருவிசைப்பா பாடி யருளிய கருவூர்த்தேவர், இத்தலத்துக்கு வந்து சிவபெருமானை யழைத்தபொழுது, காலசந்திப்பூசை யாகையாலே ஏனென்று கேளாதிருப்பக் கோபித்துச் சிவபெருமானிவ்விடத்தில்லையோ? என்று மானூருக்குச் சென்றுவசிக்கையில், அங்கு ஆவணிமூலநாளிற் சேவைசாதித்தருள, அத்தலத்தெழுந்தருளியிருந்த கருவூர்த்தேவரை வேதியர்கள் நிந்தனைசொல்லக்கேட்டு அங்கு வேதியரில்லாதொழிகவென்று சபிக்க, இவ்வாறு கருவூர்த் தேவராற் பல அற்புதங்கள் நடத்துவித்து இன்றும் மானூரில் ஆச்சரியநடனங் காட்டியருளுந் தலம்.

தாம்பிரசபையில் உமாமஹேஸ்வரிகாண ஆநந்தசௌந்தரியத் திருநடனஞ்செய்தருளிய தலம். நின்றசீர் நெடுமாறநாயனார், அவதரித்த தலம்.

தன்னுடனிருந்த ஓர் பிள்ளையைக் கொலைசெய்த வேதியன் பொற்றாமரையின் மூழ்கிப் பொய்ச்சத்தியஞ்செய்தும் யாதொரு தீங்குமடையாதிருத்தலை முழுதுங் கண்ணுற்ற சப்தரிஷிகள், இந்நகரத்தின்மீது வெறுப்படைந்து வேற்றூருக்குச்செல்லச் சிவபெருமான் வழிமறித்து இத்தலமேன்மையை யவர்களுக்குக் காட்டி மீண்டழைத்துவந்து, அநுக்கிரகித் தது முதலான எண்ணில்லாத திருவிளையாடல்கணடத்தியருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.—இதற்கு வடமேற்கு உரு-மைலில்,

௧௪. *திருக்குற்றாலம் —(திரிகூடாசலமுதலிய உக-திருநாமமுள்ளது.)

(குற்றாலநாதேச்சுரர், குறும்பலாவீச்சுரர், குழல்வாய்மொழியம்மை, வடவருவி, பொங்குமாகடல், செண்பகாடவி, சிவமதுக்கை, சித்திராநதி, சித்திரகுளமுதலிய தீர்த்தங்கள்.)

வேதசொரூபமாகிய குறும்பலாவிருக்ஷம். (சித்திரசபை.)

அகத்தியர், வாசுகி, கவுற்சனர், புஷ்பகந்தர்முதலாயினோர்பூசித்த தலம்.

விபக்திரியெனு மோர்வேதியன், தூர்த்தனாய்ப் பலநாடுந்திரிந்து, அதி கடும்பாதகம்புரிந்து, தேகரோகத்தினாற் பாண்டிநாட்டிற் சஞ்சரித்துபிச்சையேற்றுழலும்போது, இத்தலச்சிகரியாகியதிரிகூடாசலத்தினின்று, மந்தமாருதம்தேகத்திற்பட்ட புண்ணியவசத்தால், இயமதூதர்களிடத்தினின்றுமீட்டுச் சிவலோகத்தில், வைத்த தலம்.

தக்கன்வேள்வியிற் சிவத்துரோகிகளான தேவர்கள்பூசிப்ப, அவர்களது சிவத்துரோகம் நீக்கியருளிய தலம்.

வேடன் வேட்டத்திலோர் நரியைத் தொடர்ந்துவந்து அதன் பொருட்டுவலப்பிரதக்ஷணம்வந்தபுண்ணியவசத்தால் சிவலோகத்தில் வைத்தருளிய தலம்.

மதயானை நீர்விடாயின்பொருட்டு வடவருவியிற்றிளைத்துவனங்களைப்பலைத்து, அருவிநீரைத்துதிக்கையான்முகந்துசிதற அத்தொழில்களையே பூசனையாகக்கொண்டு அநுக்கிரகித்தருளிய தலம்.

ஓர்வேடன் பன்றியைத் துரத்த, அது சித்திராநதிமடுவில் விழ, அதனோடு குதித்த அவ்வேடனை யங்கிருந்த முதலைபற்றி வயிற்றைக்கிழிப்ப, அக்காலம்மாசிமாதமாயிருத்தல்பற்றி யவ்வேடனைநதியின் சிறப்பாற் கதியில் விடுத்தருளிய தலம்.

பாவத்தினால் நரகத்திற்கிடந்து வேதனையுற்ற தன்தந்தைக்கு, மாசிமாதத்துவாதசியின்பலனைத்தத்தஞ்செய்து கரையேற்றிய தலம்.

கண்டகசேதகனெனு முலுத்தவணிகன், திருவிழாவிற் கடைவைத்து விற்றுவசித்த புண்ணியத்தாலும், புட்பகந்தனென்பவன் பாவத்தின் பொருட்டு, யமதூதர்கையில் யாப்புண்டு, அவர்கள் இத்தல மார்க்கமாய்ச் செல்லா தொழிய வேண்டுமென்று பேசியவார்த்தையைக்கேட்டு இத்தலத்தின்பெயரைச் சொன்னமையாலும், சிவகதியடைந்த தலம்.

அகத்தியமுனிவர், பொதிகைக் கெழுந்தருளும்பொழுது, இத்தலம் வைணவத்தலமாயிருந்த துணராது, இதன்வழியேசெல்ல, இங்கிருந்த வைணவர்கள், அகத்தியர் தரித்திருந்த சிவசின்னங்களைக் கண்டுபொறாராகி வெளியே துரத்த, அகத்தியரிஷி, புறம்போய் அவ்வைணவர்களைப்போல வடிவுதாங்கிச்சென்று, அவர்க ளனுமதிப்படி யாலயத்துட் பிரவேசித்து, விஷ்ணுமூர்த்தியைத் தமது திருக்கரத்தால் குழைவித்துச் சிவலிங்கப்பெருமானாகச் செய்து பூசித்து, வைணவர்க ளகந்தை நீக்கியருளிய தலம் திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. குறும்பலாவுக்கும் ஓர் திருப்பதிகமுள்ளது ஆகப் பதிகங்கள் - ௨.

௬௫. ¶ திருவடவாலவாய்.—(மதுரை, வைகைநதித் தென்கரையில்)

(சொக்கநாதேச்சுரர், மீனாட்சியம்மை, வைகைதீர்த்தம்.)

குபேரன்பூசித்த தலம். சுந்தரேச்சுரரிடத்துவந்து, தன் கவியைப் பாண்டியனவமதித்ததைக்குறித்துச் சொற்பொருளாகிய நின்னை யவமதித்ததன்றோ? என்று வேண்டிய இடைக்காடன்பொருட்டுச் சுந்தரேச்சுர ரிங்கெழுந்தருளி, அரசனோடு பிணங்கிய பிணக்கை நீக்கியருளியதலம்.

௬௬. ¶ திருவாதவூர்.

(வாதவூரீச்சுரர், உமாதேவியம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

சைவசமயாசாரியராகிய ஸ்ரீமன்மாணிக்கவாசகசுவாமிகள் ஆமாத்தியர்குலத்திலே, திருவவதாரஞ் செய்தருளி, பதினாறுண்டினுள் சருவகலா வல்லவராயிருத்தலை அரிமருத்தனபாண்டியராஜனறிந்து, அவருக்குத் "தென்னவன் பிரமராயனென" பேரும், முதன் மந்திரி உத்தியோகமுங்கொடுத்து உபசரிக்க, அச்செல்வத்தின்மீது பற்றற்றவராய்ச் சிவஞான விருப்பினராயிருந்து அதிதீவிரதரபக்குவமடைந்து, சிவபெருமானாலுபதேசஞ்செய்யப்பெற்றுச்சமயாசாரியராக எழுந்தருளிய தலம். கார்த்திபாயனரிஷி பூசித்த தலம்.

௬௭. ¶ திருஉத்தரகோசமங்கை.

(உத்தரகோசமங்கைநாதேச்சுரர், உத்தரகோசமங்கையம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

பிருகுரிஷி, சாண்டில்லியரிஷி, கங்கை, அக்கினி, முதலியோர் பூசித்த தலம்.

ஸ்ரீமன்மாணிக்க வாசக சுவாமிகளுக்குச் சிவபெருமான் திருமேனிதரிசனை காண்பித்தருளி, அச்சுவாமிகளாற் றிருவாசகத்தில் நீத்தல் விண்ணப்ப முதலிய பல பாடல்களைப் பெற்றருளிய தலம்.

௬௮. ¶ திருமங்கைபுரம்.—(கோவிற்பட்டி.)

(பூவணலிங்கேச்சுரர், செண்பகவல்லியம்மை, திருக்கெண்டித்தீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

அகத்தியரிஷி, பொதியமலைக் கெழுந்தருளும்போது பொய்ச்சன்யாசி வேடம்பூண்ட வில்வலன், தம்பியாகிய வாதாபியை ஆடாக்கிச் சமைத்து விருந்திடப் புசித்தபின்னர், அவ்வில்வலன் வாதாபியையழைக்க, அகத்தியர் அகட்டினின்று முயிர்த்தெழத் தொடங்கிய வாதாபியை உதரத்தைத்தடவி நசிப்பித்தும், எதிர்த்த வில்வலனை வதைத்தும் உண்டான பிரமஹத்தியை அகத்தியர் பூசித்துப்போக்கியருளிய தலம்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெற்றவை.

ௗசு. ¶ திருக்கங்கைகொண்டான்.

(கங்கைகொண்டேச்சுரர், உமாமஹேஸ்வரியம்மை, சிவகாமியம்மை, சித்திராநதிதீர்த்தம்..)

பிரபா, அகலிகை, துருவாசரிஷி, தெய்வ கன்னிகையர் முதலியோர் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம்.

உ௦. ¶ திருக்கயிலாயபுரம்.—(சிந்துபூந்துறை.)

(கயிலாய நாதேச்சுரர், சிவகாமித்தாயம்மை, தாம்பிரவர்ணி நதிதீர்த்தம்.)

அகத்தியரிஷி, காரணரிஷி பூசித்த தலம். திருக்களந்தையினின்றும் தந்தையின், என்பைக் காசிக்குக் கொண்டுபோக எடுப்பித்து வந்த ஓர் வேதியன், காசியில் அவ்வங்கம் என்பாயிருந்தமையும், இத்தலத்தில்மலராயிருந்தமையும், கூலியாளினாலுணர்ந்து மீண்டு மிங்கு வந்து தாதைகடன்முடித்துத் திருவருள்பெற்ற தலம். இதனாலே "சிந்துபூந்துறை" என வழங்கப்படுகின்றது. அகத்தியருக்குத் திருமணக்கோலங்காட்டியருளிய தலம்.

உக ¶ திருஇராமேசநல்லூர்.—(மூத்தீச்சுரம்)

(இராம நாதேச்சுரர், குணக்குன்றம்மை, தாம்பிரவர்ணிநதி சடாயுதீர்த்தம்.)

அகத்தியரிஷியும், ஸ்ரீராமரும் பூசித்த தலம். சீதைபொருட்டு இராவணனோடு யுத்தஞ் செய்திறந்த சடாயுவுக்கு இராம மூர்த்தி ஈமக்கடனியற்றி நற்பதவியளித்தருளிய தலம்.

உஉ. ¶ திருமணவைமாநகரம்.

(மங்களேச்சுரர், மங்களாம்பிகையம்மை, தாம்பிரவர்ணிநதி, மங்களதீர்த்தம்.)

திருநெல்வேலியானது வேய்வனமாயிருந்தபொழுது, பாண்டியராசனுக்கு இராஜதானியாயிருந்த தலம். பாண்டவர்கள் வனவாசம் வசித்தகாலத்தி லித்தலமுற்றுப்பூசித்து, பாரதத்தில் கிருஷ்ண சகாயமும் துரியோதனாதியர் வதமுஞ் செய்ய வரம்பெற்ற தலம்.

உ௩. ¶ திருச்செப்பறை.

(தியாகேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி, மகிழ்வுதீர்த்தம்.)

இத்தலத்தினும், கட்டாரிமங்கலம், கருவேலங்குளம், கரிசூழ்ந்தமங்கலத்தினும், பாண்டியராசனுக்குச் சிதம்பரத்தின் திருநடன தரிசனங் கட்டளையிட்டருளப்பட்டன.

ஓர் கந்தருவன், முனிவரது தவத்திற் கிடையூறுசெய்து, அவரால் முதலையாகச்சாபம்பெற்றிருந்தவன், அருச்சுனனை, இத்தீர்த்தத்திற்பிடிக்க, அவனாற் கடியப்பட்டுக் கராவுருவம் நீங்கி கந்தருவனான தலம்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறுதவை.

உச. ¶ திருமருதூர்.

(கூடலழகேச்சுரர், உக்கிரேசர், திருக்கயிலாயநாதர், உமாதேவித்தாய், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி, சித்திராநதி, உதகநதிகள், முக்கூடற்றீர்த்தம், பிதுர்தீர்த்தமுதலியன.)

தேவர்கள்,கந்தருவர், வித்தியாதரர்கள் திருமால்முதலியோர் பூசித்த தலம்.

சோழராசனது குதிரைமுகமுள்ளபெண்ணைச் சிவாஞ்ஞைப்படி இந்நதித்துறையில் மூழ்குவித்து மானுடமுகமாக்கிய தலம்.

உரு ¶ திருமுறப்பநாடு.

(கயிலாயநாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதிதீர்த்தம்.)

அங்கிரசரிஷிபூசித்ததலம். சூரனுதியர்செய்த இடுக்கண்சகிக்காது தேவர், முனிவர் முதலியோர் முறைப்பட்டு நல்வரம்பெற்றதலம்.

உசு. ¶ திருக்கயிலாசபுரம்.—(ஸ்ரீவைகுண்டம்.)

(திருக்கயிலாசநாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதிதீர்த்தம்.)

பரத்துவாசரிஷி, பராசரிஷி, பிருதுச்சக்கரவர்த்திபூசிக்க, அவர்களுக்குக் திருக்கயிலாசத்தை வருவித்துக்காண்பித்ததலம். திருமால் முதலியதேவர்கள் பூசித்ததலம்.

உஎ. ¶ திருக்காந்தீச்சுரம்.—(ஆழ்வார்திருநகரி.)

(காந்தீச்சுரர், அறம்வளர்த்தநாயகியம்மை, தாம்பிரவர்ணிநதி தருமதீர்த்தம்.)

அகத்தியர்முதலிய அனேகயோகிகள், பூசித்து முத்தி பெற்ற இத்தலத்திற் கருவூர்த்தேவர் வந்துபூசித்துச் சிவயோகஞ்செய்திருப்பச் சிவபெருமான் அவர்முன்றோன்றிக் காட்சிகொடுத்தருளியதலம்.

உஅ. ¶ திருநவலிங்கபுரம்.

(நவலிங்கேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி நவதீர்த்தங்கள் ஒன்பது.)

அனேகரிஷிகளும், தேவர்களும், மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் வந்து, தனுர்மாதத்தில்மூழ்கி அநுக்கிரகம் பெற்றதலம்.

உகூ. ¶ திருப்பிரமேச்சுரம்.—(ஆனையப்பபிள்ளைசத்திரம்.)

(பிரமேச்சுரர், பிரமவிர்த்தியாநாயகியம்மை, தாம்பிரவர்ணிநதி பிரமதீர்த்தமுதலிய தசதீர்த்தங்கள்.)

பிரமதேவர், சிவபிரானுக்கு விரோதமாய்ச்செய்த தக்கன்வேள்வியிற் போயிருந்த பாவந்தீரப் பூசித்ததலம்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

௯௰. ‡ திருச்சோமேச்சுரம்.—(ஆற்றூர்.)

(சோமநாதேச்சுரர், சோமசுந்தரியம்மை, தாம்பிரவர்ணிநதி சோமதீர்த்தம்.)

குருபத்தினியைப் புணர்ந்ததாற் கிடைத்த சாபத்தை நீக்கும் பொருட்டுச் சந்திரன், பூசித்ததலம். வேட்டைக்குச்சென்றவிடத்துச், சுயம்புலிங்க தரிசனஞ்செய்ய விரும்பியபாண்டியராசனுக்கு. ஆலமரத்துத் தூரினின்றும் பிரசன்னராகித் தரிசனங்கொடுத்தருளிய தலம்.

௯௧ ‡ திருச்சேர்ந்தமங்கலம்.

(கயிலாசநாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி சங்கமதீர்த்தம்.)

அகத்தியரிஷி, சமுத்திரராசன், வருணனுதியர் பூசித்ததலம். உற்பனனென்னும் அரசனுக்குத் தரிசனங்கொடுத்து அநுக்கிரகித்த தலம்.

௯௨ ‡ திருக்குலசேகரன்பட்டினம்.

(காஞ்சி விஜயகட்சிகொண்டேச்சுரர், அறம்வளர்த்தநாயகியம்மை, காஞ்சிதீர்த்தம், சமுத்திரதீர்த்தம், மாவிருக்ஷம்.)

மார்க்கண்டரிஷி பூசித்ததலம். சூரபன்மா உயுத்தஞ்செய்த பொழுது, கடைசியாக மாமரமாக நின்ற தலமென்று புகழப்படுகின்றது. இதன் சுற்றுப்புறங்களில் மாவிருக்ஷ மில்லாதிருப்பினும், இதிலுள்ள ஓர் மாமரமானது எக்காலத்திலும், அரும்பு, மலர், காய் கனிகளை யுடைத்தாயிருக்கும். (அற்புதத் தலம்.)

௯௩. ‡ திருவிஜயமாநகரம்.—(பிரமபுரி, நாராயணபுரி, விஜயநாராயணம்.)

(மநோன்மணீச்சுரர், சிவகாமியம்மை, சிவகங்கைதீர்த்தம், விஜயகுளதீர்த்தம், பிரமதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம்.)

சலந்தராசுரனோடு நெடுநாள் உயுத்தஞ்செய்தும், வெல்லுதற்கரிதாய்ப் புறங்கொடுத்த திருமால்பூசிப்ப, அவ்வசுரனைச் சயிக்கும் வண்ணம் வரமருளியதலம்.

பிரணவப் பொருளறியாது, முருகக்கடவுளாற்குட்டுண்டு, சிறையிற்கிடந்த பிரமாவும், சயந்தன் வெள்ளையானை, இந்திராணி, காமதேனுமுதலிய தேவர்களும்பூசித்து அநுக்கிரகம்பெற்றதலம்.

சரபங்கரிஷி, நாரதரிஷி, அகத்தியரிஷி, ஸ்ரீராமர், இலக்குமணர், பரதர், சத்துருக்கர் முதலியோர் பூசித்ததலம்.

பாண்டவர்கள் துரௌபதையைமணந்து ஒவ்வொருவருந் தனித்தனி, இத்தனைகால மனுபவிக்கிறதென்றும், அக்காலத்தில் மற்றையோர் அவளைக்காண ஒண்ணாதென்றும், காணப்பெற்றால்,கண்டவன்

‡ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

ஒருவருடம் தீர்த்தயாத்திரை செய்தல் வேண்டுமென்றும் நாரதர் விதித்தபடி யொழுகுகையில், ஓர்நாள், நடுராத்திரியில், ஓர்வேதியன் வந்து ஓர் கள்ளன் வலிதிற் றன்பசுவைக் கவர்ந்துசெல்வதாய் முறை யிட்டமைபற்றி, ஆயுதமெடுப்பான் புகுந்த அருச்சுனன், துரௌபதையுடன், தருமரிருத்தல்கண்டதோஷபரிகாரார்த்தமாகத், தீர்த்த யாத்திரையில், இத்தலமுற்றுவிஜயகுளதீர்த்தங்கண்டுமூழ்கிப்பூசிப்ப, அத்தோஷரகிதமாக்கி யருளியதலம்.

இக்கலியுகத்தில், கங்காகுலோற்பவராகிய, மன்னமார்த்தாண்டனென்னும் அடியவர், சிவனடியார்கட்கு அன்னவஸ்திர முதலியதருபவர், ஓர்கருப்புக் காலத்திலுற்ற இலம்பாட்டைநினைத்து அருச்சிப்ப, அவ்வடியவருக்கு உலவாக் கோட்டையருளிய தலம்.

மனோன்மணியென்னும்வேதியமாது கங்கையாடச்சென்றவிடத்துக் கணவனையிழந்து, இத்தலமுற்றுப் பூசிப்ப, இச்சிவகங்கை தீர்த்தத்தினின்றும் அக்கணவனை யெழுப்பியருளிய தலம். இதனாலே இத்தலநாயகருக்கு மனோன்மணீச்சுரரென வழங்குகிறது.

௩௪. ‡ திரு இராதாபுரம்.

(வரகுணபாண்டியேச்சுரர், நித்தியகல்யாணியம்மை, சிவகங்கைதீர்த்தம்.)

வரகுணபாண்டியர் வேட்டையாடுகையிற் பொழுதுசென்றமையால், சுந்தரேசரைத் தரிசிக்கத் தாழ்த்ததறகாக வருந்தச் சுந்தரேசர் பிரசன்னரா யனுக்கிரகித்தருளியதலம். தேவர்கள் முதலாயினோர் பூசித்ததலம்.

௩௫. ‡ திருப்பணகுடி.

(சொக்கேச்சுரர், சிவகாமியம்மை, சிவகங்கைதீர்த்தம், அனுமதீர்த்தம்.)

சிபிச்சக்கிரவர்த்தி, தேவேந்திரன், அனுமன்முதலியோர் பூசித்த தலம். ஓர்வணிகன் வர்த்தகஞ்செய்து பணத்துடன் மீளும்பொழுது இவ்விடத்தில் ஓர் வேடன் வளைந்துகொள்ள, அவ்வணிகன் பயந்து முறையிட்ட பொழுது, சிவபெருமான் பிரசன்னரா யவ்வேடனை வதைத்து வணிகனை இரக்ஷித்தருளியதலம்.

௩௬ ‡ திருக்குறுங்குடி.

(சட்டைநாதேச்சுரர், பாகம்பிரியாநாயகியம்மை, நம்பிநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம், வில்வவனக்ஷேத்திரம்.)

பஸ்மாசுரன் என்பவன் நெடுநாள் தவஞ்செய்து தன்கையாற் றீண்டப்பட்டவர்கள் எரிந்து போகும்வண்ணம் வரம்பெற்றுத்தேவர்களிடத்திற் செல்லத் தேவர்கள்பயந்து விஷ்ணுவிடத்தில் முறை

‡ இக்குறி இட்டதலங்கள்பாடல் பெறாதவை.

யிட, விஷ்ணு மூர்த்தியானவர் ஓர் மோகினிவடிவமா யவ்வசுரன் முன்புவர, அவன்மோகித்துச் சமீபத்திற்சென்றனன்; அப்போது விஷ்ணுமூர்த்தியானவர் வேறுயாரையும் விரும்புவதில்லை யென்று உன்தலையைத்தொட்டு நீ சத்தியம் செய்துகொடுத்தால் இசையக்கூடு மென்றுகூற, அவன் மோகமயக்கால் அவ்வண்ணமே தன்தலையைத் தொட்டுச் சத்தியஞ்செய்திறந்தான். அப்பழிகோட்பட்ட விஷ்ணு மூர்த்தி பூசித்துப்பழிநீக்கமும் அனுக்கிரகமும் பெற்றதலம். இதற் கத்தாட்சியாக இத்தலத்திற் சிவபெருமானுக்கெதிரே விஷ்ணுமூர்த்தி யானவர் வில்வத்தை அருச்சிக்குங் கையுடன் கிழக்குமுகமாக எழுந் தருளியிருக்கின்றனர்.

௩௭. ‡ திருக்களக்காடு.

(சகலபுவனேச்சுரர், உமாதேவியம்மை, பச்சைநதிதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

கற்பினுக்கரசியாகிய நளாகினியம்மை தமது பர்த்தாவைத் தாங் கிக்கொண்டுசெல்லும்போது, கழுவிற்குற்றுயிராயிருந்த மாண்டவ்ய ரிஷியார் காலிற்றுக்க, அவர் அவளைச் சூரியோதயத்தில் அமங்கலை யாக வென்றிட்ட சாபம்நோக்கி, அந்நளாகினியம்மை சூரியோதயம் ஆகாமற்போகவென்று சபிக்க, அவ்வாறே வெகுகாலம் சூரியோதய மில்லாமற்போய்த் தேவர்கள் முனிவர்கள் வந்துபூசித்து முறையிட் டதற்கிரங்கிச் சிவபெருமான் அவர்கள் இருவர் சாபத்தையும் நீக்கி யருளிய தலம்.

௩௮. ‡ திருமந்திரேச்சுரம்.—(ஓமனூர்.)

(அர்த்தநாரீச்சுரர், பச்சையாறுதீர்த்தம், தாம்பிரவர்ணிநதி, உருத்திரதீர்த்தம்.)

கிரேணுவென்னும் அம்மை குழந்தைக்காகத் தவஞ்செய்யுழி, ஈஸ்வரி சாபவசத்தால் கங்கையே குழந்தையாய் வரப்பெற்று வளர்த் துவரும்நாளில், களந்தை நகரத்து வயிரமலையெனும் அரசன் அக் குழந்தையை அவளனுமதியாற் பெற்றுவளர்க்க, பெதும்பைப் பருவ முள்ள பச்சைநாயகியெனும் அப்பெண், சிவபிரானைநோக்கித் தவஞ் செய்து சிவபெருமானைத் திருமணம் புரிந்தருளியதலம்.

பச்சைநாயகி, வயிரமலையெனுமரசன் புத்திரியாய் வளர்ந்தமை யால் அவ்வரசன் கேட்டுக்கொண்டபடி வயிரமலையினின்றும்வருகிற அந்நதிக்குப் பச்சையாறு என்று வழங்குகின்றது.

௩௯. ‡ திருத்துருவாசநல்லூர்.—(காளத்திநகரம்.)

காளத்தியீச்சுரர், பூங்கோதையம்மை, தாம்பிரவர்ணிநதி, துருவாசதீர்த்தம்.)

துருவாசமுனி திருக்கயிலையிற்சென்று சிவபெருமானைப்பூசித்து என்றும் மறவாதுபூசித்துவரும்படியான வரமருளப்பிரார்த்திக்க, தா

‡ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறுதலை.

ம்பிரவர்ணிக் கரையடைந்து பூசிக்குதி, எனச்சிவபெருமான் திருவுளம்பற்றியபடி, அக்குற்றுத்தீர்த்தமாடிப்பூசித்து வரம்பெற்றும், இன்னும்கரிசூழ்ந்த மங்கலமுதலிய எட்டுத்தலங்களை யமைத்துப் பூசித்து மருள்பெற்றதலம்.

சய. ‡ திருஉரோமேச்சுரம்.

(உரோமேச்சுரர், இமயப்பாவை, தாம்பிரவர்ணிநதி, உரோமேசதீர்த்தம், மார்க்கண்டதீர்த்தம்.)

உரோமேசரிஷிபூசித்து நித்தியத்துவம்பெற்றதலம். திருமால், அயன், சித்தர், விஞ்சையர், தேவர்கள், மார்க்கண்டேயரிஷி, கார்த்தவீரியன் முதலியோர் பூசித்ததலம்.

சக. ‡ திருச்சேரன்மாதேவி.

(வைத்தியநாதர், ஒப்பில்லாநாயகியம்மை, அம்மைநாதசுவாமி, சிவகாமியம்மை, கன்னடியன்கால் முதலியதீர்த்தங்கள், தாம்பிரவர்ணிநதிதீர்த்தம்.)

அகத்தியர் முதலியரிஷிகள்பூசித்து அநுக்கிரகம்பெற்ற தலம். பெருநோய்கொண்டசோழராசன், எத்தலத்துந்தீராது, இத்தலம்வந்து நோய்தீரப்பெற்றுக் கதியடைந்ததலம்.

சஉ. ‡ திருப்புடார்ச்சுனபுரம்—(திருப்புடைமருதூர்)

(புடார்ச்சுனபுரேச்சுரர், மங்கைநாயகியம்மை, தாம்பிரவர்ணிநதிதீர்த்தம்.)

இந்திரன் விருத்திராசுரனைக் கொன்ற பிரமஹத்திபற்றி மருதமரத்தின் பொந்தில் ஒளித்திருந்து மானதத்தாற் பூசிப்ப, அதற்காகவும், தேவர்கள் முறைப்பாட்டிற்காகவும் சிவபெருமான், மருதமரத்தின் புடைப்பிற்றோன்றி யநுக்கிரகித்தருளிய தலம். இதனாலே இத்தலத்திலுள்ள மருதமரங்களெல்லாம் பொந்துண்டாவது வழக்கம்.

சங. ‡ திருக்கோட்டீச்சுரர்.—(ஊய்க்காடு.)

(கோட்டியீச்சுரர், கொடியிடையாளம்மை, தாம்பிரவர்ணிநதி, திருவலஞ்சுழிதீர்த்தம்.)

அகத்தியர் பூசிக்கும் பொருட்டு மணலால் இலிங்கமமைக்க, அமைக்ககில்லாததறிந்து "ஈசனே"! இதென்னகோட்டி? எனக்கூறியபின், அமைவுபெற்று அம்முனிவர் விரற்றழும்போடும் உருவாக்கப்பட்டமையால் கோட்டியீச்சுரனென்று நாமஞ்சூட்டிப்பூசித்த தலம்.

சச. ‡ திருக்காசிபேச்சுரம்.—(அம்பாசமுத்திரம்)

(எரிச்சானுடையார், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி கூவதீர்த்தம்.)

காசிபரிஷி, அகத்தியரிஷி, பூசித்த தலம். சிவசருமாவென்னும் ஒருகன்னடியவேதியன், அகத்தியரைக்காணவிரும்பித்தமதுனைப்பொ

‡ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறுதவை.

ருளைச்சாங்கனென்னுமருச்சகனிடமொப்புவித்துப் பொதியமலைநோக்கி உறுப்புத் தேயநடந்துகாணுது,வருந்தி உயிர் துறக்கத்துணிவுகொண்டதறிந்த அகத்தியமுனிவர், தரிசனங்கொடுத்து அவ்வேதியனது விருத்தாப்பியத்தையௌவனமாக்கியும்நல்வழியுரைத்துமனுப்ப, மீண்டவேதியன் அருச்சகனோடு தனக்கு யௌவனங்கிடைத்தவிருத்தாந்தஞ்சொல்ல, மகிழ்ந்திருந்தபின், பொருளபேட்சையால், வாங்கியபொருளைக்கொடேனென மறுக்கச் சிவசருமாச்சத்தியத்திற்கழைக்க, அருச்சகன் சிவபெருமானைப் புளியமரத்திலெழுந்தருளும்படி வேண்டியவண்ணம்போயிருந்தருளி, அக்காரவைச் சிவசருமாவுக்கறிவிக்க, அவனவ்வருச்சகனைப் புளியமரத்திற்றனே சத்தியஞ்செய்வித்தமையால், நம்பிக்கைத்துரோகியான அருச்சகனை உடனேயெரித்துச் சிவசருமனுக்குப் பொன்னருவிட்டுத் தந்தருளியதலம்.

சிவசருமா, அப்பொருளால் தருமத்தைச்செய்தும், ஓர்கால்வாயமைத்தும் பூசித்ததலம். இதனாலே இத்தலநாயகருக்கு எரிச்சாளுடையாரென்றும், அவ்வாய்க்காலுக்குக் கன்னடியன்காலென்றும் வழங்குகிறது.

௩௫. ‡ திருமூலநகரம்.—(அம்பாசமுத்திரம்,மேலப்பாளையம்)

(திருமூலநாயகர், உலகம்மை, தாம்பிரவர்ணிநதிதீர்த்தம், அகத்தியர்தீர்த்தம், கூவதீர்த்தம்.)

அகத்தியர் அரம்பைமாதர், சித்தயோகர்கள் பூசித்தும் யாகாதிகள்செய்தும் அநுக்கிரகம்பெற்றதலம்.

௩௬. ‡ திருப்பாவநாசம்.

(பாவநாசேச்சுரர், உலகம்மை, தாம்பிரவர்ணிநதி, பாவநாசதீர்த்தம்.)

அகத்தியர்முதலியோர் பூசித்த தலம் தாம்பிரவர்ணி என்பாள் கங்கை, காவிரியாதிய நதிகளுந் தன்னிடம்வந்து மூழ்கிப் பாவந்தொலைத்தேகலால், அவர்கள் பாவத்தைச் சுமக்கலாற்றுது பூசித்துத்துதிக்க, "உன்னிற்றோயாதேகுமவர்க்கே அப்பாவமாகுக" என்றும், "உன்னிற்றோய்ந்தோரிஷ்டகாமியமனைத்துமணிபவித்துநற்கதியடைக" என்றும் வரமருளிய தலம்.

ஒரு வணிகன் சிறுவயதிற் பிரிந்து தாய் தங்கை முதலியவர்களையறிந்துகொள்ளக்கூடாதவனாய் அவர்களையே புணர்ந்து புத்திரர்களைப்பெற்றபின்னர் பூருவோத்திரந்தெரிந்து வியசனமுற்று, அவர்கள் யாவருமித்தலமடைந்து வரைபாய்ந்துயிர் துறக்க முயன்றபொழுது, சிவபெருமான் தடுத்தருளி, அவர்கள் பாவத்தை நாசஞ்செய்தருளிய காரணத்தால் அப்பெயர் பெற்ற தலம்.

---

‡ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

௪எ. ¶ தென்காசி —(தெக்ஷணகாசியெனவும்வழங்கும்.)
(சுந்தரேச்சுரர், உலகநாயகியம்மை, விஸ்வநாதேச்சுரர், அன்ன பூரணியம்மை, சித்திரநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

பிருகுமகாரிஷி, கண்ணுவரிஷி முதலாயினோர் பூசித்துச் சிவாநுக்கிரகம் பெற்ற தலம். அகத்தியமுனிவர் பொதியவரைக் கெழுந்தருளியபோது, இந்நாட்டோர் சிவபூசை அடியவர்பூசைமுதலியன வழூஉச்செய்துவருதனோக்கி, இவர்கள் காசிக்கு கங்கையாடிச்சிவதரிசனஞ் செய்யச்சென்றால் தருமந் தடைப்படுமாதலின் அக்காசியிலுள்ள கங்கைநதிதீர்த்தப்பலனை இக்காசியிற் சித்திரநதிதீர்த்தமும், அவ்விஸ்வேச்சுரரது சேவைப்பலனை இவ்விஸ்வேசுரரும் அளிக்கும்படிக்குவாமருளவேண்டுமென்றுபிரார்த்தித்து, அங்ஙனமே அநுக்கிரகம்பெற்ற தலம். எண்ணில்லாதவர் முத்திபெற்றதலம்.

௪அ. ¶ திருச்சங்கரநாராயணர்கோவில்(சங்கரநயினார்கோயில்)
(சங்கரநாராயணசுவாமி, ஆவுடையம்மை, சக்கரக்குளதீர்த்தம்.)

பிருகுமகாரிஷி, விஷ்ணுவையொழித்துச் சிவபெருமானையேபூசிப்ப, சிவபெருமான், அவ்விஷ்ணு தமது சத்திசொரூபமென்று, பாதித்தேகத்தில் வெளிப்படக் காட்சி தந்தருளியதலம். இத்தலத்தின் மூலத்தானத்திற் புற்றுமாத்திரமிருக்கிறது. அச் சங்கரநாராயணரூபம் பிரத்தியேக ஆலயத்திற் காணலாம்.

௪கூ. ¶ திருக்கரிவலம்வந்தநல்லூர்—(கருவைநல்லூர்.)
(பால்வண்ண நாதேச்சுரர், ஒப்பிலாம்பிகையம்மை, சிவகங்கைதீர்த்தம், பாலசுந்தரதீர்த்தம், களாவிருக்ஷம்.)

திக்குப்பாலகர்பூசித்த தலம் ஓர்காலத்தில் இத்தலங் காடாயிருப்ப, குலசேகர பாண்டியன் வேட்டஞ்செய்தபொழுது, ஓர் யானை ஓர் புதரை வலம்வந்து, உடனே சிவகணமாய்ச்சென்றதையுணர்ந்து, அப்புதரை வெட்டிப் பார்த்தபொழுது பரமசிவம் பால்போல வெள்ளியவர்ணத்துடனிருப்பக் கண்டு பால்வண்ண நாதரென்று திருநாமஞ்சூட்டி, அநேக பிரபந்தங்களாற் றோத்திரித்துப் பூசித்ததலம். இதனாலே கரிவலம்வந்த நல்லூரெனப் பேராயிற்று.

௫௰. ¶ கண்ணைப்பதி.—(பறியாமருந்தபட்டி.)
(பறியாமருந்தீச்சுரர், பரஞ்சோதி பார்வதி, சர்வானந்ததீர்த்தம், மருதவிருட்சம்.)

கூன்பாண்டியனுக்குள்ள பிணியை மருந்து பறித்தூட்டாது அகற்றினதலம்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

௫௧. ¶ திருச்செந்தூர் —(சந்தனுசலம், சீரலைவாயெனவும் வழங்கும்.)

(சிவசுப்பிரமணிய சுவாமி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை; கந்தபுட்கரணிதீர்த்தம், அகஸ்திய தீர்த்தம், தேவதீர்த்தம், சீரலைவாய் வதனாரம்பம், மாதுர், பிதிர் தீர்த்தங்கள்.)

விஷ்ணு, பிரமதேவர், எமதன்மராசன், தேவேந்திரன் முதலியதேவர்கள், பூசிக்க, அவர்கள்பொருட்டு சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாருகாசுரன், பானுகோபன்முதலிய அசுரர்களைச்சம்ஹரித்துத் தேவர் சிறைமீட்டு, வீரவாகுதேவர், வீரகேசரி, வீரமாகேந்திரன், வீரமாகேச்சுரன், வீரபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீரராந்தகன், வீரதீரன் முதலியநவவீரர்களும், பூதவீரர்களும், இலக்கவீரர்களும், படைவீடு கொண்டெழுந்தருளியிருந்த தலம்.

வியாசமுனிவரால் உபதேசிக்கப்பட்ட சுகப்பிரமரிஷி, நாரதரால், உபதேசிக்கப்பட்ட வெள்ளையானை இவர்கள் பூசித்து அனுக்கிரகம்பெற்ற தலம்.

வள்ளியம்மை, மகாவிஷ்ணுவின் வலக்கண்ணிற்பிறந்து, மிக்க அழகுடன் முருகக்கடவுளுக்கு, முந்தியதாரமா யித்தலைத்திலெழுந்தருளியிருக்கும்பொழுது, தேவேந்திரன், குமாரத்தியாகியதெய்வயானையம்மை யாரை விவாகஞ்செய்துவர, வள்ளிநாயகியாரிகழ்ச்சிசெய்த தப்பிதத்திற்காக, மான்வயிற்றிற்பிறந்து குறவர்பால் வளரும்படி, முருகப் பிரான்சபிப்ப, அவ்வாறே, அதற்கு முன் ஓர் தவரிஷியின் தவமழிக்கும்பொருட்டுப் பிரமதேவரா லேவப்பட்ட, தேவமாதர்களும் கந்தருவர்களும், அம்முனிவரால், குறவராகும்வண்ணஞ் சபிக்கப்பட்டதினால் போந்த குறவர்களிடத்து, வள்ளியம்மையார் வந்து வளர்ந்து, முருகவேளைத் திருமணஞ்செய்த தலம்.

பவரோகமுதலிய சகலரோகங்களையும்நீக்கிச் சுகாநந்தத்தையடைவிக்கத்தக்க இலை விபூதிப்பிரசாதமும், யாவருக்கும் விலக்கலின்றிச் சந்தனப்பிரசாதமும் பாலித்தருளுந்தலம். (சந்தனம் பிரசாதித்தல்) இத்தலம் கந்தமாதனம். சந்தனு சலம் என்பது பற்றியென்க.

செந்திற் கோவிந்தர் உபயநாச்சியாரோடு கிழக்குமுகமாகச் சந்தனவிமானத்திற்சயனம்.

---

¶ இக்குறி இட்டதலம் பாடல் பெறவில்லை.

௫௨. ¶ திருவள்ளியூர்.—(முருகப்பிரானது குன்று தோறாடல்களிலொன்று.)

(முருகக்கடவுள், வள்ளிநாயகியம்மை, சரவணப்பொய்கை தீர்த்தம்.)

நாரதமகாரிஷி வள்ளிநாயகியாரைக் கண்ணுற்று, அவரது அழகை வடிவேலவருக்கறிவிப்ப, முருகக்கடவுள் இங்கு எழுந்தருள, அப்போது சேடிமாரோடு நீராடிநின்ற வள்ளிநாயகியார்வெட்கி ஒருபுறத்தொதுங்கி ஒளித்துக்கொண்ட தலம். இதனாலே இத்தலத்திற்கு வள்ளியொளித்தவளநாடெனன்னும்பெயர். அநேகரிஷிகளும் தேவர்களும் அநுக்கிரகம்பெற்ற தலம்.

௫௩. ¶ திருவாவினன்குடி.—(முருகப்பிரானதுஆறுபடைவீட்டிலொன்று)

(சுப்பிரமணியசுவாமி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை, வேலாயுததீர்த்தம், சரவணப்பொய்கைதீர்த்தம்.)

திரு - இலட்சுமி, ஆ - காமதேனு, இனன்- சூரியன்(என்றது) மகாலட்சுமி, காமதேனு, சூரியன் குடியிருந்து பூசித்த தலமாதலாலிதற்குத் திருவாவினன்குடியெனப் பேராயிற்று. பரமசிவத்தினிடத்து, மாம்பழம்பெறும்பொருட்டு, உலக வலம்வந்த சுப்பிரமணியர் அது பெறாதகிமித்தமிங்கு எழுந்தருளியதலம்.

௫௪. ¶ திருப்பழநிமலை,—(முருகப்பிரானது குன்றுதோறாடலிலொன்று.)

பழநியாண்டவர், சண்முகநதிதீர்த்தம், சூரியதீர்த்தம், வையாபுரிக்குளம், தேவதீர்த்தம், அமுததீர்த்தம், காணுச்சுனைதீர்த்தம்.)

அகத்தியர், சேரர்கோன், வசுமந்தன், சொர்ணகுத்தன், நித்தியாநந்தன், பிரமா, இந்திரன், கவுசலசேரன், அக்கினி, ஆதிசேடன், அருச்சுனன், முதலியோர் பூசித் தனுக்கிரகம்பெற்ற தலம். சிவபெருமானிடத்து மாங்கனிக்காகப் பிணங்கித்திருவாவினன்குடியிலெழுந்தருளியிருந்த முருகக்கடவுளானை யெம்பெருமான் வந்து பிணக்கந்தீர்த்து, நீயே கனியொத்தவனாயிருக்க வேறுகனி யேதுக்கென்று திருவாய்மலர்ந்தருளிய தலம் பழம்—நீ என்ற இருமொழித் தொடர் பழநி என்று வழங்கப்படுகிறது.

பாண்டியநாடு முற்றிற்று.

---

இந்நாட்டிற் பதிகம் பெற்ற தலம் ௰௪. புராதனத்தலம். ௩௫. சுப்பிரமணியர்தலம் - ௫. ஆக ௫௪. அறுபத்து மூவர்களில் முத்திபெற்றநாயன்மார் நால்வர்.

---

¶ இக்குறி இட்டதலங்கள்பாடல் பெறாதவை.

சிவசுப்ரமண்ணியர் துணை.

# கொங்குநாடு.

க. * திருவெஞ்சமாக்கூடல்.

(விகிர்தேச்சுரர், விகிர்தவல்லியம்மை, வேகநதிதீர்த்தம்.)

வெஞ்சன் என்னுமசுரன் பூசித்து வரம்பெற்ற தலம். இந்திரன் அகலிகையைச் சேரும்பொருட்டுச் சேவலாய்க் கூவிக் கௌதமரிஷியை வஞ்சித்தபாவம் நீங்கப் பூசித்து அநுக்கிரகம்பெற்ற தலம். சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகம்-க.

—இதற்கு வடக்கு யசு-மைலில்,

உ. * திருக்கருவூர்த்திருவாநிலை.—(கருவூர்.)

(பசுபதீச்சுரர், கிருபாநாயகி, வடிவாம்பிகையம்மை, ஆம்பிராவதிநதி, பிரமதீர்த்தம், தாடகைதீர்த்தம் முதலியதீர்த்தங்கள், வஞ்சுளாரண்ணியக்ஷேத்திரம்.)

பிரமா அயர்ந்து நித்திரைசெய்த ஓர்காலத்தில், காமதேனுபூசித்து உலக சிருஷ்டியை நடத்திய தலம். இதனால் இத் தலத்திற்குக் கருவூர், கற்பபுரி யென்று வழங்கப்படுகிறது.

தேவர்கள், திக்குப்பாலகர்கள், சுக்கிரன், முசுகுந்தன், கோபிதாரன், பிரமதேவர், முதலியோர் பூசித்த தலம்.

விபண்டன், என்னும் வேடன் பாபரூபியாயிருந்தும், அடியார்போல வேடந்தாங்கி மார்கழித்திருவிழாவில் ஆலயக்களவு செய்யவந்து ஜனநெருக்கத்தி லகப்பட்டிறக்கத் தரிசித்ததே காரணமாய் முத்தியருளிய தலம்.

(கருவூர்த்தேவர்) இத்தலத்து வேதாகமமுணர்ந்தவராய் வேதியர்மரபி லவதரித்தருளிய இத்தேவர் யோகர், சித்தர், முதலியோரோடும் பயின்று சிவயோகியாய் எழுந்தருளி இருக்குங்கால், "மெய்யன்பர் நாரியர்பால் வீடேயிருப்பினு மெஞ்ஞானவீட்டின்ப மேவுவரே" என்றதற்கு இணங்கமாதரோடாடல் முதலிய பலவிதக்கற்றொழில்களைப் புரிந்துஞ் சித்தநிலைதிரியாது சிவயோகியாயிருத்தலை யுணராத அந்தணர்களிகழ்ந் துரைப்ப, அவர்கள் உணர்ந்துய்யும்பொருட்டு, காலமல்லாத காலத்தில் மழைபெய்வித்தல், வெயில் நீக்குதல், ஆற்றைப் பெருக்கச் செய்தல், கோவிற் கதவந்திறப்பித்தல் முதலிய பல அற்புதங்களைக்காட்டியருளி, இங்குநின்றும் நீங்கித் திருநெல்வேலி, திருக்குருகூர், காந்தீச்சுரம், திருச்செந்தூர், திருப்புடைமருதூர், கஜேந்திரமோக்ஷம், திருக்குற்றாலம் முதலிய தலங்களிற்சென்

று "திருவிசைப்பா" ஓதியருளிப்பொதிகைமலையில் அகத்தியரோடு மெழுந்தருளியிருந்தனர்; அப்போது தஞ்சைநகரத்தில், சோழராஜனால், ராஜராஜேச்சுரம் என்னும் பெரிய ஆலயஞ் சமைக்கப்பட்டும், அட்டபந்தனஞ்செய்விக்க இயலாமல்மனம்வருந்துகையில், அசரீரி, "கருவூர்த்தேவரையழை" என்றுணர்த்த, அரசன் உணர்ந்துவேண்டப் பொதிகையினின்றும் எழுந்தருளி அவ் வட்ட பந்தனத்தைத் திருவாய்த்தம்பலத்தால் நிலைபெறச்செய்துதிருவானைக்கா முதலிய தலங்களையும் வணங்கித்திருவரங்கத்திற்குவந்திருந்தபொழுது, அங்கு வசிக்கும் ஓர் விலைமாது கருவூர்த்தேவரைவலிதிற் கைப்பற்ற, அவண் மனைக்குச்சென்றிருந்த அவர், திருவரங்கம் பெரிய கோவிலிற்கண் வளரும் அரங்கநாதரை அழைத்து, அவரால் ஓர் ரத்ன ஆரம்தரப் பெற்று, அதனை அப்பரத்தைக் கீந்தருளி, அங்கு நின்றும் புறப்பட்டுத் திருப்பராய்த்துறை, திருஈங்கோய்மலை, இரத்னகிரி, கடம்பன்துறை, திருமுக்கூடல் முதலிய தலங்களைவணங்கி, பலவற்புதங் கணடத்தி, இத்தலத்திற்குவந்து இங்கெழுந்தருளியிருக்கும்பொழுது அரங்கநாதர்மீது சாத்தியிருந்த ஆரங்காணுத, கோவில்விசாரணைக் கர்த்தர்க ளவ்வாரத்தை விலைமாதினிடத்தில்கண்டு, அவள் வீட்டைக் காவல்செய்திருப்புழி, அவள்வருந்தியழைப்பக் கருவூர்த்தேவர் அங்குசென்று அவளுடன் பேசிக்கொண்டிருத்தலை அதிகாரிகளுணர்ந்து, அவரை அவ்வார்த்தைக்குறித்துவினவ, அவர் அரங்கநாதர் தரப்பெற்றதென்றோதி, அரங்கனந்தரை யழைத்துச் சாக்ஷி சொல்வித்து, அங்குநின்றும் இத்தலமடைந்து சிவயோகம்செய்திருக்குங்காலையில் இவ்வூரந்தணர்கள் அவர் வாமதந்திர பூசாரகரென்று அரசனுக்கறிவிப்ப, அரசன் சோதித்தபொழுது, அவர் பூசையில் வாமதந்திரத்துக்குரிய மதுமாமிசாதி யனுசிதபண்டங்கள் ஏதுமின்றிச் சிவாகமபூசைக்குரிய உசிதமானபண்டங்கள் நிறைந்திருக்கக்கண்டு அவர்மீது நிந்தைகூறிய அந்தணர்கள் மனையைச் சோதித்தனர். அங்கு மதுமாமிசாதிகள் நிறைந்திருப்பக்கண்டு அவ்வந்தணர்களை வெறுக்க அதனை விலக்கியருளிய அக் கருவூர்த்தேவர் பசுபதீச்சுரரோடு இரண்டறக் தலந்தருளிய தலம்.

(எறிபத்தநாயனார்) வைகாசிமாதப் பரணிநாளிற் றிருவவதாரஞ்செய்து, அடியார்களுக்கு ஆபத்துவந்தகாலத்து, அவ்வாபத்து இழைப்போர்களை மழுவினால் வெட்டுகிற காரணத்தால் அப்பேர் பூண்டு, சிவபணிவிடைசெய்துவருங்காலத்தில், சிவகாமியாண்டாரென்கிற அடியவர் பசுபதீச்சுரருக்காகக் கொணர்ந்த திருப்பூங்கூடையை இந்நகரத்தரசராகிய புகழ்ச்சோழரது யானையானது பறித்து

மலரைச் சிதறிச்செல்லச் சிவகாமியாண்டார் இட்டமுறைக்கு, எதிர் வந்த எறிபத்தநாயனர் அவ்வியானையையும் அதன் பொருட்டெதிர்த்தபாகர்களையுங் கொன்றது கேட்டுவந்த புகழ்ச்சோழரோடு நண்பு பூண்டு, அவ்விருவருந்தம்முள் அளவளாவியிருந்து, மாசிமாத அத்த நாளிற் சிவபதமடைந்த தலம்.

(புகழ்ச்சோழநாயனர்) உறையூரில் க்ஷத்திரியவம்சத்திற் சித்திரைமாத அசுவினிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவாலயபூசைகளையும் அடியார்பூசைகளையும் நடத்திவருங்கால், கொங்குதேசத்தின் அரசிறையை அறவிடும்பொருட்டு, இத்தலத்திற் கெழுந்தருளி யிங்கிருக்கும்பொழுது, இவரதுயானை சிவகாமியாண்டார்கொணர்ந்த திருப்பூங்கூடையைச் சிதைத்ததற்காக எறிபத்தரால் எறிந்தமையுணர்ந்து, அங்குசென்று, அவ்வானையின் பிழைக்காக அதனையூர்ந்து நடத்துந்தம்மையும் வெட்டவேண்டுமென்று வாளைக் கொடுப்ப, அவ்வாளையேற்ற எறிபத்தர் தன் சிரத்தையறுக்கத் தொடங்குங்காலையில் சிவபெருமான். தடுத்தருளி இது அன்புசோதிக்க, நிகழ்ந்ததென்று ஆகாயவாணியாற்பணித்து, எறியுண்ட யானையும் பாகரையும் எழுப்பியருளியும்,சிவகாமியாண்டாரது பூங்கூடையைப் பூக்களால் நிறைவித்தருளியும், அனுக்கிறகித்தபோது, நாயனர் இந் நகரத்தையே ராஜதானியாக்கி யிங்குவதியுங்கால், திறை கொடாத அதிகனென்பவனது அரணைத் துகளாக்கச்சென்றமந்திரிமார் அவனைப்புறங்கண்டு அவனது படைவீரர்களைச் சயித்து, அவர்கள் தலைகளையும், நிதிக்குவியல்களையும் புகழ்ச்சோழர் முன்னேகொணர, அத்தலைகளுள்ளோர்தலையிற் புன்சடையிருக்கக்கண்டு சிவனடியார்க்குத் தீங்குசெய்ததற்காகபெரும்பயங்கொண்டு, அத்தலையையெடுத்து ஓர் பொற்கலத்தேந்தி, திருமுடியிலே தாங்கிக்கொண்டு அக்கினியை வளர்ப்பித்து, அதனுட்புகுந்து ஆடிமாதக் கிருத்திகை நாளில் முத்தியடைந்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் க.

—இதற்கு மேற்கு ௰-மைலில்,

## ௬. * திருப்பாண்டிக்கொடுமுடி.—(கொடுமுடி.)

(கொடுமுடிநாதேச்சுரர், பண்மொழியம்மை, நொய்யநதி, காவிரிநதி சங்கமதீர்த்தம், வன்னிவிருக்ஷம்.)

மகாவிஷ்ணு, பிரமா, அகத்தியரிஷி முதலியோர் பூசித்ததலம். திருக்கயிலாயக் கொடுமுடிகளி லொன்றாகிய தலம். விஷ்ணு புஜங்க சயனராய் மேற்கு முகமாயிருந்தும், பிரமா வன்னியிருக்ஷத்தின் கீழிருந்தும், சிவபெருமானைப் பூசிக்குந்தலம். அகத்தியமகாரிஷி பொதி

கைவரைக்குக் கொண்டுசெல்லுங் காவிரிநதியைக் காக உருவமாகச் சென்று கவிழ்க்த, விநாயகக்கடவுள் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-௩.

—இதற்குத் தென்கிழக்கு உ௰ - மைலில்,

௪. * திருச்செங்குன்றூர்.—(நாகாசலம், திருச்செங்கோடு.)

(அர்த்தநாரீச்சுரர், பாகம்பிரியாளம்மை, பிரமதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், முருகதீர்த்தமுதலிய சோடசதீர்த்தங்கள்.)

உமாதேவியார்சிவபெருமானைப்பிரிந்திருத்தலினாற் சாபமுதலிய பலசங்கடங்கட்கு உள்ளாதல்பற்றி, என்றும்பிரியாது உடனுறைதல் வேண்டுமென்று நோற்று, அர்த்தபாகம் பெற்றதனால் இங்குச் சிவபெருமான் ஓர்புறத்துத் தமது ரூபமும், ஓர்புறத்துச் சத்திரூபமுமாகத் திருவுருவங்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலம்.

பிரிங்கிமகாரிஷிக்காகவந்த அவதாரம். இஃது மலையின்மீதுள்ள தலம். சுவாமிதிருமேனி விபூதிநிறம். அநேகந் தேவர்களும், ரிஷிகளும் பூசித்துக் கருதியவரம்பெற்ற தலம்.

சிங்கவன்மனென்னு மரசன் வேட்டையாடுகையில் பன்றியைப் பின்றொடர்ந்து பிருகுமுனியாச்சிரமத்தில் அதனை யெய்தபொழுது, அம்முனிவரது சாபத்தாற் புலியாகத்திரிந்து, எங்குந் தீராது இங்கு வந்து அச்சாபவிமோசனம் பெற்ற தலம்.

முருகப்பிரானது குன்றுதோருடல்களிலொன்றாகிய விசேடமாயுள்ள தலமாதலால், திருப்புகழ் முதலிய அநேக அருட்பாக்களுஞ் சூட்டப் பட்டிருக்கின்றன.

திருஞானசம்பந்த சுவாமிக ளிங்கெழுந்தருளி யிருக்கும்போது, பனிக்காலம்வர, இந்நாட்டில் இயற்கையாகத் தோன்றும் நளிர்ச்சுரம் அடியார் குழாத்தினும் பிரவேசித்தமையுணர்ந்த பிள்ளையார் தேவர்களது இடுக்கணைக் களையும்பொருட்டு நஞ்சமுண்டு அடையாளங் காட்டியருளிய திருநீலகண்டத்தின்மீது ஆணையிட்டு "அவ்வினைக்கிவ்வினை" எனும் பதிக மருளிச்செய்ய, அந்நளிர்ச்சுரம் அடியார்குழாத்தைமாத்திரமன்றி, இந்நாட்டையேவிட்டகலும்படி யநுக்கிரகம் பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

—இதற்கு வடக்கு ௰௪ - மைலில்,

௫. * திருநணா.—(பவாநிக்கூடல், பவாநி.)

(சங்கமேச்சுரர், வேதாம்பிகையம்மை, காவிரிநதி, பவாநிநதி, அமிர்தசரசு ஆகிய திருவேணி சங்கமதீர்த்தம், சூரியதீர்த்தம், காயத்திரி, சாவித்திரிதீர்த்தமுதலியன, இலந்தைவிருக்ஷம்.)

பராசரரிஷி, குபேரன், மாலுதானரிஷி, முதலியோர் பூசித்த தலம். விஸ்வாமித்திரர் பூசித்துப் பிரமரிஷியான தலம். தருமசன்ம

னென்னும் பிராமணப்பிள்ளை, மாலுதானரிஷி கோபத்தாற்கல்லாகும் படிபெற்ற சாபந்தீர்த்தருளிய தலம்.

தந்துவர்த்தனச்சோழன், இலந்தைக் கனியாற் புத்திரப் பேற டைந்த தலம்.

பிங்கலை என்னும் வேசி, தினம் நூறுபொன் தருவோரையன்றி மருவாமையுணர்ந்த வணிகன், அவளைச் சேரவிரும்பிக்குறித்தபொன் னகப்படாமையால், மற்றொரு சனனத்திலேனும் அம்மாதை மனை வியாக அடைவிக்கவேண்டுமெனச்சிந்தித்து, காயத்திரி மடுவில்வீழ்ந் திறப்ப, அதனையுணர்ந்த அம்மாதும் மற்றொரு சனனத்தில் அவ னுக்குத்தங்கையாகவேண்டுமென அம்மடுவில்வீழ்ந்துயிர்விட, நினை த்ததைத்தரும் அம்மடு விசேடத்தையுணர்த்தப் பிரமா, அவ்விரு வரையு மாடப்புறுவாக்கி, யவர்களெண்ண முற்றியபின்னர், முத்தி யடைவித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள் ளது. திருப்பதிகம்-க. —இதற்குத் தென்மேற்கு ௩௪-மைலில்,

## ௬. * திருமுருகன்பூண்டி.

(முருகநாதேச்சுரர், முயங்குபூண்முலையம்மை, மாதவிவனேசர், மங்களநாயகியம்மை, முருகதீர்த்தம், மாமகதீர்த்தமுதலியன மாதவிவனம்.)

முருகப்பிரான் பூசித்த தலம். மாலாதரனென்னும், ஓர்வேடன் மாதவிமரத்திற் றனக்காகத் தூக்கியமாலையை, அதன் கீழிருந்த சிவ பெருமான் தமக்கணிந்ததாகக்கொண்டு அநுக்கிரகஞ் செய்தருளிய தலம். மாகவிதனென்னும்பாண்டியராசன்புத்திரப்பேறடைந்ததலம். பன்னிருவருடத்துக் கொருக்கால மாமகதீர்த்தத்தில்மாமகம்பொங்கு கின்றது. இக்காலத்துங் கண்காட்சியாகக் காணப்படும் தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள், சேரமான் பெருமாணயனாரிடத்துப் பெற்றதிரவியங்களை இத்தலத்தின்வழியாய்க்கொண்டுசெல்லுகையிற் சிவபெருமான், பூதர்களை வேடர்வடிவாய் விடுத்துப் பறித்தருளிய பின், சுந்தரமூர்த்திசுவாமிகளால் "கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர் விரவலாமைசொல்லி" என்று பதிகமோதித் துதிக்கப் பின்னர்க் கொடுத்தருளிய தலம். அத்திருப்பதிகம்-க.

—இதற்கு வடமேற்கு ௪-மைலில்,

## எ. * திருப்புக்கொளியூர்அவிநாசி—(அவிநாசி)

(அவிநாசீச்சுரர், பெருங்கருணையம்மை, அகத்தியதீர்த்தம், சிவகங் கைத்தீர்த்தம், நள்ளாறுதீர்த்த முதலியன, பாதிரிவிருக்ஷம்.)

இது தெக்ஷணகாசியெனவும்வழங்கும். உமாமஹேஸ்வரி, பிரமா, அகத்தியரிஷி, தேவரம்பை முதலியோர் பூசித்த தலம். ஓர் ஊழி காலத்து பிரமாமுதலியோர்புக்கு ஐக்கியமான தலமாதலால், இதற் குப் புக்கொளியூர் எனத் திருநாமஞ்சூட்டப்பெற்றது. அயிராவதம் காட்டானையோடு திரிந்தமைகொண்டு தேவேந்திரனுற் காட்டானை

யாகவென்று, கூறியசாபநீக்கி யருளிய தலம். தாடகை தவஞ்செய்து மாரீசனைப்பெற்ற தலம். நாககன்னிகை தவஞ்செய்து சராசன்மனென்னுமரசனை மணந்த தலம், விநாசமில்லாதது-அவிநாசி.

வியாசனென்னுமோர்வேடுவன் தவஞ்செய்து மகப்பேறும் மலரடியும்பெற்ற தலம். சங்குகன்னனென்னும் வேடன் மிக்க கொலைபாதகனுயிருந்தும், சிவபெருமான்பாதச்சிலம்பைக்கவரும்பொருட்டு, ஏகாக்கிரசித்தனுய்த் திருப்பாதம் நோக்கியிருந்த புண்ணியவசத்தாற் கயிலையைச்சேர்ந்த தலம். ஓர் காகம் பலியைக்கவர்ந்து செல்லுழி, சிந்திய ஓர் அவிழ், குருடன் பலிப்பாத்திரத்திற் புக்கியபின், அவனுண்ட புண்ணியவசத்தால் அக்காகத்தைக் கதியடைவித்த தலம். எஞ்ஞகுத்தனென்னும் உலுத்தவணிகன் திருநாளிற் கடைவைத்த புண்ணியத்தாற்கதிநல்கியதலம். தருமசேனனென்னுமரசன் பூசித்துப்பேறடைந்த தலம்.

சுந்தரமூர்த்தி சுவாமிக ளித்தலத்திற் கெழுந்தருளியபொழுது, மறையோர்தெருவில் இருமனையில் ஒன்றில் மங்கலவொலியும், ஒன்றில் அழுகையொலியும் உடனெழுதல் நோக்கி வினவியருள, அழுகையொலி நிகழ்ந்தமனையோர் அவ்வழுகையை யொளித்து வணங்கி முகமலர்ச்சியுட னுபசரித்தகாலையில், நாயனர், அவர்களழுதலானது இரண்டுவருஷத்திற்கு முன்பு குளத்தில் விளையாடிய அவர்கள் பிள்ளையை முதலை வெளவியுண்டதனுல் இறந்து போகவும், அதேவயதுடன், அவ்விடத்தில், தப்பிய எதிர்மனைச்சிறுவன் பிழைத்து இப்போதுஉபவீதந்தரிக்கவும் நேர்ந்ததினுல் உண்டாயதென்றுணர்ந்து, அச்சிறுவனையுண்ட முதலையிருந்தகுளக்கரைக்குச் சென்று, அப்பிள்ளையின் தாய்தந்தையர் வருத்தம் நீங்கவும், தன்நாமத்தை நிலைநிறுத்தவும், அடிமைத்திறத்தை வெளிப்படுத்தவும், சிவபெருமான் அடியவர்வேண்டுவனவற்றை யளிக்கச் சித்தமாகக் காத்திருக்கிறு ரென்பதை யறிவிக்கவும், தமிழ்ப்பாடலின் மகிமையைத்தோற்றுவிக்கவும், "புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே,கரைக்கான்முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்று பதிகமோதி, உலர்ந்திருந்த அக்குளம்நிரம்ப நீர்பெருகச்செய்து, உடனே முதலைவயிற்றிற் சென்றவயதுகளும் நிறைந்த அச்சிறுவனைக் காலன்அமைப்ப, அம்முதலைகரைக்குவந்துபிள்ளையை உயிரும்வயதுங்குறைவுருது உமிழ, பின் அப்பிள்ளையும் அதின்தாதை, தாயர்களும் மகிழ்ந்து வணங்க, அவிநாசியப்பரைத்தரிசித்து அப்பிள்ளைக்கும் உபநயனமுடித் தருளியதலம். இப்போதும் அக்குளக்கரையில்மேல் கண்டதிருவிளையாடற் போலநடக்கும்படியாகியகுறிப்புகளுடன் ஆலயமொன்றிருக்கின்றது. சுந்தரமூர்த்திசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது, திருப்பதிகம்-க.

அ. ¶ திருப்பேரூர்.—(மேலைச் சிதம்பரம், பேரூர்.)
(பட்டீச்சுரர், பச்சைநாயகியம்மை, காஞ்சிநதி, சிங்கதீர்த்தம், பிரமதீர்த்தமுதலியன, அரசு, பிறவாப்புளி, இறவாப்பனை விருக்ஷங்கள்.)

நாரதர், காலவர், காமதேனு, முசுகுந்தன், இந்திரன், வேதவியாசர், விசுவாமித்திரர், இயமன், கௌரியம்மை, முதலாயினோர் பூசித்த தலம்.

பிரமா விஷ்ணுக்களே, பட்டிமுனி, கோமுனியாகவந்து பூசிக்க, அவர்பொருட்டு அரச அம்பலத்திலே இரசிதமன்றத்தில் பங்குனியுத்திரத்தன்று ஆநந்தநிருத்தஞ்செய்தருளியதலம்.

காமதேனுப் பட்டியிட்டுப் பூசித்தமையால் பட்டீச்சுரரென்ற காரணப்பெயரோடு திருமேனியிற் கொம்புகுழம்புகளின் வடு வடையாளம் பூண்டருளிய தலம்.

சுமதியென்னுந்தூர்த்தவேதியனிறப்ப, அவனுடலை நரியீர்த்துக் காஞ்சிநதியில் வீழ்த்தியபலத்தால் நற்கதிபெற்ற தலம்

விதூமனென்னுங் கந்தருவன், சுகுமாரி என்னும் பார்ப்பனப் பெண்ணின் சாபத்தாற் குரங்காய்த் திரிதருகையிற் சிவராத்திரியில் வில்மவரத்திலேறிக்கிளையை அசைப்ப, உதிர்ந்தவில்வம் அதன் கீழிருந்த சிவக்குறியிற்பட்ட புண்ணியத்தால், முசுகுந்தச் சக்கரவர்த்தியாய் உலகாண்டு தேவேந்திரனோடு வீற்றிருக்கையில், அரம்பையென்பாள் செய்த இகழ்ச்சிநகையால் வருந்தியவரசன் தனக்குள்ள குரங்குமுகம்நீங்கி, மனிதர்முகம் பெற்ற தலம். இந்திரன், பிருகு புத்திரியை வலிமைசெய்த காரணத்தால், அரக்கனாகும்படி யடைந்த சாபத்தைத் தீர்த்தருளிய தலம்.

திரிலோகசோழமகாராஜன் வேட்டையாடுகையில் பற்றிய பிரமஹத்தியைத் தீர்த்தருளிய தலம்.

பார்ப்பதியம்மையின் சேடியர்களாகிய கன்னிகையரெழுவர், கந்தருவனைக் கண்டு மோகித்த காரணத்தால் சாரங்னென்னும்வேதியன் மக்களாய்ப் பிறந்த சாபத்தை விமோசனஞ் செய்தருளிய தலம்.

காசியில் விஷ்ணுவே பரமெனக் கூறித் தூக்கிய வியாசரது கையு நாவுமெழாமற் போனதை வளங்குவித்தருளியதலம். அங்கிரனென்னுங் கொலைத்தொழில் வேடுவன் கதிபெற்றதலம்.

தான்மிகபாண்டியனது மனைவியாகிய வித்துருவதையென்பவளைக் கொங்கணதேயத்துப்பார்ப்பான், மகராட்டிரதேயத்திற் றுலாபாரதானமேற்ற பாவத்தாற் பிரமராக்ஷசனாயிருந்து பிடித்துக்கொள்ள, அது பிரமகுண்டமென்னுந் திருநீற்று மேட்டில்விளையும் விபூதியைப் பூசியும், காஞ்சிநதியில் மூழ்கியும் தீரப்பெற்ற தலம். அவ் விபூதிதான் ஆலயத்திற் பிரசாதிக்கப்படுவது. குலசேகரன் குட்டநோய் தீர்த்தருளிய தலம்.

சுந்தரமூர்த்திசுவாமிக ளிங்கெழுந்தருளியபொழுது, சிவபிரான்

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

இத்தலமானது அடியவர்க்கு மோக்ஷமேயன்றிக் காமியங்கொடுத்தல் இயலாத தலமாதலால் பொன்றருதல் கூடாதென்று ஒழிந்து, தாமு மம்மையும் பள்ளனும், பள்ளியுமாய் நாற்றுநடுவதை, நந்தியெம்பெரு மான் குறிப்பாலுணர்த்த, உணர்ந்தநாயனார் சழனியிற்சென்றுபாட, அவருக்கு ஆநந்தநிருத்ததரிசனங் கட்டளை யிட்டருளி, அவர் விரும் பியபொன்னையுஞ் சேரமான்பெருமாணுயனாற் கொடுப்பித்தருளிய தலம். சுந்தரமூர்த்தி நாயனார் தில்லையினிடத்துச்சென்று தரிசித்த பொழுது, இத்தலச்சேவையை யங்குங்காட்டியருள, அதனைப்பதிகத் தாற் கூறியதுணர்ந்த தில்லைமூவாயிரவர்வந்து பூசித்ததலம். இத னாலே இதனை மேலைச்சிதம்பரமென்று கூறப்படுகிறது. தனித்திருப் பதிகமில்லாதிருப்பினும், வைப்புத்தலமாகச் சுந்தரமூர்த் திசுவாமிகள் பாடல்பெற்றுள்ளது.

௯. ¶ திருவெள்ளியங்கிரி.—(வெள்ளிமலை)

(பிருதிவிலிங்கம், அப்புலிங்கம், தேய்வுலிங்கம், வாய்வுலிங்கம், ஆகாயலிங்கமெ ன்னும் பஞ்சமூர்த்திகள்; பார்ப்பதிதேவியார் காஞ்சிமாநதிதீர்த்தம்)

பேரூரின்கண் அரச அம்பலத்தில்பட்டிமுனி கோமுனிவர்காண ஆநந்த நிருத்தஞ் செய்தருளியபோது, உமாதேவியார் இவ்வரையின் கண்ணே சதாநந்த நிருத்தஞ்செய்து தரிசனங் கட்டளையிடும்படி வேண்டிக் கொண்டமையால், சிவபெருமா னதற்கிசைந்து உமையம் மைக்காகச் சதாநந்த நிருத்ததரிசனங் கட்டளையிட்டருளிய தலம்.

பஞ்சலிங்கங்கள்-பிருதிவிமுதலிய பஞ்சபூதங்கள், அவ்வப்பூதங் களின் குணங்களோடு விளங்குவது பிரத்தியட்சமாயுள்ளதலம். இக் காலத்துந் தேவர்கள் பூசிக்குமோசை நம்மனோர்செவிக்கும் கேட்குந் தலம் அனேகசித்த மூலிகைகளும் சித்தர்களும் விளங்கிக்கொண்டி ருக்குந் தலம்.

௰. ¶ வெண்ணெய்மலை.—(முருகப்பிரானது குன்றுதோறாடல்களிலொன்று.)

(வெண்ணெய்மலைநாதர் தேனுதீர்த்தம்.)

காமதேனுவானது கெற்பபுரியாகியகருவூரில், உலகசிருட்டியை நடத்தும்பொழுது, சிருட்டிக்கப்படும் ஆன்மகோடிகளுக்கு உணவளி ச்சும்பொருட்டு, வெண்ணெயைத் திரட்டிவைத்த இடமாதலால், இத ற்கு வெண்ணெய்மலையெனப்படுகின்றது. காமதேனு, பிரமா முத லியோர் பூசித்ததலம். இம்மலையானது வெண்ணெய்போல் வெள்ளிய நிறத்தையுடைத்தா யிருத்தலுமன்றி, எப்படிப்பட்ட வெப்பகாலத் தினுங் குளிர்ச்சியைத்தராநிற்பது பிரத்தியக்ஷம்.

௰௧. ¶ சென்னிமலை.—(முருகப்பிரானது குன்றுதோறாடல்களிலொன்று.)

(சென்னிமலைவடிவேலர், தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை.)

அகத்திய மகாரிஷி முதலியோர் பூசித்த தலம். அகத்தியருக்கு

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

ஞானோபதேசஞ் செய்தருளிய தலம். இத்தல மற்றைய சுப்பிரமணியத் தலங்களுக்கெல்லாஞ் சென்னிபோற் சிறந்த தலமாகையால் அப்பெயர்கொண்டது.

௰௨. ¶ சிவமலை.—(இதுவும் குன்றுதோறாடல்களிலொன்று.)

(சிவமலையாண்டவர், சிவலிங்கச் சொரூபமாகிய தலம்.)

பாலசுப்பிரமணியக் கடவுள் சிவபெருமானுக்கு உபதேச குருவாயெழுந்தருளியிருக்குந் தலம். இக்கலிகாலத்திலும் அநேக அற்புதங்களைக் காட்டி பின்னடப்பவைகளை முன்னறிவிக்குந் தலம்.

௰௩. ¶ மருதமலை.—(முருகப்பிரானது குன்றுதோறாடல்களிலொன்று.)

(மருதாசலபதி, பராசத்தி, மருததீர்த்தம், கந்ததீர்த்தம், அனுமதீர்த்தம், சரவணப்பொய்கை, கன்னிதீர்த்தம், வேலின் சொரூபமாகிய மருதவிருக்ஷம்.)

தேவர்கள், சூரனாதியர்களிடுக்கணுக்கஞ்சிப் புகலடைந்து பூசித்து, அவர்களைச் சயித்துத் தத்தம் பதவிகளை யடைந்தருளியதலம். குசத்துவசனென்னும் அரசன் பூசித்துப் புத்திரப் பேறு பெற்றருளிய தலம். பாம்பாட்டிச் சித்தர் கந்ததீர்த்தத்தருகிலிருந்து தவஞ்செய்து சித்திபெற்ற தலம். இம்மலையடிவாரத்தில் தான்தோன்றி விநாயக ராலயமொன்றுள்ளது.

கொங்குநாடு முற்றிற்று.

---

ஆக கொங்குநாடு பதிகம்பெற்றதலம்-எ. வைப்புத்தலம்-௯. புராதனதலம்-௧. சுப்பிரமணியர்தலம்-௪. ஆகத்தலங்கள்-௧௩. அறுபத்துமூவர்களில் இந்நாட்டில் முத்தியடைந்தவர்கள் இருவர்.

---

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# மலைநாடு.

---

௧. * திருவஞ்சைக்களம்.

(அஞ்சைக்களத்தீச்சுரர், உமையம்மை, அலைவாய்த்தீர்த்தமுதலியன.)

பரசுராமன் தாயைக்கொன்ற பழிநீங்கும்பொருட்டுப்பூசித்துப் பேறுபெற்றதலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் இத்தலத்திலெழுந்தருளித் தரிசனஞ்செய்துகொண் டிருக்கும்பொழுது, "என்னையினிச்சேவடிக்கீழிருத்திடும்" என்று பதிகம்பாடச் சிவபெருமான் வெள்ளையானையை யநுக்கிரகித்தருள, அவ்வானையின்மீது ஆரோகணித்துக்கொண்டு தமது தோழராகிய சேரமான்பெருமாளுயனாரை மனதினினைத்து அவருட

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

ஞநேகங்கோடி சூரியப்பிரகாசம்போல ஒளிவீசவும், அவ்வொளியை வியாக்கிரபாதரிஷியின் புத்திரரும், திருப்பாற்கடலையுண்டவருமாகிய உபமன்னியமகாரிஷிமுதலிய அநேகமகாரிஷிகள் தொழவும், கயிலைக் கெழுந்தருளித் "தானெனைமுன்படைத்தான்,, என்னும் பதிக மோதிக்கொண்டு ஆடிமாதச் சுவாதிநாளிற்சென்று முன்போலவே ஆலாலசுந்தரரா யமர்ந்தருளியதலம்

(சேரமான்பெருமாணுயனர்) மகோதை என்னுங் கொடுங்கோளூரிலே, மன்னவர் மரபிலே, சித்திரைமாத இரேவதிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிப்பெருமாக்கோதையாரெனும்பெயர்பூண்டு அகத்துறவுகொண்டு இத்தலத்திற் பணிவிடை செய்திருக்குங்கால், மந்திரிகள் வேண்டுகோளாற்சிவபெருமானுத்தரப்படி முடிசூடி, யாவரும், யாதும், கழறினவற்றை யறிதலாற் "கழறிற்றறிவார்,, என்னும்பெயர் பூண்டுயானையின்மீது பவனிவரும்போது, சாரமண் சுமந்துசெல்லும் வண்ணானதுமேனி வெளுத்திருந்தலைச் சிவசின்னந் தரித்ததாகக் கொண்டுவணங்கியும், சிவனடியார்களைச் சிவமாகப்பாவித்து அரசு செலுத்தியும் வருங்கால், மதுரையில் இசைவல்லோனாகிய பாணப் பத்திரன்பொருட்டுச் சிவபெருமான் "மதிமலிபுரிசை" என்னும் திருமுகங்கட்டளை யிட்டருளப்பெற்று நிதிக்குவைகொடுத்துஉச்சரித் தனுப்பியநாயனார், தினந்தோறும் சிவபூசையந்தத்தில் திருநடனச் சிலம்பொலிகேட்கும் நியமத்தினராய்ப் பூசித்துவருங்கால், ஓர் நாள் அச்சிலம் பொலிதாழ்க்க, அதனாற்சுந்தரமூர்த்திசுவாமிகளையுணர்ந்து அவரோடு தோழமை பூண்டு, அவரிடத் தன்புள்ளவராயொழுகுகையில், அவர்வெள்ளையானையின்மீது கயிலைக்கெழுந்தருளுவதை அவர் நினைப்பாலுணர்ந்து, அங்குள்ள ஓர் குதிரையிலேறி அதன்செவியில் ஸ்ரீபஞ்சாக்ஷர உபதேசஞ்செய்து, அதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளதுயானைக்குமுன் செல்லவிட்டுக்கயிலையடைந்து, தாஞ்செய்தஞான உலாவை அரங்கேற்றுவித்து,ஆடிமாதச்சுவாதிநாளிற்சிவகணநாதரா யமர்ந்தருளியதலம். இந்நாயனார் அவ்வுலாப்பிரபந்தமன்றியும், "பொன்வண்ணத்தந்தாதி," "திருவாரூர் மும்மணிக்கோவை," "திருமறைக்காட்டந்தாதி" முதலிய பிரபந்தங்களருளிச்செய்தனர். இந்நாயனாரது பரிசனங்கள் பலர் இந்நாயனாரும், சுந்தரமூர்த்திசுவாமிகளும், கயிலைக்கெழுந்தருளுந்தலைக் கண்ணுக்கெட்டின மட்டிற் பார்த்துக் கொண்டிருந்து, பின்னர்த் தத்தம் சரீரத்தைவாளாற்றுணித்து வீர சரீரங்கொண்டு அவ்வுபநாயன்மாரையும் அடுத்துச் சேவித்துக்கயிலையிற்சென்று முத்தியடைந்தனர். சுந்தரமூர்த்திசுவாமிகளால் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧.

உ. ¶ சுவிந்திரம்.

(தாணுமாலயப்பெருமான், உமாதேவியம்மை, செய்யாறுதீர்த்தம், திருக்குளதீர்த்தம், அஸ்வத்விருக்ஷம்.)

பிரமதேவர் தாம் கோவிலில்லாதொழிந்த சாபநீக்கல் பொருட்டுப்பூசிக்கச் சிவபெருமான்பிரசன்னரா யித்தலத்துத் தம்சமீபத்திற் கோவில் கொண்டெழுந்தருளி யிருக்க வரமருளியதலம். அன்றியும், பிரமாவும் சிவபெருமானுஞ் சேர்ந்திருத்தலை யுணர்ந்த விஷ்ணுமூர்த்தியானவர், தாமுமுடனுறைதல்வேண்டுமென்றுபூசித்து, அவ்வாறே இருக்கப்பெற்றருளிய தலம். இதனாலே இத்தலநாயகருக்கு சிவன் என்று பொருள்படுகிறதாணு, விஷ்ணுவென்று பொருள்படுகிறமால், பிரமாவென்றுபொருள்படுகிறஅயன், எனக்காரணப்பெயருளதாயின.

ங. ¶ கன்னியாகுமரி.

(குமரியம்மை, அலைவாய்தீர்த்தம், சங்கிலிதீர்த்தம்.)

பரசுராமன் பிதிர்வாக்கிய பரிபாலனார்த்தம், தாயைக்கொன்ற பழிநீங்கும்பொருட்டு, சிவபெருமானைப்பூசித்து பரசு ஆயுதம்பெற்று அதனால் சமுத்திரத்தில் திடருண்டாக்கி அத்திடரைப் பரசுராம க்ஷேத்திரமென்கிற மலைநாடாக உண்டுசெய்தபொழுது, இவ்விடத்துச் சிவசத்தியாகிய இவ்வம்மையை ஸ்தாபித்துப் பூசித்தனன். இத்தேவியார் கன்னிகையாயிருந்து மணவிருப்பத்தினால் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்தபொழுது, சிவபெருமான் பிரசன்னராகத் திருமணத்தைக் கேளாதொழிந்த தப்பிதத்திற்காக என்றுங் கன்னியாகவே யிருக்கும்படியாகவும், திருக்கலியாணத்திற்காகச் சேர்த்துவைத்தபண்டங்கள் யாவுங் கல்லாய்ப் போகும்படியாகவும் சபிக்க, அக்குமரிதாழ்ந்து வேண்டியபொழுது கன்னியாகுமரியாக விருந்து சீவர்களுக் கநுக்கிரகஞ் செய்யும்படி வரமருளியதலம். இதனாலே இத்தலத்திற்குங் கன்னியாகுமரி எனப்பேராயிற்று. அரிசி மஞ்சள் முதலியபண்டங்கள் கல்லாயிருத்தல் பிரத்தியக்ஷம்.

மலைநாடு முற்றிற்று.

---

இந்நாட்டிற் பதிகம் பெற்றதலம்-க. புராதனதலம்-உ. ஆக-ங முத்தியடைந்த நாயன்மார்க ளிருவர்.

---

¶ இக்குறி இட்டதலங்கள் பாடல் பெறாதவை.

உ

சிவசுப்பிரமணியர் துணை.

# துளுவநாடு.

## * திருக்கோகரணம்.

(மகாபலலிங்கநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, சிவகங்கைத்தீர்த்தமுதலியன.)

இராவணன் தவஞ்செய்து தமது இலங்கையழியாதிருக்கும்பொருட்டுத் தாபித்துப் பூசிக்கச் சிவலிங்கமொன்றுபெற்றுச் செல்வதையுணர்ந்த தேவர்கள், விநாயகமூர்த்தியிடத்துமுறையிட, அவர் பிரமசாரியவடிவத்துடன் இராவணன் முன்னே தோன்றி, அவனுக்கு சிறுநீர்சுரக்கும்படி செய்தருள, கீழே வைக்கவொண்ணாதென்று பெற்ற அச்சிவலிங்கத்தை யப்பிரமசாரிகையிற்கொடுத்து ஜலவிசர்ச்சனத்துக்குச்சென்ற இராவணன் வருமுன் சிவலிங்கத்தைக் கீழேவைத்துவிட, அவ்விலிங்கத்தை இராவண னிருபது கரங்களாலும் பற்றியிழுப்பவும்வாராது, பசுவின் காதுபோற் குழைந்தமைநோக்கி இராவணனால் மகாபலேஸ்வரரென்று பெயரிட்டுப் பூசித்து வணங்கிய தலம். பசுவின்காதுபோற் குழைந்த காரணத்தாற் கோகரணமென்றாயது. திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - உ.

## உ. ¶ நஞ்சுண்டகூடல்.

(நஞ்சுண்டேச்சுரர், தேவகிரியம்மை, கூடல்தீர்த்தம், வரடிபுளியவிருக்ஷம்.)

சிவபெருமான் நஞ்சையுண்டு தேவர்களை யமுத முண்ணும்படி செய்தருளியநிமித்தம்தேவர்கள் முதலாயினோர்பூசித்துப்பேறுபெற்ற தலம். மிருத்திகை அநேகரோகநீக்கு மருந்தா யிருக்கின்றது.

துளுவநாடு முற்றிற்று.

இந்நாட்டிற்பதிகம் பெற்ற தலம் - க. புராதனத்தலம் - க. ஆக - உ
ஆக நாடு - கூ - க்குப் பதிகம்பெற்ற தலம் - உளச.
புராதனத்தல முதலியன - ௱கூகூ. ஆக - சசரு.

---

உ

# முன்சுப்பிரமணியக்ஷேத்திரங்களாயிருந்த தலங்கள்.

---

க. திருப்பதி.— (வடநாடு) இது இப்போது வேங்கடேசப் பெருமானென்னும் விஷ்ணுமூர்த்தி நிவாசஞ்செய்யுந்தலமாயிற்று.

இதைச் சைவசமயிகள் ஸ்ரீசுப்பிரமணியசுவாமிகளுடையகுன்றுதோறாடல் களிலொன்றாகச் சொல்லுகின்றனர்.

அவர்கள் இது பாலசுப்பிரமணியக்ஷேத்திரமென்றும்;

---

¶ இக்குறி இட்ட தலம் பாடல் பெறவில்லை.

இந்தமூர்த்திக்கு எந்தவிஷ்ணுஸ்தலத்திலுமிராத வில்வார்ச்சனையும், சடைமுடியும், நாகாபரணமும் இருக்கின்றனவென்றும்;

நின்றதிருக்கோலங் கொண்டெழுந்தருளி யிருக்கும் இந்தமூர்த்திக்கு, இருபாதநடுவில் இவர் அர்ச்சிக்கும் சிவலிங்கமிருப்பதால், அது யாவருக்குந் தெரியாதிருக்கும்பொருட்டு இந்தமூர்த்தி கணுக்கால்மேல்வரையில் மறைபட்டிருக்கின்றன தென்றும்;

எந்தபெருமாளுக்கும் அமைத்திருக்கும் சங்கு சக்கரங்களிந்தமூலவருக்கில்லாதிருந்ததை யறிந்த உடையவர், எப்படியாவது இவருக்குச் சங்குசக்கரங்களை யமைத்து, இந்த க்ஷேத்திரத்தை விஷ்ணுஸ்தலமாக்கவேண்டுமென்னும் எண்ணங்கொண்டவராய், அவர்காலத்திலிருந்த சங்கராசாரியருடன் பலவாறாக சாஸ்திரவாதஞ்செய்தும் பயன்படாமையால், வேறுவிதமாகத் தன்கருத்தை நிறைவேற்றவிரும்பி, அத்தேசத்தரசன் சமுகத்தில் தானும் சங்கராசாரியரும் அவரவர் தெய்வத்துக்குரியசின்னங்களைச்செய்துகொண்டுவந்து சுவாமி சந்நிதியில் அர்த்தசாமமானபின்வைத்துக்குச்சுபோட்டு, கோயிலுக்குவெளியில்தங்கியிருந்து, மறுநாள்காலையில்கதவைத்திறந்துபார்க்கும்போது, சுவாமி எதைத்தரித்திருக்கின்றாரோ, அந்தத்தெய்வமாகவே நிச்சயிப்போமென்னும் ஒரு ஏற்பாட்டைத் தீர்மானித்துவந்து, அப்படியே சிவசின்னங்களையும், விஷ்ணு சின்னங்களையும் செய்து வைத்து கதவடைத்துவெளியில் வந்து தங்கியிருந்தபோது, நடுராத்திரியில் உடையவர் பாம்பு உருவம் எடுத்து ¶ உள்ளேபோக வேறுவழி யில்லாமையால் கோமுகத்துவார வழியாக கெற்ப குடிக்குள்ளே மோசடியாக நுழைந்து மூலவருக்குத் தான் செய்துவைத்திருந்த சங்கு சக்கரங்களைத் தரித்திருக்கும்போது, இச்சூதை யறிந்த சங்கராச்சாரியர் அந்த கோமுகத்துவாரத்தை யடைத்து, அரசனைவரவழைத்து, கதவைத் திறந்து, உள்ளே உடையவர் நின்றிருப்பதை அரசனுக்குக் காண்பித்தனர். உடையவர் பயந்துநடுநடுங்கி தலையிறக்கங் கொண்டு இருப்பதைப் பார்த்த சங்கராச்சாரியர் மனமிரங்கி, அவர் முகவாட்டத்தை மாற்றவும், அரசனால் அவருக்குக்கெடுதி நேரிடாதிருக்கவும், உள்ளங்கொண்டவராய் உடையவரைப்பார்த்து "உமதிஷ்டப்படியே சுவாமிக்குச் சங்கு சக்கரங்களே யிருக்கட்டும்" என உத்திரவளித்தனரென்றும்; அதனால் அதுமுதல் இப்போதும் சுவாமிக்குத் திரும

¶ உடையவர் சேஷாவதாரர் என்றும், வேண்டும்போது இவ்வுருவமெடுத்து இன்னும் அனேககாரியங்களைச் செய்திருக்கின்றனரென்றும் வைணவர் கிரந்தங்களில் சொல்லியிருக்கின்றது.

ஞ்சனமாகுந்தீர்த்தம் கோமுகவழியாய் வாராமல் இறைத்து ஊத்து கிறார்களென்றும் ;

பாதகண்டத்தில் எந்த காலத்திலும், எந்தத்தலத்திலு மிருக்கி ன்ற எந்தவிஷ்ணுமூர்த்திக்கும் (சிலை, சுதை, மரம், உலோகமுதலிய எந்தசம்பந்தமாயினும்) சங்கு சக்கரங்கள் இன்றி யமையாததாயிருந் து, திருவுருவத்தோடு அபேதமாய்செய்யப்பட்டிருக்க, இந்த ஒருதல த்தில்மாத்திரம் தொடுப்பாக எடுக்கவும், வைக்கவும், கூடுமான பின் னசம்பந்தத்தோடு சங்கு சக்கரங்கள் இருப்பதே இத்தலமும் மூலவ ரும் ஏற்பட்டகாலத்தில் விஷ்ணுஸ்தலமானதல்லவென்பதற்குச் சா க்ஷியென்றும் ; இந்த மலையிலிருக்கும் தீர்த்தம், எப்போதும் யாவரா லும் சுவாமி தீர்த்தமெனவழங்கிவருகின்றதென்றும், சுவாமி என்பது முருகக்கடவுளுக்கு இடுகுறிப்பெயரென்றும், இதற்குச் சுவாமி மலை யென்பதே சான்றென்றும் ;

வேங்கடசுப்பு என்று இப்போதும் மக்கட்குப்பெரியோர்கள் பெய ரிட்டுவருவதநுபவசித்தம். வேங்கடமென்னும் திருமலையில்வாழும் சுப்பராயர் என்பது அதன் கருத்தாம். வேங்கடமலைக்கும் சுப்பராய ருக்கும் சம்பந்தமில்லாமல் இப்பெயர் உண்டாவதற்குக்காரணமிரா தென்றும் ; இந்தச்சுப்பராயரை மாற்றவெண்ணிய வைணவத்தலை வர், முன்னில்லாத சங்கு சக்கரங்களைப்புதிதாய்க்கொண்டுவந்து சே ர்த்ததேயன்றி, அந்தச்சுப்பராயரது மூர்த்தத்தை எடுப்பித்து அப்பு றப்படுத்தியதில்லை. அதனால், இப்போதிருப்பவர் சங்கு சக்கரமேந்தி ய சுப்பராயரே யன்றி வேறில்லையென்றும் ; சங்கு சக்கரங்கள் பரம சிவனுடைய ஆயுதங்களென சநற்குமாரசங்கிதையிலும், மார்க்கண் டேயத்திலுஞ்சொல்லியிருப்பதால், அவை அவரது திருக்குமாரரது கரத்திலிருப்பதால் குற்றமில்லையென்றும் ; வைணவர்கள் விஷ்ணுமூ ர்த்தி யென்று சொன்மாத்திரமாய்க் கௌரவம்பாராட்டிக் கொள்ளி னும், அங்கிருந்து அடியார்களது அபீஷ்டங்களைப் பூர்த்திசெய்தரு ளும் பரமதயாளுவாயுள்ளவர் ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளென்பதே சத்தியமென்றும் ; குன்றுகளுக் கதிகாரியாயிருப்பவர் ஸ்ரீசுப்பிரம ணிய சுவாமியேயல்லது விஷ்ணுவல்லவென்றும் ;

சொல்லுவதுடன், ஸ்ரீசுப்பிரமணியசுவாமி பிரமதேவனைச்சிறை யிலிட்டு, இம்மலைக்கெழுந்தருளி, உலகசிருட்டிமுதலியவற்றைநடத்தி வந்தனரென ஸ்காந்தபுராணத்தில் சொல்லியிருக்கிறதென்றும் ;

ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகளுக் கடியாரான அருணகிரிநாதரால் இந்தத்தலம் பாடல்பெற்றிருக்கின்றதென்றுஞ் சொல்லுகின்றனர்.

## இதற்குவைணவர்கள் சொல்லுங்கோட்பாடு.

**வில்வார்ச்சனைக்குக் காரணம்:—** திருமாலுக்குத்துளசிதளம் எப்படிப் பிரீதியோ அப்படியே இலட்சுமிதேவிக்கு வில்வதளம்பிரீதி யென ஸ்ரீசூக்தத்திலும் புராணங்களிலும் சொல்லியிருப்பதாலும்; இங்கு மூலவர்வட்சஸ்தானத்துள் பிராட்டியார் வசித்திருக்கையால், திருவேங்கடமுடையானுக்கு வில்வார்ச்சனைநடக்கிறதென்றும் ;

**சடைதரித்திருப்பதற்குக்காரணம்:—** இருடிகள் உத்திரவுப்படி பிருகுமகாமுனிவர் திரிமூர்த்திகளின் குணநிசயங்களைச் சோதிக்கும்பொருட்டு வைகுந்தத்துக்குப்போய் திருமால்மார்பிலுதைக்க, அங்குவசித்திருந்த இலட்சுமிதேவியார் பிணங்கிக்கொண்டு கோதாவிரிதீரத்தில் கொல்லாபுரியி லெழுந்தருளியபோது * மறுபடியும் அந்தத்தேவியாரையடையும்நிமித்தம் மகாவிஷ்ணுசடைமுதலிய தவக்கோலங்கொண்டு இந்தத்தலத்தில்தவஞ்செய்து தேவர்களுக்குச் சேவைசாதித்த கோலத்தோடிருக்கின்றன ரென்றும் :

**நாகாபரணந் தரித்திருப்பதற்குக் காரணம்:—** நாராயணவனத்தில், ஆகாசராஜன் தன்குமாரத்தியாகிய பதுமவல்லித்தாயாரை வேங்கடேசப் பெருமானுக்குத் திருக்கலியாணஞ் செய்துகொடுத்தபோது அவன் சமர்ப்பித்த நாகாபரணங்களை யணிந்திருக்கின்றன ரென்றும் :

**சங்குசக்கரங்களில்லாதிருந்ததற்குக்காரணம்:—**

வேங்கடேசப்பெருமாள், தன்பக்தனுனதொண்டமான்சக்கரவர்த்திக்கு அவன்சத்துருக்களைச்செயிக்கத்தன்னுடையசங்கு சக்கரங்களைக்கொடுத்துவிட்டதாயும், சத்துருக்களைச்செயித்தபின்புமீளவும் அவ்வரசனந்த சங்கு சக்கரங்களைக்கொண்டுவந்துதர, வேங்கடேசப்பெருமாள் "கலியுகத்தில் என்பக்தன் எனக்கு சங்குசக்கரங்களைச் செய்துவந்து சமர்ப்பிக்கப்போகிறான், அவற்றைநான் அணிந்துகொள்ளுகிறேன், இவற்றை நீயே வைத்திருந் துன்சத்துருக்களைச்செயித்திரு" வென்று அநுக்கிரகித்தமையால் சங்கு சக்கரங்க ளில்லாதிருந்தனரென்றும், பிற்காலத்தில் உடையவர் நாளில் மேற்சொல்லிய ‡ இக்குறிப்புள்ள ஏற்பாட்டின்படி மறுநாள் காலையில் கோயில்கதவைத்திறக்க தெய்வீகமாய் மூலவர் சங்கு சக்கரங்களைத்தரித்திருந்ததால் விஷ்ணு ஸ்தலமாயினதென்றும் சொல்லுகின்றனர்.

---

* சிலகிரந்தங்களில் இலட்சுமிதேவியார்பிணங்கிபாதாளலோகத்தில்கபில மகாமுனி ஆச்சிரமத்தில் தங்கியிருந்ததாகச் சொல்லியிருக்கின்றது.

இவ்வரலாறாக விருப்பதாயிருக்க, கோயில் சிற்பசாஸ்திரத்தில் வல்லவர்களான சிற்பசாஸ்திரிகள் இந்தத்தலத்திலுள்ள கெற்பகுடியின் ஆயாதி அளவினால், இது விஷ்ணு கோயிலைச்சார்ந்ததல்லவென்றும், சுப்பிரமணியர் ஆலயத்தைச்சார்ந்த தல்லவென்றுஞ் சொல்லி சக்திகோயிலென ஸ்தாபிக்கின்றார்கள். அதற்குத் திஷ்டாந்திரமாக இப்போதும் இக்கோயிலின் மதிள்களின்மேல் நான்குபுறத்திலும் வைத்திருக்கும் உருவங்கள் சிங்கரூபமாகவே ஸ்தாபித்திருக்கின்றன.

---

௨. கள்ளழகர்கோயில்.— (பாண்டியநாடு). இது திருமாலிருஞ்சோலை யென்றும், சோலைமலையென்றுஞ் சொல்லப்படும்.

இந்தத்தலம் நக்கீரர், அருணகிரிநாதர்முதலிய அடியவர்களால் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகளுடைய ஆறுபடைவீடுகளி லொன்றாகப் பாடல் பெற்றிருக்கின்றது.

இந்தத்தலத்தில், ஒரேபீடத்தில் மூலவரும் அவருக்கிருபுறத்தில் இரண்டுதேவிமாரும், நின்றதிருக்கோலமாயெழுந்தருளி யிருக்கின்றனர். இந்தச்சேவை சுப்பிரமணியர் தலங்களிலன்றி சாதாரணமாக எந்தவிஷ்ணுக்ஷேத்திரத்திலுமில்லை.

இந்த ஆலயத்திலுள்ள ஸ்தம்பங்கள் அதிக உன்னதமாயும், ஒவ்வொன்றில் விசேஷவிசித்திரவேலைகளும், உருவங்களும், சின்னங்களும் முன்னமே அமையப்பெற்றிருந்து, இப்போது ஸ்தம்பங்களில் தளவரிசைமுதல் மேல்மட்டவரையிலுள்ள ஒரு உருவமாவது இன்னதென நிச்சயிக்கக்கூடாமலிருக்கும்படி யாதுகாரணத்தாலோ உளியினால் செதுக்கப்பட்டிருக்கின்றது. இந்தப்பிரதேசங்களில் இசாமகஸ்தரான துருக்கர், கிருஸ்தவர்முதலியோர் விசேஷ சஞ்சாரஞ்செய்திராமையால் அவர்களால் இக்குறும்புத்தனங்கள்நேரிட்டிருக்குமென நம்ப இடமில்லை.

இத்தலத்துக்குக் க்ஷேத்ரகாரர் வீரவாகுதேவராகச் சொல்லுகின்றனர். வீரவாகுதேவர் முருகவேளது படைத்தலைவராகி, அவராலயத்தைக் காப்பவர்.

இந்தக்கோயில் முகத்துவாரத்தில் பதினெட்டாம்படி கறுப்பண்ண சுவாமிகோயிலிருக்கின்றது. விஷ்ணுகோயிலுக்கும், கறுப்பண்ண சுவாமிகோயிலுக்கும் எந்தநாட்டிலும் எந்தச்சமயங்களிலும் சம்பந்தமே யில்லை.

திருப்பதியிலும், திருமாலிருஞ் சோலையிலும் மூர்த்திகள் விசேடமாகப்பேதப்பட்டிருப்பதால் இவ்விரண்டும் விசேடதலங்களாயினும் குளிர்காய்ச்சலுள்ள பிரதேசங்களாயின வென உலகத்தவர் சொல்லுகின்றனர்.

சிவதலமான்மியச் சுருக்கம் முற்றிற்று.

---

## பரமசிவம்.

சங்கரன ரன்மூர்த்தி வாமதே வன்வரன்
சம்புகா மாரி சூலி
சடைமுடியன் முக்கண்ணன் பாண்டரங் கன்மூர்த்தி
சதாசிவன் நீல கண்டன்
மங்கைபா கன்சுடலை யாடிபசு பதிபவன்
மழுவாளி கொன்றை சூடி
மாலயற் கரியனு லமர்கடவு ளீச்சுரன்
மானிட மேந்தி நந்தி
கங்கைவே ணியன்யோகி நீறணிந் தோனம்பன்
காலகா லன்க பாலி
கைலையா னழலாடி தந்தியுரி யோன்தாணு
கங்காளன் பூத நாதன்
திங்களணி வான்பிறப் பிலிபித்தன் பிஞ்ஞகன்
திரிபுராந் தகன்கி ரீசன்
சிவனந்த காரிவிடை யூர்திபெரு மானக்கன்
சேவடியைப் போற்றி யுய்வாம்.

## சுப்பிரமணியர்.

அரிமருகன் வாகுலே யன்வள்ளி மணவாளன்
அரன்மகன் தெய்வ யானைக்
கன்பனறு மீன்காத லன்தாரு காரிவேள்
அறுமுகன் மஞ்ஞை யூர்தி
கரிமுகற் கிளவல்கலை யுணர்புலவன் வேலிறைவன்
காங்கேயன் குன்றெறிந்தோன்
கார்த்திகே யன்குகன் தேவசே னுபதி
கந்தனு சான்க டம்பன்
சரவணப வன்சுப்ர மணியன்சு ரேசன்சேய்
தாருகற் செற்றோன் சிவ
சங்கரன் தேசிகன் சூர்ப்பகைவன் பாவகி
சண்முகன் சிலம்பன் செட்டி
முருகுசே வற்கொடியன் குழகன்சேந் தன்குமரன்
முன்னான்கு தோளன் செவ்வேள்
முக்கண்ணி மைந்தன்வி சாகன்மலை வேந்தனடி
முழுமனது டன்து திப்பாம்.

## வாழி.

### எண்சீர்க்கழிநெடில்.

வாழிமும் மூர்த்திதே வேந்திர னாதி
வானவர் சித்தர்முனி யிருடிமா தவரும்
வாழிமறை யாகமபு ராணவிதி காசம்
வளர்சாத் திரங்கலைக்கி யானமெட் டெட்டும்
வாழிநால் வருணத்தர் நாலாச்ர மத்தர்
வகைபெறுஞ் சிவநேச ரவரைவழி பட்டோர்
வாழிசிவ தலமான்மி யச்சுருக் கத்தை
வாசிப்பர் கேட்போரு மெந்நாளும் வாழி.

திருச்சிற்றம்பலம்.